# தமிழ்ப் புதினங்களில் இந்திய விடுதலைப் போராட்டம்

அழகப்பா பல்கலைக்கழக முனைவர் (பி.எச்.டி) பட்டத்திற்கான
பகுதிநிறைவாக அளிக்கப்பெறும் ஆய்வேடு


ஆய்வாளர்

திருமதி. அ.மீனாட்சி

(பதிவு எண்.1377)

நெறியாளர்

முனைவர். சே.செந்தமிழ்ப்பாவை

இணைப்பேராசிரியர்






தமிழ்த்துறை

அழகப்பா பல்கலைக்கழகம்

(தேசியத்தர நிர்ணயக் குழுவின் மறுதர மதிப்பீட்டில் ‘ஏ’ தகுதி பெற்றது)

காரைக்குடி - 630003

தமிழ்நாடு - இந்தியா


சனவரி- 2014

அ.மீனாட்சி எம்.ஏ., எம்.எட்., எம்.ஃ.பில்.,
முனைவர் பட்ட ஆய்வாளர்,(பகுதி நேரம்)
தமிழ்த்துறை,
அழகப்பா பல்கலைக்கழகம்,
காரைக்குடி – 630003

நாள்:

## ஆய்வாளர் உறுதிமொழி

"தமிழ்ப் புதினங்களில் இந்திய விடுதலைப் போராட்டம்" என்னும் தலைப்பில் முனைவர் பட்டத்திற்காக எழுதப் பெற்ற இவ்வாய்வேடு எனது சொந்த முயற்சியால் உருவானது என்றும், இதற்கு முன்வேறு எந்த ஆராய்ச்சிப் பட்டத்திற்கும் இவ்வாய்வேடு அளிக்கப்பெறவில்லை என்றும் உறுதியளிக்கிறேன்.

(அ.மீனாட்சி)

ஆய்வாளர்

உறுதிக்கையொப்பம்

முனைவர் சே.செந்தமிழ்ப்பாவை எம்.ஏ., எம்.ஃ.பில்., பி.எட்., பி.எச்.டி.,
இணைப் பேராசிரியர்,
தமிழ்த்துறை,
அழகப்பாபல்கலைக்கழகம்,
காரைக்குடி – 630003

முனைவர் சே.செந்தமிழ்ப்பாவை எம்.ஏ., எம்.ஃ.பில்., பி.எட்., பி.எச்.டி.,
இணைப் பேராசிரியர்,
தமிழ்த்துறை,
அழகப்பாபல்கலைக்கழகம்,
காரைக்குடி – 630003

நாள்:

## நெறியாளர் சான்றிதழ்

'தமிழ்ப்புதினங்களில் இந்திய விடுதலைப் போராட்டம்' என்னும் தலைப்பில் அ.மீனாட்சி அவர்கள் முனைவர் பட்டத்திற்காகச் செய்த இந்த ஆய்வு அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ்த்துறையில் அவர் ஆய்வுசெய்த காலத்தில் தன்னியலாகச் செய்யப் பெற்றது என்றும், இந்த ஆய்விற்காக வேறு எந்தப்பட்டமும் ஆய்வாளருக்கு வழங்கப்பெறவில்லை என்றும் சான்றளிக்கிறேன்.

(சே.செந்தமிழ்ப்பாவை)

நெறியாளர்

# நன்றியுரை

தமிழ்ப் புதினங்களில் இந்திய விடுதலைப் போராட்டம் என்னும் தலைப்பில் ஆய்வு மேற்கொள்ள அனுமதியளித்த அழகப்பா பல்கலைக்கழகத்துணைவேந்தர், பதிவாளர், தமிழ்த்துறைத் தலைவர் ஆகியோருக்கு எனது நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இவ்வாய்வேடு செம்மையாக அமைவதற்குத் தன்னலம் பாராது தாயுள்ளத்துடன் என்னை நெறிப்படுத்தி, எப்பொழுது சென்றாலும் இன்முகத்துடன் அறிவுரைகள் கூறிப் பல்லாற்றானும் நல்லுதவிகள் புரிந்த எனது ஆய்வு நெறியாளர் முனைவர் சே.செந்தமிழ்ப்பாவை அவர்களுக்கும் அவரது கணவர் திரு.இராமநாதன் மற்றும் அவர் குடும்பத்தினருக்கும் என் உள்ளங்கனிந்த நன்றியினை உரித்தாக்குகிறேன்.

ஆய்விற்கு வேண்டிய உதவிகள் நல்கிய தமிழ்த்துறைப் போரசிரியர்கள் அனைவருக்கும் என் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

ஆய்வுப்பணி மேற்கொள்ள நாளும் ஊக்கப்படுத்திய என்னுடைய தந்தை,எனது மகன், மருமகள், தங்கை பிரபா அவர் குடும்பத்தினர் ஆகியோருக்கும் மற்றும் என் குடும்பத்தார் அனைவருக்கும் நனி நன்றியுடையேன். இவ்வாய்வேடு செம்மையாக வெளிவர உதவிய அனைத்து நல்ல உள்ளங்களுக்கும் எனது நன்றி என்றென்றும் உரியது.

இவ்வாய்வேட்டினைச் செம்மையாக அச்சிட்டுத்தந்த யூனிவர்சல் கணினி நிறுவனத்திற்கும், நூற்கட்டுச் செய்து கொடுத்த தாய் அச்சகத்திற்கும் எனது நன்றி உரியதாகும்.

# சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| நூ | – | நூற்பா |
| ப | – | பக்கம் |
| பக் | – | பக்கங்கள் |
| மு.ப | – | முதற்பதிப்பு |
| மேலது | – | மேலே குறிப்பிடப்பட்டது |
| **ibid** | **-** | **In the same source (Previously cited work)** |
| **PP** | **-** | **Pages** |

# பொருளடக்கம்

# முன்னுரை

மனித உறவுகள், எண்ணங்கள், செயல்கள் ஆகியவற்றை விளக்கிக் காட்டும் வகையில் உரைநடையில் அமைந்த நீண்ட கதை புதினம் என்று அழைக்கப் பெறுகிறது. 19-ஆம் நூற்றாண்டில் தமிழகத்தில் ஏற்பட்ட சமுதாயச்சூழல் புதினம் தோன்றுவதற்கு அடித்தளமிட்டது. தமிழின் முதற் புதினமாகிய பிரதாப முதலியார் சரித்திரம் தொடங்கிப் பல்வேறு புதினங்கள் காலந்தோறும் தோன்றத் தலைப்பட்டன. அங்ஙனம் தோன்றியபுதினங்களும் அவ்வவ் காலக்கட்டத்தைப் பிரதிபலிக்கும் வகையில் வெளிவரத் தொடங்கின. இங்ஙனம் காலந்தோறும் தோன்றிய புதினங்கள் பல்வேறு நோக்கில் தனித்த நிலையிலும் ஏதேனும் அணுகுமுறைகளைப் பின்பற்றியும் ஆராயப் பெற்றுள்ளன. எனவே தமிழ்ப் புதினங்களில் இடம் பெற்றுள்ள இந்திய விடுதலைப் போராட்டம் பற்றி ஆய்வது ஆய்வுலகிற்குப்பயன் நல்குவதாகும்.

## ஆய்வுத்தலைப்பு

தமிழ்ப் புதினங்களில் இடம்பெற்றுள்ள இந்திய விடுதலைப் போராட்டம் குறித்த செய்திகளை ஆராயும் நிலையில் ‘‘தமிழ்ப் புதினங்களில் இந்திய விடுதலைப் போராட்டம்’’ என்பது ஆய்வுத் தலைப்பாக அமைந்துள்ளது.

## கருதுகோள்

இருபதாம் நூற்றாண்டு உரைநடை வளர்ச்சியில் புதினத்தின் பங்கு இன்றியமையாதது. புதினங்கள் உரைநடையை வளர்த்ததோடு மட்டுமன்றித் தம் காலச் சூழலையும், மக்கள் தம் வாழ்க்கை முறையையும் பிரதிபலித்த சிறப்புடையன. எனவே விடுதலைக்கு முன்னும், பின்னும் தோன்றிய புதினங்களில் அக்கால விடுதலைப் போராட்ட நிகழ்வுகள் வெளிப்படும் என்பது இவ்வாய்வின் கருது கோள் ஆகும்.

## ஆய்வு நோக்கம்

விடுதலைப் போராட்ட உணர்வு தமிழ்ப் புதினங்களில் அமைந்து இருக்கும் பாங்கை வெளிப்படுத்துவது இவ்வாய்வின் நோக்கமாகும். மேலும் விடுதலைப் போராட்டப் புதினங்கள் அறிமுகம் செய்யப்பட்டு, அப்புதினங்களில் விடுதலைப் போராட்ட வரலாற்று நிகழ்வுகள் இடம் பெற்றுள்ள விதம், அதனைப் பாத்திரங்கள் வெளிப்படுத்தும் திறம், புதினங்கள் சிறக்க ஆசிரியர்கள் கையாண்டுள்ள கலைத் திறன்கள் போன்ற கூறுகள் அனைத்தையும் ஆராய்வது இவ்வாய்வின் நோக்கமாகும்.

### ஆய்வு முன்னோடிகள்

புதினங்களை அவற்றின் அமைப்பு, சமூகம், பொருளாதாரம், பெண்ணியம் போன்ற காரணிகளின் அடிப்படையில் ஆய்வு செய்வது ஒரு பொதுவான நோக்காகும். அதை விடுத்து சிறப்புக்கூறுகளை மட்டும் ஆய்வது மற்றொரு நோக்காகும். அவ்வகையில் தமிழ்ப் புதினங்களில் இடம் பெற்றுள்ள விடுதலைப் போராட்ட உணர்வுகள் என்ற தலைப்பில் இதுவரை முழுமையான ஆய்வு மேற்கொள்ளப் பெறவில்லை.

சி.சு. செல்லப்பாவின் 1947-க்குப் பின் தோன்றிய நாவல்கள் முதல் தற்காலம் வரை ‘சுதந்திரதாகம்’, எஸ்.நடராஜனின் ‘சுதந்திரப் போரில் தமிழர் பங்கு’(1965), கா.திரவியத்தின் ‘தேசியம் வளர்த்த தமிழ்’(1974), அ.அப்துல்ரசாக்கின் ‘இந்திய விடுதலை இயக்கமும் தமிழ் நாவல்களும்’ (1979), சபா.அருணாச்சலத்தின் ‘தமிழ் நாவல்களில் காந்தியத் தாக்கம்’ (1989), சி.பானுமதியின் ‘தென்னிந்திய நாவல்களில் தேசிய உணர்வு’’ (1995), போன்ற ஆய்வுகள் முன்னாய்வுகளாக அமைந்துள்ளன. இவ்வாய்வுகளும் விடுதலைப் போராட்டத்தின் சில கூறுகளை மட்டுமே ஆய்ந்துள்ளன. எனவே

விடுதலைப் போராட்ட நிகழ்வுகளை முழுமையாக ஆய்வு செய்யும் நோக்கில் இத்தலைப்பு தேர்ந்தெடுக்கப் பெற்றுள்ளது.

## ஆய்வு எல்லை

கி.பி 1926 முதல் கி.பி 1997 வரையிலானகாலகட்டத்தில் (எழுபத்திரெண்டு ஆண்டுகளில்) தோன்றிய புதினங்களில் விடுதலைப் போராட்ட நிகழ்வுகள் இடம் பெற்றுள்ள 32 புதினங்கள் ஆய்வு எல்லையாக அமைகின்றன.

## சான்றாதாரங்கள்

விடுதலைப் போராட்ட நிகழ்வுகள் இடம் பெற்றுள்ள 32 புதினங்கள் முதன்மைச் சான்றாதாரங்களாக (Primary Sources) அமைகின்றன. புதினங்கள் தொடர்பாக வெளிவந்துள்ளதிறனாய்வு நூல்கள், கட்டுரைகள், ஆய்வேடுகள், கலைக்களஞ்சியங்கள், ஆய்வுக் கோவை போன்றவை துணைமைச் சான்றாதாரங்களாக (Secondary Sources) அமைகின்றன.

## ஆய்வுச்சிக்கல்

மக்களின் நாட்டுப்பற்று, விடுதலை வேட்கை போன்ற கூறுகள் புதினங்களில் பிரதிபலித்துள்ள விதத்தைக் காண்பது ஆய்வுச்சிக்கலாகும்.

## ஆய்வு அணுகுமுறை

தமிழ்ப் புதினங்களில் இடம் பெற்றுள்ள விடுதலைப் போராட்ட வரலாற்றினைக் காணும் நிலையில் வரலாற்றியல் அணுகுமுறையும், தமிழ்ப் புதினங்களில் விடுதலைப் போராட்டம் இடம்பெற்றுள்ள முறை குறித்து விளக்கும் நிலையில் விளக்கவியல் அணுகுமுறையும் இவ்வாய்வில் அணுகுமுறைகளாக மேற்கொள்ளப்பட்டுள்ளன.

## ஆய்வுப்பகுப்பு

**தமிழ்ப் புதினங்களில் விடுதலைப் போராட்டம்** என்னும் இவ்வாய்வானது, முன்னுரை, முடிவுரை நீங்கலாக நான்கு இயல்களாகப் பகுக்கப்பெற்றுள்ளது. அவை,

1. விடுதலைப் போராட்டப் புதினங்கள் ஓர் அறிமுகம்
2. விடுதலைப் போராட்ட நிகழ்வுகள்
3. விடுதலை உணர்வூட்டும் பாத்திரங்கள்
4. கலைத்திறன்கள் என்பனவாகும்

## முன்னுரை

இதில் ஆய்வுப் பொருள், ஆய்வுத் தலைப்பு,கருதுகோள், ஆய்வு நோக்கம், ஆய்வு எல்லை, சான்றாதாரங்கள், ஆய்வுச்சிக்கல், ஆய்வு அணுகுமுறை, இயல் பகுப்பு,இயல் விளக்கங்கள் முதலியன இடம்பெற்றுள்ளன.

## இயல் விளக்கங்கள்

''விடுதலைப் போராட்டப் புதினங்கள் ஓர் அறிமுகம்'' என்பது முதலாமியலாகும். இதில் நாடு விடுதலை பெறுவதற்கு முன் எழுந்த மணிவாசகன் (1926),தியாகபூமி (1939), புரட்சிப்பெண் (1939), அன்பு நிலையம் (அ) வாழும் வகை (1941), மண்ணின் புதல்வர்கள் (1942), தேசபக்தன் கந்தன் (1942), பெண் (1947), அபலையின் கண்ணீர் (1947),போன்ற எட்டுப் புதினங்களும், விடுதலைக்குப்பின் தோன்றிய சர்க்கா (1948), இன்ப நினைவு (1949), நெஞ்சின் அலைகள் (1953), அலை ஓசை (1953), கண் திறக்குமா (1956), கோபுரதீபம் (1959), தியாகத்தழும்பு (1962), புதுவெள்ளம் (1964), சோலைமலை இளவரசி (1965), இருபது வருஷங்கள் (1965), அணையாச்சுடர்

(1967), காலவெள்ளம் (1968), ஆத்மாவின் ராகங்கள் (1969), கல்லுக்குள் ஈரம் (1969), வளைக்கரம் (1969), மண்ணில் தெரியுது வானம் (1969), எங்கேபோகிறோம் (1973), இருவிழிகள் (1974), வானவீதி(1977), மகுடபதி (1979), இரத்தம் ஒரே நிறம் (1983), பாதையில் பதிந்த அடிகள் (1991), மணிக்கொடி (1995), வந்தேமாதரம் (1997) போன்ற இருபத்திநான்கு புதினங்களும் என மொத்தம் முப்பத்திரண்டு புதினங்கள் அறிமுகப்படுத்தப்படுகின்றன.

''விடுதலைப் போராட்டநிகழ்வுகள்'' என்பது இரண்டாமியலாகும். இதில் முதன் முதலில் அந்நியர் ஆட்சியை எதிர்த்துத் தோன்றிய வேலூர்க் கலகம் முதல் அடுத்தடுத்து நிகழ்ந்த சிப்பாய்க் கலகம், அந்நியத் துணி எரிப்பு, ரௌலட் சட்ட எதிர்ப்பு, ஜாலியன்வாலாபாக் படுகொலை, ஒத்துழையாமை இயக்கம், சட்டமறுப்பு இயக்கம், உப்பு சத்தியாக்கிரகம், கள்ளுக்கடைமறியல், தனிநபர் சத்தியாக்கிரகம், வெள்ளையனே வெளியேறு என்பன போன்ற பல்வேறு விடுதலைப் போராட்ட நிகழ்வுகள் புதினங்களில் அமைந்துள்ள பாங்கு குறித்து விளக்கப்பெற்றுள.

''விடுதலை உணர்வூட்டும் பாத்திரங்கள்'' என்பது மூன்றாமியலாகும். இதில் விடுதலைப் போராட்டப் புதினங்களில் இடம்பெற்றுள்ள விடுதலை உணர்வூட்டும் பாத்திரங்கள் தலைமைப்பாத்திரம், துணைமைப்பாத்திரம் என வகைப்படுத்தப்பட்டு இப்பாத்திரங்கள் விடுதலைப் போராட்டத்தில் பங்கெடுத்தமை குறித்து விளக்கப்பெற்றுள.

''கலைத்திறன்கள்'' என்பது நான்காவது இயலாகும். இவ்வியலில் புதினம் சிறக்க ஆசிரியர்கள் கையாண்டுள்ள உவமை, உருவகம், மேற்கோள்காட்டல், பழமொழி, வருணனை, கற்பனை, என்பன போன்ற பல்வேறு உத்திகள் விளக்கப்பட்டுள்ளன.

இதனையடுத்து ஆய்வில் கண்ட முடிவுகள் தொகுக்கப் பெற்று முடிவுரையாக இடம் பெற்றுள்ளன. ஆய்விற்குப் பயன்பட்ட நூல்கள் துணைநூற்பட்டியலில் இடம் பெற்றுள்ளன. ஆய்விற்குட்பட்ட 32 புதின ஆசிரியர்களின் வாழ்க்கைக் குறிப்புகள், புதின ஆசிரியர்கள் நிழற்படங்கள், புதின அட்டைகளின் நிழற்படங்கள், புதினங்களில் இடம் பெற்றுள்ள வரலாற்று நிகழ்வுகளின் காலக்கோடு, வரலாற்று நிகழ்வுகள் பற்றிய நிழற்படங்கள், விடுதலைப் போராட்டத் தலைவர் படங்கள் போன்றவை பின்னிணைப்பில் இடம் பெற்றுள்ளன.

## விடுதலைப் போராட்டப்புதினங்கள் ஓர் அறிமுகம்

தமிழ் இலக்கிய வரலாற்றில் சுமார் நூற்றிருபது ஆண்டுகட்கு மேலாகத் தொடர்ந்து வரும் ஓர் இலக்கிய வடிவம் புதினமாகும்.புதினங்கள் உருவெடுப்பதற்கு முந்தைய நாட்களில் நீண்ட உரைநடை வடிவங்கள் தமிழில் எழுத்து வடிவில் இல்லை. உரைநடை பேச்சில் மட்டுமே இருந்தது. இங்ஙனம் பேச்சு வடிவில் இருந்த உரைநடை எழுத்தாகிக் கலை வடிவமாக மாறிப் பழமையிலிருந்து விலகி நின்ற நிலை புதுமையாகும். அப்புதுமையே புதினமாயிற்று.

புதினம் என்பதற்கு ‘‘சிறுகதையிலிருந்து வேறுபட்டு பல நிகழ்ச்சிகளையும், செயல்களையும் தன்னகத்தே கொண்டு கதை மாந்தரின் பண்புகளுக்கு ஏற்ப ஒரு கதையை வளர்த்துச் சென்று ஒரு முடிவுக்கு கொண்டு வரும் உரைநடை இலக்கிய வகை’’[1] என்பர் அரங்கசுப்பையா.

‘‘புதினம்தான் வரலாற்று கண்ணோட்டத்திலும் சமூகக் கண்ணோட்டத்திலும் மனிதனை விளக்கமாகச் சித்திரித்துக் காட்டும் முதல் கலைவடிவமாக விளங்குகிறது’’[2] என்பர் மைக்கேல் செரா.ஃ.பா. மேலும் ‘‘அண்மையில் விடுதலை பெற்ற நாடுகளில், தேசிய உணர்வையும் தேசிய மறுமலர்ச்சிக் கருத்துக்களையும் கவிதைகளைவிட புதினங்களே அதிக அளவில் வெளிப்படுத்தியுள்ளன’’[3] என்றுரைப்பதும் இவ்விடத்தில் சுட்டத்தக்கது. இலக்கியம் இறந்த கால நிகழ்வுகளை வருங்கால மக்களுக்குக் காட்டும் பெட்டகமாகும். இதனையே‘‘புதினம் வாழ்க்கையின் எல்லாக்கூறுகளையும் பிரதிபலிக்கக்கூடிய, எளிதில் தூக்கிச் செல்லக்கூடிய கண்ணாடியாக விளங்குகிறது’’[4] என்பார் ஆலன் சிங்வுட். அந்நியர் ஆட்சியின் விளைவாக இந்திய நாட்டின் சமூக, பொருளாதார, அரசியல் தளங்களில் நிகழ்ந்த

சிதைவுகளை, மாற்றங்களைத் தமிழ்ப் புதினங்கள் தமது களங்களாக்கிக்கொண்டன. விடுதலைப் போராட்டத்தையும், காந்தியக் கொள்கைகளையும் அடிப்படையாகக் கொண்டு புதினங்கள் எழுதப்பட்டன.

விடுதலைப் போராட்டக்காலத்தில் ஆங்கிலேயர்கள் அளித்த பட்டம் பதவியைத் துறந்து நேரடியாகக் களத்தில் இறங்கிப் போராடிய செயல் வீரர்களின் செயல்களைப் புதினங்களாக்கியதன் வழி மக்களிடையே விடுதலை உணர்வைப் புதின ஆசிரியர்கள் நேரிடையாக ஊட்டினர். விடுதலைக்குப் பின் தோன்றிய புதினங்கள் விடுதலையின் சிறப்பை மக்களுக்கு நன்கு வெளிச்சமிட்டுக் காட்டின.

எனவே ஒரு நூற்றாண்டு காலத் தமிழர்களின், இந்தியர்களின் வரலாற்றை அறிவதற்குப் பெரிதும் துணைபுரியும் புதினங்கள் பற்றி விளக்குவது இவ்வியலின் நோக்கமாகும்.

**விடுதலைப்போராட்டத்தை விளக்கும் புதினங்கள்**

1. மணிவாசகன் (1926) 2.தியாக பூமி (1939) 3.புரட்சிப் பெண் (1939) 4.அன்புநிலையம் (அ) வாழும்வகை (1941) 5.மண்ணின் புதல்வர்கள் (1942) 6.தேசபக்தன் கந்தன் (1942) 7.பெண் (1947) 8.அபலையின் கண்ணீர் (1947) 9.சர்க்கா (1948) 10.இன்பநினைவு (1949) 11.நெஞ்சின் அலைகள் (1953) 12.அலை ஓசை (1953) 13.கண் திறக்குமா (1956) 14.கோபுரதீபம் (1959) 15.தியாகத்தழும்பு (1962) 16.புதுவெள்ளம் (1964) 17.சோலைமலை இளவரசி (1965) 18.இருபது வருஷங்கள் (1965) 19.அணையாச்சுடர் (1967) 20.காலவெள்ளம் (1968) 21.ஆத்மாவின் ராகங்கள் (1969) 22.கல்லுக்குள் ஈரம் (1969) 23.வளைக்கரம் (1969) 24.மண்ணில் தெரியுது வானம் (1969) 25.எங்கே போகிறோம் (1973) 26.இருவிழிகள் (1999) 27.வானவீதி (1977) 28.மகுடபதி (1979) 29.இரத்தம் ஒரே நிறம் (1983) 30.பாதையில் பதிந்த அடிகள் (1977)

31.மணிக்கொடி (1985) 32.வந்தேமாதரம் (1999) என்ற முப்பத்திரண்டு புதினங்கள், விடுதலைப் போராட்டத்தைக் கருவாகக் கொண்டு தோன்றியவையாகும். இப்புதினங்கள் விடுதலைக்கு முந்திய காலகட்டத்தில் தோன்றியவை, நாடு விடுதலை அடைந்த பின் தோன்றியவை என்னும் இரு நிலையில் விளக்கப்பெற்றுள.

## 1. மணிவாசகன்

பனையப்ப செட்டியார் எழுதிய மணிவாசகன் என்ற புதினம் 239 பக்கங்களையும், 14 அதிகாரங்களையும் உடையது. இப்புதினம் கதைத்தலைவன் மணிவாசகனை அறிமுகப்படுத்தும் விதமாகத் தொடங்குகிறது.

மணிவாசகனுக்குப் பெற்றோர் இல்லை. மணிவாசகனது தந்தை இறந்தவுடன் உறவினர்கள் அவரது பணம், வீடு, ஆகியவற்றிற்கு அவனது சித்தப்பா சிவராமபிள்ளையைக் கார்டியனாக ஆக்குகின்றனர். அவனது சித்தப்பா ஒரு நாள் "என்னை அவனுக்குக் கார்டியனாக வைத்ததே நமக்குச் சகட யோகமாயிற்று. என்தமையன் இறக்கிற பொழுது அவனிடம் ஒரு கடிதங்கொடுத்தார் அல்லவா? அது வெறும் கடிதமல்ல; ஒரு புதையல் இருக்கும் இடம் அதில் குறிக்கப்பட்டிருக்கிறது. அக்கடிதத்தை மணிவாசகன் அறியாமல் நான் எடுத்துக் கொண்டேன்"[5] என்று கூறுகிறார். இதனைக் கேட்டு கொண்டிருந்த மணிவாசகன் துப்பறியும் போலீசார் இரங்கநாதனிடம் தெரிவிக்கிறான்.

இதன்பின் விடுதலைப் போராட்டத்தில் ஈடுபட்ட மணிவாசகன் சொற்பொழிவுக் கூட்டத்தில் பேசும் போது, இந்திய மக்கள் அனைவரும் தினந்தோறும் ஒன்று அல்லது இரண்டு மணி நேரம் ராட்டையில் நூல் நூற்கவேண்டும் அங்ஙனம் நூற்றால் தங்கட்கு வேண்டிய ஆடைகளைத்

தாங்களே தயாரிக்கலாம். இதனால் நாட்டின் பொருளாதாரம் உன்னத நிலையை அடையும் என்று உரைக்கிறான். மேலும் ‘‘நாட்டின் விடுதலையை உண்ணுங்கள்; தெள்ளூற்ற தமிழமுதின் சுவை காண்டற்கு விரும்புங்கள், கதர் ஆடைகட்டுங்கள், இயற்கையோடியைந்த இன்பவாழ்வு வாழமுயலுங்கள்’’[6] என்கிறான். கூட்டம் முடிந்து வெளியே வந்த மணிவாசகனை சிவராமபிள்ளையின் ஆட்கள் கடத்தி விடுகின்றனர். சிவாரமபிள்ளையும், நடராசப்பிள்ளையும் கூட்டாக இருந்து பல கொலை, கொள்ளைகளை நடத்துகின்றனர். இதனை இரகசியப் போலீஸ் இரங்கநாதன் கண்டுபிடித்து விடுகிறார். பாக்ஸ் துரை என்பவர் அரஸ்ட் வாரண்டுடன் வந்து அவர்களைக் கைது செய்கிறார். இதன் பின் மணிவாசகத்திற்கும், சாரதாம்பாளுக்கும் திருமணம் நிச்சயம் செய்யப்படுகிறது. மணமக்கள் இருவரும் கதர் ஆடை உடுத்தி திருமணம் செய்கின்றனர்.

மணிவாசகன் வாயிலாக, ‘‘விடுதலை பெறாத நாடு வறுமைக்கும், தீயொழுக்கத்திற்கும் இரையாகிக் கொண்டே போகும். அதனால் நாட்டின் விடுதலையை நாடுங்கள், இந்திய மக்களின் வறுமையை நீக்க முயலுங்கள், ஆட்சிமுறை அந்நியர் பால் இருக்கும் வரை நமது நாட்டின் அறிவு மணம் பெறாதென்பது உண்மை’’[7]என்றுரைப்பது மக்கள் சுதந்திர உணர்வு உள்ளவர்களாக வாழவேண்டும் என்பதையும், ஒவ்வொருவர் நெஞ்சிலும் தேசத்தொண்டு என்ற முளை வேருன்றிப் பதியவேண்டும் என்றும் அறிவுறுத்தும் நிலையில் கதை நிறைவடைகிறது.

## 2. தியாக பூமி

கல்கியின் தியாகபூமி என்ற புதினம் நான்கு பாகங்களையும், அறுபத்தெட்டு அத்தியாயங்களையும், நானூற்றிப்பதினொறு பக்கங்களையும் கொண்டது. கதாநாயகியின் தந்தை சம்புசாஸ்திரியை அறிமுகப்படுத்தும் விதமாகக் கதை தொடங்குகிறது. சம்புசாஸ்திரியின் பெண் சாவித்திரிக்கும், ஸ்ரீதரனுக்கும் திருமணம் நடைபெறுகின்றது. மாப்பிள்ளை வீட்டார் பெண்ணைப் பின் அழைத்துச் செல்வதாகக் கூறிச் செல்கின்றனர்.

அந்த வருடம் ஐப்பசி ஆகியும் மழைபெய்யவில்லை சம்பு சாஸ்திரி மாகாபாரத விராடபருவம் படித்ததும் மழை கொட்டுகின்றது. குடமுருட்டி ஆறு உடைத்துக் கொண்டதால் சேரி அழிந்தது. சப்புசாஸ்திரியின் பண்ணையாள் நல்லான் சேரி மக்களை பஜனை மடத்திற்கு அனுப்புகிறான் அவர்களை அக்கிரகார மக்கள் உள்ளேவிட மறுக்கின்றனர். சம்புசாஸ்திரி சேரிமக்களைத் தமது மாட்டுக் கொட்டிலில் தங்கவைத்து உணவும் கொடுக்கின்றார். ஊர்க்காரர்கள் மறுநாள் காலை அவரை ஊரைவிட்டுத் தள்ளிவைத்துச் சாதிப்பிரஷ்டம் செய்கின்றனர். சாவித்திரிக்கு இது கவலையைத் தருகிறது என்றாலும், தான் கணவன் வீட்டிற்குச் சென்று விடலாம் என்று மகிழ்வுடன் இருக்கிறாள். இச்சூழலில் ஸ்ரீதரனுக்கு **“கே அண்டு ஓ பாங்கு”**என்ற வங்கியின் கல்கத்தா கிளையில் உதவி மேனேஜர் வேலை கிடைக்கிறது. அதனால் ஸ்ரீதரன் குடும்பத்தினர் கல்கத்தா சென்று வசிக்கலாயினர்.

திருமணம் ஆகி மூன்று வருடங்கள் ஓடிவிட்டன. நான்காவது வருடம் ஸ்ரீதரனின் தாய் தங்கத்திடம் இருந்து தான் நரசிங்கபுரத்திற்கு வருவதாகவும் அங்கு சாஸ்திரி தன்னை வந்து பார்க்கும்படியும் கூறி ஒரு கடிதம் வருகிறது. அதன்படி சாஸ்திரி தங்கத்தைக் காணச்சென்ற போது தனக்கு மூவாயிரம் ரூபாய் கொடுத்தால், தான் சாவித்திரியை அழைத்துச் செல்வதாகவும்,

இல்லை என்றால் சாவித்திரியை அவருடனேயே வைத்துக்கொள்ள வேண்டியதுதான் என்றும் கூறுகிறாள் தங்கம். சாஸ்திரி தன் வீடு, முக்கால் வேலி நிலம் தவிர மற்ற அனைத்தையும் விற்று மூவாயிரம் ரூபாயைக் கொடுத்து சாவித்திரியை அவளிடம் ஒப்புவிக்கிறார்.

சாவித்திரி கல்கத்தாவில் வசித்துவரும் போது ஸ்ரீதரன், தங்கம்மாள் ஆகிய இருவராலும் கொடுமைப்படுத்தப்படுகிறாள். சாவித்திரி கருவுறுகிறாள். சாவித்திரி தன் மாமனாரிடம் தன்னை ரயிலேற்றி ஊருக்கு அனுப்பும்படி உரைக்கிறாள். ராஜாராமையர் திருநெல்வேலி செல்பவர்களுடன் சாவித்திரியை சென்னை வண்டியில் ஏற்றிவிடுகிறார். சாவித்திரி நெடுங்கரை வந்து பார்க்கும் போது அவளது தந்தை பாட்டு சொல்லிக் கொடுத்துப் பணம் சம்பாதிக்கச் சென்னை சென்றுள்ளதாகவும், சித்தி பிறந்தவீட்டிற்குச் சென்று விட்டாள் என்றும், நல்லான் ஊரைவிட்டுச் சாவடிக் குப்பம் சென்று விட்டான் என்றும் அறிந்து கொள்கிறாள். அவளுக்குப் பெண் குழந்தை பிறக்கிறது. குழந்தையுடன் வேலை தேடி அலையும் போது குழந்தை இருப்பதால்வேலை தரமறுக்கின்றனர். அதனால் குழந்தையுடன் இறந்துவிட முடிவு செய்து ஒரு குளத்தங்கரை ஓரமாகச் சென்ற போது அங்குசம்புசாஸ்திரி பாடும் குரல் கேட்கிறது குரலைத் தேடி வரும் போது அவர் தூங்கிக் கொண்டு இருக்கிறார் குழந்தையை அவர் அருகில் போட்டுவிட்டு மறைந்து நின்று பார்க்கிறாள் சாவித்திரி.குழந்தையின் அழுகுரல் கேட்டுஎழுந்த சாஸ்திரி அருகில் யாரும் இல்லாததால் குழந்தையை எடுத்துச்சென்று சாருமதி என்று பெயரிட்டு வளர்த்து வருகிறார்.

சாவித்திரி தன் தந்தை குழந்தையை எடுத்துச் சென்றதைப் பார்த்த பின் பம்பாய் சென்று ஒரு வீட்டில் வேலையில் சேர்ந்து உமாராணி என்ற பெயரில் வாழ்ந்து வருகிறாள். சில வருடங்களுக்குப்பின் ‘‘சாவித்திரியைப் பற்றி அவர்கள் கேட்ட போது தன்னைப் பற்றி உரைக்கின்றாள்.தான் வேலை

பார்ப்பது தனது அத்தையிடம் என்பது சாவித்திரிக்குத் தெரியவருகிறது. அவளது அத்தை அவளிடம் மிகுந்த அன்பு காட்டியதுடன் தனது சொத்துக்களில் பாதியைச் சென்னையில் உள்ள மீனாட்சி மருத்துவமனைக்கு அளிக்க வேண்டும் என்றும், மீதியைப் பத்திரமாகப் பாதுகாத்து அவளது பெண்ணிற்குத் தரவேண்டும் என்றும் உயில் எழுதி வைத்துவிட்டு உயிர் துறக்கிறாள்.''[8] சாவித்திரி மீண்டும் சென்னை வந்து மீனாட்சி மருத்துவமனைக்கு உமாராணி என்ற பெயரில் ஐந்து லட்சம் ரூபாய் நன்கொடை கொடுத்ததுடன், சென்னையில் வீடு வாங்கித் தங்குகிறாள். தனது வக்கீலிடம் கூறி சம்புசாஸ்திரியைத் தேடும் படிக் கூறுகிறாள். இந்நிலையில் தனது பள்ளி நாடகத்திற்காக உமாராணியிடம் தன் தாய் என்பது தெரியாமலேயே சாருமதி நிதி திரட்டச் செல்கிறாள். உமாராணிக்கு அவளைப் பிடித்துவிடுகிறது. சாருமதி தன் பெண் என்பதை அறிந்த சாவித்திரி தந்தையின் இருப்பிடத்தை அறிந்து கொண்டு தந்தையைச் சென்று சந்தித்து சாருவை அழைத்து வந்து வளர்க்க ஆரம்பிக்கிறாள்.

இந்நிலையில் சாருமதி ஒருநாள் இரவு தன் தாத்தாவைத் தேடிச் செல்கிறாள். அப்போழுது அவர் சாவடிக்குப்பத்தை விட்டுச் செல்லக் கிளம்பிக்கொண்டிருக்கிறார். தாத்தாவும், பேத்தியும் ஊர் ஊராகச் சென்று தீண்டாமைக் கொடுமை, மது அருந்துவதால் ஏற்படும் விளைவு, மது விலக்கு,கதர் உடுத்தல், அடிமைத்தளை போன்றவற்றைப் பற்றி எடுத்துக்கூறி, பிரச்சாரம் செய்கின்றனர். இதனால் பல ஊர்களில் குடி அடியோடு நின்று விடுகிறது. இந்நிலையில் ஒரு ஊரில் பேசிக் கொண்டிருக்கும் போது, நெடுங்கரை சங்கர தீக்ஷிதர் வந்து சம்புசாஸ்திரியிடம் அவர் மனைவி மங்களம் இறக்கும் தருவாயில் இருப்பதாகக் கூறுகிறார். இதனால் சம்புசாஸ்திரி தனது தேச சேவையைச் சற்று நிறுத்திக் கொண்டு நெடுங்கரை செல்கிறார். அங்கு மங்களத்திற்கு உதவியாக இருந்து அவள் இறந்தவுடன்

அந்திமக்கிரியைகளைச் செய்து கொண்டிருக்கிறார். இதற்கிடையே வங்கியில் மோசடி செய்ததற்காகக் கைது செய்யப்பட்ட ஸ்ரீதரனை சென்னைக்கு அழைத்து வருகின்றனர். இதனை அறிந்த உமாராணி ''தனது வழக்கறிஞர் மூலம் அவன்கையாடல் செய்த பணத்தை ஒருவர் கட்டுவதாகவும் அதன்பின் ஸ்ரீதரன் சென்னையை விட்டுச் சென்று விடவேண்டும் என்று உறுதி வாங்கிக் கொண்டு வழக்காடுகிறாள்''[9] அதன் படி அவனது வழக்கு தள்ளுபடி செய்யப்படுகிறது. ஆனால் ஸ்ரீதரன் கல்கத்தா செல்லாமல் உமாராணியை (சாவித்திரியை) வந்து பார்த்து இருவரும் இணைந்து வாழலாம் என்று கூறி அவளை அழைக்கிறான். அவள் மறுக்கிறாள். அதனால் கோபம் அடைந்த ஸ்ரீதரன் உமாராணி மீது தாம்பத்திய உரிமை கோரி வழக்குப் போடுகிறான்.

முடிவில் உமாராணி என்ற சாவித்திரி ஸ்ரீதரனுடன் இணைந்து வாழவேண்டும் என்று தீர்ப்பாகிறது. இதற்கு முன்பே தனது சொத்துக்களைச் சாருவின் பேரில் உயில் எழுதி வைத்துவிட்டு, அதற்குக் கார்டியனாகச் சம்புசாஸ்திரியை நியமித்தசாவித்திரி, தன் தந்தையிடம் தான் ஸ்ரீதரனுடன் இணைந்து வாழ முடியாது என்றும், தன் குழந்தையைப் பார்த்துக் கொள்ளும்படியும், கூறி விட்டு கதர் புடவையை அணிந்து கொண்டு விடுதலைப் போராட்டத்தில் பங்கு பெற்றுக் கைதாகிறாள்.

ஸ்ரீதரனும் கதராடை அணிந்து மறியலில் ஈடுபடுகிறான். அதனால் கைது செய்யப்பட்டு வண்டியில் ஏற்றப்படுகிறான். ''ஒரு வீதியில் கைது செய்யப்பட்டு நின்ற தேசத்தொண்டர்களின் நடுவில் ஸ்ரீதரன் நின்று கொண்டிருப்பதைச் சாவித்திரி பார்க்கிறாள். அவனது உடை மாறியதுடன் முகத்தோற்றமும் மாறியிருப்பதைக் காண்கிறாள். அவளது கண்களில் ஆனந்தக் கண்ணீர் துளிர்க்கிறது. அதே நேரத்தில் ஸ்ரீதரனும் சாவித்திரியைப் பார்க்கிறான். சொல்லமுடியாத ஆதுரத்துடன் ஒருவரை ஒருவர் பார்த்துக்கொண்டு

நின்றார்கள்”[10] உண்மையில் இத்தனை நாளும் பிரிந்திருந்தவர்கள் அந்த நிமிடத்திலேதான் ஒன்று கூடினார்கள். அவர்களது இதயங்கள் அந்த நிமிடத்தில் இணைந்தன.

## 3. புரட்சிப்பெண்

சாண்டில்யன் எழுதிய புரட்சிப்பெண் என்ற புதினம் நூற்றுத்தொன்னூற்று இரண்டு பக்கங்களையும், பதினேழு அத்தியாயங்களையும், உடையது. கதைத்தலைவி ஜெயலெட்சுமியை மையமாக வைத்து இப்புதினம் எழுதப்பட்டுள்ளது. பலராமய்யர் என்ற சுதந்திரப் போராட்ட வீரரின் மகள் ஜெயலெட்சுமி. இவளது அத்தையின் கணவர் சரபசாஸ்திரியின் தீவிரவாத இயக்கத்தால் பம்பாயில் கொல்லப்படுகிறார். அத்தை ஜோதிபாயும் சென்னையில் கொல்லப்படுகிறார். இதை அறிந்த பலராமய்யர் சி.ஐ.டி குப்புசாமி ராஜாவின் உதவியுடன் சிறையிலிருந்து விடுதலையாகி வருகிறார். அவரைச் சரபசாஸ்திரி திருச்சிக்கு அழைத்துவருகிறார். திருச்சி வந்தவுடன் ஜெயலெட்சுமியிடம் நீ படித்தது போதும்; உன் பிரின்ஸ்பாலிடம் சொல்லி உன் பெயரை அடிக்கச் சொல்லிவிட்டேன். உன்னைப் போலீஸ் தேடுகிறது. நீ இரவு பதினொரு மணிக்கு பாலத்துக்குப் பின்னால் உள்ள தண்ணீர் பந்தலுக்குப் போ அங்கே சரபசாஸ்திரி இருப்பான் உன்னைக் காப்பாற்றுவான் என்று கூறி அனுப்புகிறார்.

ஜெயலட்சுமி “தன்னைத் தொடர்ந்த சி.ஐ.டி வாசுதேவன் மீது புலிபோலப் பாய்ந்து தன் மடியிலிருந்த கத்தியால் வாசுதேவன் இதயத்தில் குத்திப்பின் அவனைக் காவேரியில் தள்ளிவிடுகிறாள்”[11]

இதைப்பார்த்துக் கொண்டிருந்த சரபசாஸ்திரி அவளைத் தன் வீட்டிற்கு அழைத்துச் செல்கிறார். அவளிடம் தனது திட்டங்களையும் அவளது

நெருக்கடி நிலையையும் எடுத்துக் கூறிதன் கூட்டத்தில் சேர்த்துக் கொள்கிறார். குப்புசாமிராஜா என்ற சி.ஐ.டி ஜெயலட்சுமியின் உறவினரான டாக்டர் கோபாலனிடம் ஜெயலெட்சுமியுடன் சேரக்கூடாது அப்படிச் சேர்ந்தால் அரசாங்க வேலை பார்க்கும் அவருக்கு ஆபத்து என்கிறார். ஜெயலட்சுமியின் தந்தை அவளைச் சென்னைக்கு அழைத்துச் செல்கிறார்.

சென்னையில் சரபசாஸ்திரி கூறியபடி போலீஸ் கமிஷ்னர் சிங்காரவேலு வீட்டிற்குச் சென்று அவனுக்குத் தேவையான குறிப்புகளை எடுத்துவந்து கொடுக்கிறாள். கொடுப்பதற்கு முன்பு போட்டோ எடுத்துக் கொள்கிறாள். 1931-ஆம் ஆண்டு மார்ச்சு ஒன்றாம் தேதி சரபசாஸ்திரியின் சங்கம் கீழ்ப்பாக்கத்திலுள்ள பங்களாவில் கூடியது ஜெயலெட்சுமியை அறிமுகப்படுத்தியதும் கூட்டத்தில் ஒருவன் இவள் நம்மை மோசம் செய்யமாட்டாளா என்று கேட்கிறான். இவள் மோசம் செய்தால் இவளையும் இவள் குடும்பத்தினரையும் கொன்றுவிடுவேன். என்று கூறியதும் ஏழுபேர் அதற்கு மறுப்புத் தெரிவிக்கின்றனர். அவர்களைக் கொல்லும் விதத்தை சரபசாஸ்திரி ஜமீன்தாரிடம் விளக்கிக் கூறுவதை இரகசியமாக ஜெயலெட்சுமி அறிந்து கொள்கிறாள். இந்த நேரத்தில் ஜெயலெட்சுமியைக் காணவந்த கோபாலனையும் அடைத்து வைக்கிறான் சரபசாஸ்திரி.

மறுநாள் தான் கண்டுபிடித்த விஷப்புகையைக்கக்கும் இயந்திரத்தினை வைத்துவிட்டு சரபசாஸ்திரி அந்த அறையை வெளியே பூட்டிவிட்டுச் செல்கிறான் ஜெயலெட்சுமி முன்பே அதுபற்றி தெரிந்து கொண்டதால் அனைவரும் தப்பிக் காவல் நிலையம் சென்று அனைத்தையும் கூறிவிடுகின்றனர். இதை அறிந்த சரபசாஸ்திரி போலீஸ் நிலையத்தின் மீதி குண்டை வீசுகிறார். குண்டு குறி தவறியதால் அனைவரும் பிழைக்கின்றனர். பண்ணையாரிடம் உள்ள குறிப்புகள் மூலம் நாடு முழுவதும் உள்ள

தீவிரவாத கும்பல் பிடிபடுகிறது. சரபசாஸ்திரி மட்டும் பிடிபடவில்லை அவனைப் பிடிக்க இன்ஸ்பெக்டர் வாசுதேவன், குப்புசாமி ராஜா, கோபாலன், ஜெயலெட்சுமி அனைவரும் சேர்ந்து திட்டமிடுகின்றனர்.

எப்படியும் ஜெயலெட்சுமியைக் கொல்ல சரபசாஸ்திரி வருவான், அப்பொழுது அவனோடு பேசியவாறு, ஜோதிபாய் மரணம் பற்றிய செய்திகளை அவன் வாயிலாக வாங்க வேண்டும் என்றும், அவளையும் காப்பாற்றவேண்டும் என்றும் முடிவு செய்கின்றனர். அது போல் சரபசாஸ்திரி ஜோதிபாயைக் கொன்ற முறையைக் கூறி அவளையும் கொல்ல வருகிறான். ஜெயலெட்சுமி பக்கத்து சுவரில் இருந்த மரக்கதவை திறக்கச் சொல்கிறாள். அங்கு அனைவரையும் கண்டவுடன் கைதியாக விரும்பாமல் தான் கொண்டு வந்த விச ஊசியைத் தானே போட்டுக் கொள்கிறான். தன்னை காப்பாற்ற முடியாது என்றும் ஊசியில் பல மருந்துகள் சேர்த்திருப்பதாகக் கூறுகிறான். தன்னைப் பிடித்தமுறையை கூறக்கேட்டு உயிர் விடுகிறான். கோபாலனுக்கும், ஜெயலெட்சுமிக்கும் திருமணம் உறுதியாகிய நிலையில் கதை நிறைவடைகிறது.

## 4. அன்புநிலையம் (அல்லது) வாழும் வகை

சுத்தானந்த பாரதியின் அன்புநிலையம் (அ) வாழும் வகை என்ற புதினம் முந்நூற்றுத் தொன்னூற்றாறு பக்கங்களையும், எண்பது அத்தியாயங்களையும் உடையது. இப்புதினம் கதாநாயகி பூங்கோதையை அறிமுகப்படுத்தும் விதமாகத் தொடங்குகிறது. நமச்சிவாயம் சிவகாமி தம்பதியருக்கு ஒரே மகளாகத் தோன்றியவள் பூங்கோதை. பூங்கோதைக்கு பதினைந்து வயதானதும் அவளுக்கு மாப்பிள்ளை தேடுகிறார் தந்தை. இச்சூழலில் பணக்குடியைச் சார்ந்த சிதம்பரம் பிள்ளையின் மகன் சிங்காரம்

என்பவன் என் வாழ்விற்கேற்ற துணைவியை எம்பெருமான் எனக்கு அளித்துவிட்டார். நடராஜர் சன்னிதியில் பாடிய திருவருட்செல்வியைத்தான் நான் மணப்பேன் என்றனன். தந்தையும், மகனும் நமச்சிவாயர் வீட்டிற்கு வந்து பெண் கேட்கின்றனர். மறுநாளே பூங்கோதைக்கும், சிங்காரத்திற்கும் திருமணம் நடைபெறுகிறது. சிங்காரத்தின் தந்தை அவனைப் பாரிஸ்டர் பட்டம் பெற்று வர சீமைக்கு அனுப்புகிறார். அவன் படித்துவிட்டுத் திரும்பும் முன் அவன் தந்தை இறந்துவிடுகிறார்.

சிங்காரம் ஐரோப்பிய நாகரீகத் தோற்றத்துடன் ஊன்உண்ணல், சுருட்டு குடித்தல் முதலிய பழக்கங்களை உடையவனாய் வருகிறான். பூங்கோதை ஒரு மாதத்தில் கணவனிடம் ஏற்பட்ட சீமை நாகரீகங்களை ஒழித்துச் சைவனாக்குகிறாள். சிங்காரத்தின் நல்லியல்புகளைக் கண்ட ஏழைகளும், தொழிலாளர்களும், விவசாயிகளும் அந்த ஆண்டு நகரசபைத் தேர்தலில் சிங்காரம் நிற்க வேண்டுமென்று கேட்டுக்கொண்டனர். அவரும் மக்கள் நலன் கருதி ஒத்துக்கொண்டார். சிங்காரம் தேர்தலில் ஜெயிக்க மக்கள் பாடுபட்டனர்.

சிங்காரத்தை எதிர்த்து பங்காரு என்பவர் நின்றார். இவர் பெரும் பணக்காரர், அத்துடன் ஊரை ஏமாற்றிக் கொள்ளையடிப்பவர். தேர்தலில் ஜெயிக்கவேண்டும் என்பதற்காக தமது பணத்தை அதிகம் செலவழித்தார். ஜவஹர்லால்நேரு தமிழ்நாட்டிற்கு வருவதை அறிந்த சிங்காரம் அவரை அழைத்து வந்து மேடையில் பேசச்செய்கிறான். நேரு பேசும் போது கள்ளையொழிமின், கதருடுத்துமின், அனைவரும் உடன்பிறந்தார் போலப்பழகுமின், நாட்டு முன்னேற்றத்திற்காக வாழ்வை வழங்குமின் என்று கூறுகிறார். இதனால் தொழிலாளரிடம் ஒரு விழிப்புணர்வு ஏற்பட்டது. மறுநாளே தொழிற்சங்கம் உருவெடுத்தது. சிங்காரம் அதற்குத் தலைவரானான். தொழிலாளர்கள் அனைவரும் சிங்காரத்திற்கு ஓட்டு போடுவது உறுதியானது.

தேர்தலில் சிங்காரம் வெற்றி பெற்றான். ஆனால் அரசாங்கத்தினர் வராதவர்களைத் தந்திமூலம் ஓட்டளிக்கச் செய்து பங்காருதான் வெற்றி பெற்றான் என்றனர். பங்காருவின் கொடுங்கோலாட்சி ஆரம்பம் ஆனது. மக்கள் சிங்காரத்தை நாடினர். சிங்காரம் நான் சொல்வதை நீங்கள் கேட்டால் உங்களை வழிநடத்துகிறேன் என்று கூறி, ஒவ்வொருவரும் மாதம் இருபது ரூபாய் மிச்சம் பிடித்துத்தரவேண்டும். யாரும் கள் குடிக்கக்கூடாது; அனைவரும் எழுதப்படிக்கத் தெரிந்து கொள்ளவேண்டும், வழக்குகளைப் பஞ்சாயத்திலேயே தீர்த்துவிட வேண்டும், கோர்ட்டுக்குப் போகக்கூடாது, இராட்டை சுற்ற வேண்டும், அனைவரும் கதரே உடுத்தவேண்டும், யாரும் மாமிசம் உண்ணக்கூடாது. ஞாயிறு தோறும் சன்மார்க்க சங்கம் செல்ல வேண்டும் என்றுரைக்கிறான். மக்கள் அனைவரும் இதனைக் கேட்டு நடக்கின்றனர். அதனால் பங்காரு அடக்கு முறைகளைச் செலுத்த இடம் இல்லாமல் போயிற்று. அதனால் ஊர் மேன்மை அடையலாயிற்று. சிவலிங்கம் பிள்ளை என்பவருக்குச்சிங்காரம் ஒரு வழக்கில் வெற்றி பெற்றுத் தந்ததால் அவர் சிங்காரத்திற்குப் பங்களாவும், ரோல்ஸ்ராய் காரும் வாங்கித்தர விழைந்தார். சிங்காரம் அதனை மறுத்துக் கொஞ்சம் நிலமும், உழவுக்கு நல்ல காளைகளும், தறிகளும், இராட்டினங்களும் வாங்கித்தருமாறு கூறினார்,அவரும் அவ்வாறே செய்தார். இதுபோல் கிடைக்கும் பணத்தைக் கொண்டு குப்பம், பெருமாள்பட்டி ஆகிய இரண்டு ஊர்களையும் வளர்த்து வந்தார். இதற்குப் பக்கபலமாக காந்தியின் வருகை அமைந்தது. கதர் நிதி வசூலுக்காக மகாத்மா காந்தி தமிழ்நாட்டிற்கு வந்தார். அவரைச்சிங்காரம் பனந்தூருக்கு வரவழைத்தார்.

பனந்தூரில் உள்ள ஏழைக் குப்பத்திற்கு வந்த மகாத்மா கதர் நெசவைப் பாராட்டி குப்பத்தில் உள்ளவர்களிடம்உங்கள் ஒழுக்கத்தாலும்,

முயற்சியாலும் பணக்காரருக்குப் புத்திவரச் செய்ய வேண்டும். கதர் உடுத்துங்கள், மது அருந்தாதீர்கள், பயிர்க்குழி போடுங்கள், ஆண்மை, அஹிம்சை, பொறுமை, உண்மை, தன்உதவி, ஒற்றுமை இவை உங்களிடம் இருந்தால் வெற்றி பெறுவீர்கள். உங்களை யாரும் ஒடுக்க முடியாது என்கிறார். சிங்காரம் மக்களைப் பார்த்து மகாத்மாவை நாம் வரவேற்ற போதே உங்கள் அடிமைத்தளைகள் அறுந்தன என்கிறார். மகாத்மா காந்தி அவ்வூர் மக்களுக்கு காங்கிரஸ் நிதியிலிருந்து ரூபாய் 1,500/- அளிக்கிறார். மகாத்மாவின் வரவுபனந்தூரில் புதிய விழிப்புணர்வை ஏற்படுத்தியது மேலும் தொழிலாளரிடையே மனவுறுதியும், முயற்சியும், அமைதியும் அகிம்சை உணர்ச்சியும் மிகுந்தன. வேலை நிறுத்தம் இல்லாமலே முதலாளிக்கும், தொழிலாளிகளுக்கும் இடையே நல்ல உணர்வு வளர்ந்தது. பங்காருவினால் ஊரில் கலகம் ஏற்பட அரசு 144 தடை உத்தரவு இட்டது. கலகத்தில் வீரண்ணன் இறக்கிறான் இதனால் “சிங்காரம் 144 தடை உத்தரவு இருந்ததால் மக்களை நோக்கி இன்று சங்கத்திற்குத் துக்கநாள் நீங்கள் உபவாசமிருந்து நமக்கு வரும் ஆபத்துக்கள் நீங்கவும், வீரண்ணன் ஆவி வீடுபெறவும் இறைவனை வணங்குங்கள் என்று கூறுகிறார்.”[12]

பணக்குடி வரதன் மகன் கோபாலன் என்பவன் காந்தியடிகள் உப்பு சத்தியாக்கிரகத்தின் போது சிறை சென்றதை அறிந்து தான் தேசசேவை செய்யப்போவதாகவும், தந்தையின் ஆசியை வேண்டி நிற்பதாகவும், எந்நிலையில் இருந்தாலும் அவருக்கு உண்மையான மைந்தனாகவும், தேசத்திற்கு உண்மையான தொண்டனாகவும் இருப்பதாகவும் கடிதம் எழுதுகிறான். இதனைப் பார்த்த சிங்காரம் கோபாலன் சிறந்த எழுத்தாளன். பத்திரிகை மூலம் தேசசேவை செய்தல் நல்லது என்கிறான். அதன்படி கோபாலன் மகாத்மா என்ற பெயரில் பத்திரிகையைத் தொடங்குகிறான்.

வெல்லிங்டன் பிரபு காலத்தில் பத்திரிகைகளுக்கு வாய்ப்பூட்டு போட்ட போது சத்தியாக்கிரகக் கொள்கைகள் அடங்கிய துண்டுப் பிரசுரங்களை அச்சடித்துச்சென்னை முழுவதும் வழங்குகிறான். அந்நியத்துணி மறியல், கள்ளுக்கடை மறியல் முதலியவற்றில் பங்கு பெற்றுத் தண்டனை அடைகிறான். சிறையில் திருக்குறள் பாடம் நடத்தியதோடு பல கட்டுரைகளும் எழுதுகிறான். விடுதலையானதும் மீண்டும் பத்திரிகையை நடத்துகிறான்.

பகதூர் பங்காருசாமி தன் தவறை உணர்ந்து வருந்தி அன்புச்சாமியைச் சென்று வணங்குகிறான் தன் வீட்டை அனாதைக் குழந்தைகள் படிக்கும் கலாசாலையாக மாற்ற உதவுகிறான். கிராமத்தை ஏழைக்குடியானவர்கள் இருக்கும் விவசாயப் பண்ணைஆக்குகிறான். அவர் மனைவி நகை, நட்டுகளை விற்று இராட்டினமும், கைத்தறியும் வாங்கச் செய்கிறாள். பங்காரு தியாகமணியாகிறார். ஏழைக்குப்பம் கதர்க்குப்பம் ஆனது. மாகான சுயாட்சி வந்தது. மக்கள் சிங்காரத்தைச் சட்டசபைக்கு அனுப்பினர். வடிவேலு நகரத்தலைவர் ஆனான். உள்ளூரிலும், நாட்டிலும் ஏழைகளுக்கு மானமான உழைப்பும், பிழைப்பும், கல்வியும் உண்டாயின. ஏழைகளின் துன்பக்கண்ணீர், ஆனந்தக்கண்ணீர் ஆனது என்று கதை நிறைவுபெறுகிறது.

## 5. மண்ணின் புதல்வர்கள்

நா.ரா. பண்டரிநாதன் எழுதிய மண்ணின் புதல்வர்கள் முந்நூற்று நான்கு பக்கங்களையும், இருபத்தைந்து அத்தியாயங்களையும் உடையது. இப்புதினம் கதாநாயகன் மணியை அறிமுகப்படுத்தும் விதமாகத் தொடங்குகிறது. அவன் அரசியல் வாரப்பத்திரிகையில் இரண்டு வருடமாக உதவி ஆசிரியராக இருக்கிறான். 1942-இல் நடந்த வெள்ளையனே வெளியேறு என்ற ஆகஸ்ட் புரட்சி பற்றி எழுதியதற்காக அவனது பத்திரிகை ஆசிரியரைப் பம்பாயில் கைது செய்து விடுகின்றனர். மணி எழுதிய கட்டுரையின் காரணமாக

பிரிட்டிஷ் அரசாங்கம் அப்பத்திரிகைக்குத் தடைவிதிக்கிறது. அதை அறிந்த மணி காவலர் கண்ணில் படாமல் தன் நண்பன் பிரபாகரனைப் பார்க்க வருகிறான்.

அங்கு அவன் வீட்டில் மாட்டப்பட்டிருந்த அண்ணலின் படம் அகற்றப் பட்டிருப்பதை அறிந்து கோபம் அடைகிறான். நண்பன் பிரபாகருடன் செல்லும் வழியில் தங்கை சுலோசனாவைச் சந்திக்கிறான். அவள் மூலம் காவலர் தொடர்வதை அறிந்து மீனாட்சி அம்மன் கோவிலுக்குச் சென்று பின் வேறு வழியில் போராட்டக்காரர்கள் கூடும் இடத்திற்குத் தான் மட்டும் செல்கிறான். பிரபாகர் வீட்டிற்குச் செல்லும் வழியில் மணி காவலர்களால் சிறைப்படுத்தப்பட்டுச் செல்வதைக் காண்கிறான். பிரபாகரன் தன் தாயிடம் நிகழ்ந்ததைக் கூறும் போது அவனது தாய் ‘‘இராமனைத் தொடரும் இலெட்சுமணனைப் போல் நீ அவனை சுற்றிக் கொண்டிருந்தாய் அது எனக்குப் பெருமையாக இருந்தது. இப்போது அவனை போலீஸ் பிடித்திருக்கும் போது நீ மட்டும் தனியாக சுகமாக வீட்டுக்கு திரும்பி விட்டாயே இது நியாயமா?’’[13] என்றுகூறி மகனை மணியின் வீட்டில் செய்தியைக் கூறிவிட்டு வருமாறு சொல்கிறாள். மணியின் தந்தை, தாய் இருவரும் தன் மகன் சிறைபட்டிருப்பதை அறிந்து கவலையுறாது பெருமை அடைகின்றனர்.

பிரபாகரனின் தந்தையும் மணியின் விடுதலை வேட்கையை வரவேற்பதுடன் அவனைப் போற்றியும் கூறுகின்றார். இதனை ‘‘மணி சாதாரண மனிதன் அல்ல; அவன் ஆண் சிங்கம். இந்த சிங்கத்தைச் சிறையில் அடைப்பதால் சத்தத்தைக் கேட்டு மிரளும் மானாகிவிடாது இது உண்மை, இதுநிச்சயம்’’[14] என்னும் கூற்று விளக்கும். அந்த நேரத்தில் அங்கு வந்த

லலிதாவின் அண்ணன் இன்ஸ்பெக்டர் மோகன் உன் மகன் எங்கே என்று கேட்கிறார். ஏன் அவனையும் கைது செய்ய வந்தாயா? என்ற வினாவுக்கு இல்லை அவன் மணியின் தங்கையுடன் பழகுகிறான் இது ஆபத்தானது என்று கூறிச் செல்கிறார். மணியின் தங்கை சுலோசனாவை பிரபாகர் விரும்புகிறான். இதனை இரண்டு குடும்பமும் வரவேற்கிறது ஆனால் மோகன் இதனைத் தடுத்து சுலோசனாவைத் தன் மகனுக்கு மணம் முடிக்க விரும்புகிறார். இந்நிலையில் பிரபாகரன் தந்தை அவன் அறையைச் சோதனை செய்து சுதந்திர இயக்கத்துடன் தொடர்பு கொள்ளவில்லை என்பதை அறிகிறார். மணியின் தந்தை சுந்தரம் சுலோசனாவுக்கும், பிரபாகரனுக்கும் திருமணம் செய்ய நினைக்கிறார். சுலோசனாவும் அவ்வாறே செய்துவிடுங்கள் அப்பா அப்போது தான் நான் தேச சேவையில் ஈடுபடமுடியும். மோகன் என்னைக் கைது செய்ய முடியும். ஏனெனில் ‘‘சுதந்திரப் போராட்டத்தில் கலந்துகொள்ள என் கணவர் என்னை அனுமதிப்பார். சிறையென்றால் அழுவேன் போலீசுக்கு பயந்து களத்தில் இருந்து ஓடுவேன் என்று நினைக்க மாட்டார். என் உடம்பிலிருந்து பெருகும் இரத்தத்தால் இந்த மண் சிவக்கும் என்றால் அதற்காக அவர் பெருமைப்படுவார்’’[15] என்று கூறுகிறாள். மறுநாள் மோகன் சுலோசனாவை கல்லூரியில் சந்தித்து, தன் மகன் இரவியை மணம் புரிய இருபத்து நான்கு மணி நேரத்திற்குள் ஒப்புதல் அளிக்கவேண்டும் இல்லை என்றால் பிரபாகரைக் கைது செய்து விடுவேன் என்கிறார். மணி, பிரபாகரன் ஆகிய இருவருக்கும் நண்பனான முரளி என்பவன் இரவியிடம் சுலோசனா அவனை மணந்து கொள்வதாகவும் அதற்குப் பதிலாக மணி, பிரபாகரன் ஆகிய இருவரையும் விடுதலை செய்ய வேண்டும் என்று சுலோசனா கேட்கச் சொன்னதாகவும் கூறுகிறான்.

சுலோசனா பிரபாகரனுக்காக இரவியை மணப்பதாகக் கூறிக்கொண்டிருக்கும் நிலையில்இரவி தன் தந்தையின் மூலம் மணி, பிரபாகர் ஆகிய இருவரையும் கரூர் சிறைக்கு அனுப்ப உள்ளதை அறிகிறான். இரவி சுலோசனாவுடன் அவள் தோழி சியாமளாவின் அண்ணன் முரளியைச் சந்தித்துத் தன் திட்டங்களைக் கூறுகிறான். அதன்படி அனைவரும் செயல்பட முயலுகின்றனர். இன்ஸ்பெக்டர் மோகன்,இரவி, மணி, முரளி ஆகிய மூவருக்கும் விலங்கு இடுகிறார். சுலோசனா இரவியின் திட்டத்திற்கு நானும் உடந்தை ஆதலால் என்னையும் கைது செய்யுங்கள் என்கிறாள். மோகன் அவளைத் தன் வீட்டு மருமகள் என்று கூறி தன்னிடம் இருந்த தன் மனைவின் தாலியைப் பிரபாகரனிடம் கொடுத்து சுலோசனாவின் கழுத்தில் கட்டச் செய்தபின் பிரபாகரனுக்கும் விலங்கிட்டு நால்வரையும்அழைத்துச் செல்கிறார். லலிதா தன் குழந்தைகள் எப்பொழுது திரும்பி வருவார்கள் என்று கேட்க, சுந்தரம் ‘உலகம் என்பது கடவுளின் சதுரங்கப்பலகை’ அவரது காய்கள் மனிதர்கள். அந்தக் காய்களை எங்கே எப்போது நகர்த்துவது என்பதை அவர் தீர்மானிக்கிறார். அதைத் தெரிந்துகொள்ளும் சக்தி மனிதர்களுக்கு கிடையாது என்றுரைப்பதோடு கதை நிறைவு பெறுகிறது.

## 6. தேசபக்தன் கந்தன்

கா.சீ. வேங்கடரமணி எழுதிய தேசபக்தன் கந்தன் என்ற புதினம் இருநூற்று ஐம்பத்திரண்டு பக்கங்களையும், பதினேழு அத்தியாயங்களையும், கொண்டது. கதையின் பெரும் பகுதி நடைபெறும் இடமான ஆக்கூர் என்ற ஊரினை அறிமுகப்படுத்தும் விதமாகக் கதை தொடங்குகிறது. கந்தன், ரங்கன், இராஜேஸ்வரி மூவரும் ஆக்ஸ்போர்டில் ஐ.சி.எஸ் ஒன்றாய்ப் படித்தவர்கள். அக்காலத்திலேயே கந்தன் உதிரத்தில் நாட்டுப்பற்று ஊறியிருந்தது. அதனால் தாய்நாட்டிற்கு உழைக்கவேண்டும் என

விரும்பினான். தன் தாய்நாட்டின் சுதந்திரத்திற்காக ஐ.சி.எஸ் பட்டத்தைத் துறந்து தஞ்சை மாவட்டத்தில் தரங்கம் பாடிக்கு அருகில் உள்ள ஆக்கூர் கிராமத்திற்கு வந்து தொண்டாற்றுகிறான். தன்னால் இயன்ற அளவு மதுவிலக்குப் பிரச்சாரம் செய்கிறான். காந்தியடிகளின் ஒத்துழையாமை இயக்கத்தில் பங்கு கொண்டு அதைப்பற்றி மக்களிடம் எடுத்துக்கூறுவதுடன் தன் செலவில் சர்க்கா, பஞ்சு ஆகியவற்றை அளித்து நூல் நூற்க உதவுகிறான்.

வடக்கே வேலை பார்த்து வந்த ரங்கன் தெற்கே தஞ்சை மாவட்டத்திற்கு அசிஸ்டென்ட் கலெக்டராக மாற்றம் பெற்று வருகிறான். அவனுடன் பம்பாயில் ஒத்துழையாமை இயக்கத்தில் ஈடுபட்ட இராஜேசுவரியும் வருகிறாள். இவர்கள் இருவரும் தரங்கம் பாடியில் ஒருவாரம் தங்கிவிட்டு தஞ்சை செல்ல விருக்கின்றனர். இவர்களைக் கண்காணிக்க அரசால் நியமிக்கப்பட்ட பொன்னன் என்பவனும் அதே ரயிலில் வருகிறான். அவர்கள் இருவரும் அவனை அரசின் உளவாளி என்று சந்தேகித்துப் பேசிவரும் போது இராஜேசுவரி “அவன்,உன்னைப் பற்றி அளிக்கும் ரிபோர்ட் சரியாய் இல்லாவிட்டால் உனக்குத் தஞ்சாவூர் அசிஸ்டென்ட் கலெக்டர் பதவி கிடைக்காது மலைச்சரிவுப் பகுதிகளில் செட்டில்மென்டு ஆபிசர் பதவிதான் கிடைக்கும்”[16] என்று கூறுகிறாள். அதற்கு ரங்கன் அப்படி ஒரு வேளை நீ கூறியபடி கிடைத்தால் நான் வேலையை ஏற்றுக்கொள்ள மாட்டேன் என்கிறான். அவர்கள் பேச்சின் இடையில் கந்தனும் அவனது தேசத்தொண்டும் இடம்பெறுகிறது. பொன்னன் அவர்களை நம்பவைக்கும் முறையில் அரசினைக் குற்றம் கூறிப் பேசுகிறான்.

அதனால் இராஜேசுவரியும், ரங்கனும், பொன்னனிடம் தங்கள் மனத்திலுள்ள கருத்துக்களையும் செய்ய வேண்டியவைகளையும் மறைக்காது

கூறிவிடுகின்றனர். சுந்தரத்தின் மனைவி சரஸ்வதி ரங்கனின் தங்கை என்பது தெரியவருகிறது. பேச்சு மகிழ்வுடன் சென்று கொண்டிருக்க கந்தனும் வருகை புரிகிறான். முதலியாரும், ஆக்கூர் மக்களும் அரசுக்கு எதிராக ஒத்துழையாமை இயக்கத்தில் ஈடுபட முடிவு செய்கின்றனர். தரங்கம்பாடி வந்து ஐந்து தினங்கள் சென்றபின் ரங்கன் தஞ்சை செல்லவேண்டியநாளும் நெருங்கியது. அவ்வமயம் இராஜேசுவரி கந்தனிடம் “நீ செய்து வருவது தான் உண்மைத் தொண்டு, மக்கள் பைத்தியக்காரன் என்று சொன்னாலும் கலக்கமின்றிக் கிராம சீர்திருத்தத்திற்கு உழைப்பதுவே மேல்”[17]என்று கூறுகிறாள். அப்பொழுது பொன்னன் ரங்கனுக்கு ஒரு தந்தி வந்திருப்பதாகக் கூறுகிறான். அதை இராஜேஸ்வரி வாங்கிப் படிக்கிறாள் அதில் ரங்கனுக்கு “பழனிக்கு செட்டில்மெண்ட் ஆபிசராக மாற்றப்பட்டிருக்கிறீர் உடனே போய் வேலையை ஒப்புக்கொள்ளவும்”[18] என்ற செய்தி இருந்தது.

ரங்கன் கலெக்டர் வேலையை ராஜினாமா செய்கிறான்.முதலியாரும் இராஜேசுவரியின் வேண்டுகோளுக்கு இணங்கித் தேசத் தொண்டில் ஈடுபடுகிறார். ரங்கனும், இராஜேசுவரியும் ஊரூராய்ச் சென்று பிரச்சாரம் செய்கின்றனர். இதனால் தஞ்சை தாலுக்கா முழுவதும் ஒத்துழையாமை இயக்கம் காட்டுத்தீபோல் பரவி வருகிறது. முதலியார் பொதுக்கூட்டதன்று “இக்கூட்டம் நான் எதிர்பார்த்ததைவிட மிகவும் அதிகமாகி விட்டது இதுவே பொங்கிவரும் தேசபக்திக்கு அறிகுறியாகும்”[19] என்று கூறியதுடன் தான் கூட்டத்தின் உள்ளே சென்று டி.எஸ்.பியைப் பார்க்கப்போவதாகக் கூறிச் செல்கிறார். அவரை போலீஸ் தடுத்து மார்பில் ஈட்டியை வைத்துத் தள்ளியதைக் கண்ட முதலியார் ஆட்கள் அவர்களைக் கட்டி உருட்டி வீசுகின்றனர்.

ரங்கனும், கந்தனும் தங்களால் இயன்ற வரையில் கூட்டத்தை அடக்க முயன்றும் அது முடியவில்லை. போலீஸ் வீசிய குண்டு பொன்னன் காலில் பாய்கிறது. கந்தன் மார்பைக் குண்டு துளைத்ததும் கீழே விழுந்து விடுகிறான். இறக்கும் தருவாயில் தான் மறுபிறப்பில் இச்சோழநாட்டிலேயே பிறந்து அவர்களுடன் உழைப்பதாகவும் ரங்கனும், ராஜியும் சிறைசென்று திரும்பியதும் மக்களுக்காக உழைக்கவேண்டும் என்றும் கேட்டுக்கொள்கிறான். அனைவரும் நாடு சுதந்திரம் அடையும் வரை திருமணம் புரியவும், இல்லற இன்பத்தை நுகரவும் நினையோம் என்று வாக்குறுதி கொடுத்தனர். கந்தன் நீர் வேண்டுகிறான். அது கிடைக்கும் முன் உயிர் இழக்கிறான். சரஸ்வதி, சுதந்திரதாகத்தால் வருந்தி அது கிட்டும் முன்னே கந்தன் உயிர் நீத்தானே எனப் புலம்புகிறாள். இந்திய மக்களின் சுதந்திர தாகத்தை யாரால் தடுக்க இயலும் என்று கந்தன் உரைத்த மொழிகள் அவர்களுக்கு அமைதியையும், உத்வேகத்தையும் அளித்தது என்று கதை முடிகிறது.

## 7. பெண்

அகிலன் எழுதிய பெண் என்ற புதினம் கதைத்தலைவன், தலைவியை அறிமுகப்படுத்தும் விதமாகத் தொடங்குகிறது. நூற்று இருபத்தெட்டு பக்கங்களையும், இருபத்தொரு அத்தியாயங்களையும் கொண்ட இப்புதினத்தின் நாயகன், சந்தானம் நாயகி வத்சலா. சந்தானம் ஐ.சி.எஸ் படிப்பு படிக்கச் செல்லும் முதல் நாள் நிகழ்வுடன் கதை தொடங்குகிறது. தான் படிக்கும் காலத்தில் ஐ.சி.எஸ் படிப்பை வெறுத்த சந்தானம் திருமணம் என்ற வேலிக்குள் சிக்கியதால் மனைவியின் ஆசைப்படி தான் ஐ.சி.எஸ் படிக்க லண்டன் செல்ல இருப்பதை நினைக்க நினைக்க அவனுக்கே வியப்பாகவும், அதிர்ச்சியாகவும் இருந்தது. சிந்தனை ஓட்டத்தில் அவன் வாழ்வில் நடந்த பழைய நிகழ்ச்சி ஒன்று நினைவுக்கு வந்தது. நாட்டின்

மதிப்பிற்குரிய தலைவர் ஒருவர் கைது செய்யப்பட்டதும் கிளர்ச்சிகள் தோன்றின. மாணவர் சங்கச் செயலாளராக இருந்த சந்தானம் தலைமை வகித்துப் போராட்டம் நிகழ்த்தினான். அப்போராட்டத்தைத் தன் பேச்சால் தடுத்து நிறுத்திய கலெக்டர் அறிவுரையைக் கேட்டு வியந்தான். படிக்கும் காலத்தில் ஏழைப் பெண்ணை மணந்து நாட்டுக்குத் தொண்டாற்றும். இலட்சிய வாழ்க்கை வாழவேண்டும் என்ற கொள்கையை உடைய சந்தானம் கால ஓட்டத்தாலும், சூழ்நிலையாலும் தன் எண்ணத்திற்கு முற்றிலும் மாறான வாழ்வை வாழத் துவங்கினான்.

இலண்டன் சென்றவுடன் தன் மனைவிக்கு எழுதிய கடிதங்களில் இந்தியர்கள் இலண்டனில்படும் அவலநிலையையும் இழிவாக நடத்தப்படுதலையும் பற்றி எழுதிவந்தான். இலண்டனில் அவன் சந்தித்த இந்தியர்கள் கூறிய செய்தியிலிருந்து தூண்டப்பட்ட சந்தானம் உலகம் முழுவதும் நிறத்திமிரும், சாதித்திமிரும் தலைவிரித்தாடுகின்றது. இவற்றை அழித்து விடவேண்டும் அல்லது விடுதலை பெற்று உய்யவேண்டும் என்ற உணர்வுற்றவனானான். இதன் இடையில் நாட்கள் உருண்டோட சந்தானம் தான் ஐ.சி.எஸ் தேர்வில் வெற்றி பெற்றான். எனினும் அப்பட்டத்தைத் துறந்து வருகிறான்.‘‘நான் சந்தானம் ஐ.சி.எஸ் அல்ல; வெறும் சந்தானம் அவர்கள் அளித்த பட்டத்தை அவர்கள் தேசத்திலேயே விட்டுவிட்டு வருகிறேன்’’[20] என்று சந்தானம் எழுதிய கடிதம் அவனின் தேசபக்தியை நன்கு வெளிப்படுத்தும்.

நாடு திரும்பிய சந்தானம் பட்டத்தைத் துறந்ததற்காகத் தன் மனைவி தன்னை வெறுக்கிறாள் என்பதை உணர்ந்தவுடன் ஆசை, காதல், பாசம் எல்லாம் போலிப் பெருமைக்கும் பகட்டுக்கும் தானா என்று குமுறுகிறான். இருவருக்கும் இடையே திரைவிழுகிறது. கதையில் திருப்புமுனை ஏற்படுகிறது.

சோலைப்பாளையத்தில் உள்ள வேதாச்சலம் என்பவர் மகன் சுப்புரெத்தினம் நாட்டிற்காக விடுதலைப்போரில் ஈடுபட்டு சிறைவாசம், போலீஸ் தடிஅடி, ஆஸ்பத்திரிவாசம் என்று வாழ்ந்து வருகிறான். இந்தியாவின் விடுதலைக்காகத்தன் உயிர் உள்ளவரையில் போராடவேண்டும். என்றுகருதிய சந்தானம் தன் மனைவியிடம் ‘‘நான் என் கிராமத்துக்குச் செல்லவிரும்புகிறேன். நீயும் என்னுடன் வா,நம்மிடமிருக்கும் இந்தத் திரையகல அது வழிவகுக்கும். என்னுடன் வந்து ஒரு மாதம் தங்கியிரு உன்னைக்கட்டாயப்படுத்த வில்லை என்றான்’’[21]

இதைக்கேட்ட வத்சலா எனக்கு அந்தப்பட்டிக்காட்டிற்கு வர விருப்பமில்லை என்றாள். உடனே சந்தானம் புறப்பட்டு விடுகிறான். கிராமத்தில் அனைவரும் அவனை மாலையிட்டு வரவேற்றனர். மாலை பொதுக்கூட்டத்தில் சந்தானம் பேசும் போது ‘‘நமது தேவைகளை நிறைவு செய்யவிடாது தடைசெய்யும் அடிமைத்தனத்தைத் தீயிட்டுப் பொசுக்குவோம்’’[22] என்று கூறினான். அவன் பேச்சு மக்கள் மனதில் ஒளியை ஏற்படுத்தியது. செய்தித்தாள்களில் சந்தானம் பற்றிய செய்திகள் வெளிவந்தன. திடீரென்று ஒருநாள் போலீஸார் சந்தானத்தை கைது செய்து அழைத்துச் சென்றனர். அவனுக்கு ஒரு வருட கடுங்காவல் தண்டனை கிடைத்தது. இதை கேட்டவுடன் இடி தாக்கியது போல் வருந்திய வத்சலா அழுது துடித்தாள், புலம்பினாள் என்றாலும் சிறைக்குச் சென்று அவனைக் காண விரும்பவில்லை. ஒருநாள் அவளது தோழி சுபத்திராவிடமிருந்து வந்த கடிதத்தைக்கண்ட பின்,சுபத்திரா வீட்டிற்குச் செல்கிறாள். வீட்டில் சுபத்திராவின் அண்ணன் அடிபட்டுப் படுக்கையில் இருந்தான். அதற்கான காரணத்தைக் கேட்டவுடன் வத்சலாவின் மனம் துடிதுடித்தது.

கிராமத்திலிருந்த சுபத்திராவின் கணவன் ராமசாமியைக் கூட்டத்திற்கு அழைத்துப்போக வந்திருந்தனர் அவர்களுடன் சுபத்திராவும், வத்சலாவும் சென்றனர். கூட்டம் நன்கு நடந்து கொண்டிருந்தது. திடீரென்று ஒரு கல் வந்து ராமசாமியை தாக்கியது இரத்தம் சொட்டத் தலையைப்பிடித்துக் கொண்டு இராமசாமி கீழே உட்கார்ந்தான். வத்சலாவின் உடலும் உயிரும் துடித்தது. அவள் மேடையில் ஏறி குடியைக் கெடுக்கும், குடியை நிறுத்தச் சொல்ல வந்ததற்காக எவனோ ஒரு பேடி மறைந்து இருந்து கல்லை வீசியுள்ளான். அவன் மீண்டும் கல்லை எறிவான் ஆனால் அதைத் தாங்க, வரவேற்க நான் தயார் என்று நெருப்புக் கனலை வீசினாள். அவளது சொற்களைக் கேட்ட ஜமீன்தார் நாளைமுதல் இங்கு கள்ளுக்கடை இல்லை என்றார். இது இந்த நிமிட உணர்ச்சி இல்லை என்றும் கூறினார்.

சந்தானம் விடுதலையாகி வரும் நாளன்று மக்களோடு மக்களாக நின்ற வத்சலா வெகுசிரமப்பட்டு சந்தானத்தின் முன் வந்து“பக்தியோடு அவனைநோக்கி கரமலர் குவித்து வணங்கினாள். பின் கீழே விழுந்து அவன் பாதங்களைப் பற்றி கொண்டு கண்களால் நீர் வார்த்தாள்”[23] சந்தானம் அவளைத் தூக்கி வத்சலா என்று அன்போடு அழைக்க சுதந்திரப் போராட்டத்தில் வத்சலா இணையும் நிலையில் கதை முடிவடைகிறது.

## 8. அபலையின் கண்ணீர்

கல்கி எழுதிய அபலையின் கண்ணீர் என்ற புதினம் அறுபத்திரண்டு பக்கங்களையும், ஆறு பாகங்களையும் கொண்டது. புரட்சி இயக்கத் தலைவன் சிவராசனை அறிமுகப்படுத்தும் விதமாகக் கதை தொடங்குகிறது. சிவராசன் 1942-இல் நடந்த போராட்டத்தில் தலைமறைவாயிருந்து போலீசாரிடம் சிக்காமல் புரட்சி இயக்கத்தைத் தொடங்கியவன். பின்

தானாகவே சரணடைந்து இரண்டு வருட தண்டனைக்குப் பிறகு வெளியில் வந்தபின் கறுப்பு மார்க்கெட்டில் புகுந்து துப்பறிந்து இன்ஸ்பெக்டர் தன்ராஜனிடம் அதைப்பற்றித் தெரிவித்து அவர்களுக்குத் தண்டனை கிடைக்கச் செய்தான்.

துரைராஜ் என்பவர் உலகப்போரின் போது யுத்தக் கடன்களும், நன்கொடைகளும் கொடுத்து அரசியல்வாதிகளைத் தன் வசப்படுத்திக்கொண்டார். சட்டசபைத் தேர்தலின் போது தமக்கு வேண்டியவர்களை நிறுத்தினார். இவர்களைக் கறுப்பு மார்க்கெட்டில் பிடிக்க சிவராஜனும், தன்ராஜனும் ஆலோசனை நடத்தினார்கள். இதை அறிந்த ஜில்லா நீதிபதியும், போலீஸ் அதிகாரியும் தன்ராஜனை அழைத்து, துரைராஜ் மந்திரி சபை வரையில் செல்வாக்கு உள்ளவர். அவர் விசயத்தில் ஜாக்கிரதையாக இருக்கவேண்டும் என்கின்றனர். ஒருநாள் மந்திரி ஒருவர் சிவராஜனை அழைத்து ‘‘கறுப்பு மார்க்கெட்டைக் கண்டுபிடிப்பதில் உங்களுக்குள்ள ஆர்வத்தைப் பாராட்டுகிறேன். கொஞ்சநாளைக்கு இதை நிறுத்தி வைத்தால், காங்கிரசின் கௌரவத்தை நிலைநாட்டப் பெரிதும் உதவி செய்ததாகும் என்று மறைமுகமாகத் துரைராஜனையும் மற்ற எம்.எல்.ஏக்களையும் கண்டுகொள்ளாமல் இருக்கும்படி கூறுகிறார்’’[24] சிவராஜன் மனச்சாட்சிக்கு விரோதமாக என்னால் ஒன்றும் செய்யமுடியாது என்று கூறுகிறார். ஒருநாள் சிவராஜைப் பார்க்க வந்த தன்ராஜ் அவன் வெளியில் சென்றவுடன் அவன் மேஜையைத் துழாவி சிவராஜீக்கு வந்த கடிதத்தைப் படித்துவிட்டு தன் சட்டைப்பைக்குள் போட்டுக் கொள்கிறார். மாலை வீட்டிற்குச் சென்றதும் தன் மேஜையில் ஒரு கடிதத்தைப் பார்க்கிறார். இரண்டு கடிதங்களின் கையெழுத்தும் ஒரே மாதிரி இருந்தது. அதில் இரவு பத்தரை மணிக்கு கோனார் வீதியில் உள்ள இரட்டைமாடி வீட்டிற்குச் சென்று

பார்க்கவும்; அங்கே சிவராஜைக் கண்டுபிடித்தால் உங்களுடைய அதிர்ஷ்டம் என்றிருந்தது.

அவன் உள்ளத்தில் இது, துரைராஜின் வேலையாக இருக்கும் என்ற எண்ணம் உதித்தது. சிவராஜ் தனக்கு வந்த கடிதத்தின் படி இரவு பத்தரை மணிக்குக் கோனார் வீதியில் உள்ள இரட்டைமாடி வீட்டிற்குத் தன்ராஜ் சென்றார். அங்கு சிவராஜ் உட்கார்ந்து இருக்கிறான். அவனுக்குப் பின்னால் ஒரு முரட்டு மனிதன் கையில் கட்டையுடன் வந்து சிவராஜனை அடிக்கிறான். அவன் சுயநினைவு இழக்கிறான். நான்கு நாட்கள் கழித்து உணர்வு பெற்றவுடன், பார்வதி என்னும் பெண் வந்து தன் பெயர் வனஜா என்றும், தான் சினிமாவில் நடிக்க விரும்பியதாகவும், துரைராஜிடம் சென்று கேட்டதற்குத் தனக்கு ஒரு சோதனை வைப்பதாகவும், அதில் வெற்றி பெற்றால் வாய்ப்புத் தருவதாகக் கூறியதை ஏற்றுத் தன் தங்கையுடன் திட்டம்தீட்டி சிவராஜை வரவழைத்ததாகவும் அங்கு அவளது தந்தை வந்து சிவராஜை அடித்ததாகவும் கூறுகிறாள். இதனால் சிவராஜுக்கு தன்ராஜ் மேல் உள்ள கோபமும், ஐயமும் நீங்குகிறது. இறுதியில் இன்ஸ்பெக்டர் தன்ராஜ் ‘‘தொழிலில் பிளாக்மார்க் பெற்று வேறு ஜில்லாவுக்கு மாற்றப் பெற்றார்.’’[25] துரைராஜ் உணவு கமிட்டியின் தலைவர் ஆனார். வனஜா வேலையிலிருந்து நிறுத்தப்பட்டாள். உள்ளூர் காங்கிரஸ் கமிட்டி சிவராஜ் மீது நம்பிக்கையில்லாத்தீர்மானம் நிறைவேற்றியது என்று கதை நிறைவுபெறுகிறது.

## 9. சர்க்கா

பி.எம் இராஜகோபாலன் எழுதிய சர்க்கா என்ற புதினம் இருநூற்று முப்பது பக்கங்களையும், முப்பத்தொரு அத்தியாயங்களையும் உடையது. கதைத் தலைவன் இராமமூர்த்தி மற்றும் தேவநாதன், கல்யாணி போன்றோரை

அறிமுகப்படுத்தும் முறையில் கதை தொடங்குகிறது. இராமமூர்த்தி பி.ஏ படிக்கும் போது நாட்டில் ஏற்பட்ட சுதந்திரப் போராட்ட எழுச்சி அவன் மனதில் ஒரு ஆர்வத்தைத் தூண்டியது. தன் உணர்ச்சிகளைப் பிரசங்கங்களிலும், கட்டுரைகளிலும் வெளிப்படுத்தினான். படித்து முடித்தவுடன் சுதந்திரப் போரில் ஈடுபடவேண்டும், நாட்டின் முன்னேற்றத்திற்காகத் தொண்டு செய்யவேண்டும், ஒரு பத்திரிகையை ஆரம்பித்து தேசத் தொண்டிற்கு உழைக்க வேண்டும் என்று விரும்பினான்.

இச்சூழலில் தலைவர்கள் பலர் சிறை செய்யப்பட்டு கடுங்காவல் தண்டனைபெற்றனர். இதனால் ஆத்திரம் அடைந்த இராமமூர்த்தி மாணவர்களிடையே பெரும் குழப்பத்தை உண்டாக்கினான். இதனால் இராமமூர்த்தி சிறைப்படுகிறான். சிறையில் இருக்கும் போது அவன் அன்னை டைப்பாயிடு காய்ச்சலால் இறந்து விடுகிறாள். அதிகாரிகள் அவனை விடுதலை செய்ய முன்வரவில்லை. அதனால் வைராக்கியம் பெற்ற இராமமூர்த்தி தன்னை தேசத்துக்கே அர்ப்பணம் செய்து கொண்டு தேசத்தின் அடிமைத்தளையை உடைத்து எறிவதில் முழுமூச்சுடன் ஈடுபடுவது என முடிவு செய்கிறான். அவனது சர்க்கா என்ற நூலினைப் பெற தேவநாதனும், கல்யாணியும் வருகின்றனர். ‘‘சர்க்கா என்ற அந்த பத்திரிகையைப் புரட்டிப்பார்த்த கல்யாணி இதைக்கண்டால் என் அப்பாவிற்கு மிகவும் சந்தோசமாக இருக்கும்’’[26] என்கிறாள். இராமமூர்த்தி தான் அதனை அவருக்குத் தபாலில் அனுப்பிவிட்டதாகக் கூறுகிறான்.

சுந்தரராஜன் தனது வக்கீல் தொழிலை நிராகரித்துவிட்டு, தனது சொந்த கிராமமான தேவிபுரத்திற்கு வந்து அதன் முன்னேற்றத்திற்குப் பாடுபட முனைந்தார். கல்யாணி சர்க்காவின் தலையங்கத்தில்‘‘நம் தேசத்தின் ஒவ்வொரு கிராமமும் விழித்துக் கொள்ளவேண்டும். கிராமங்களில் குவிந்து

கிடக்கும் இருளை வேருடன் அறுத்து எறிவது அந்நிய ஆட்சியைப் பிடுங்கி எறிவதற்கு இணையாகும்''[27] என்று எழுதியிருந்தது. இதைப்படித்த கல்யாணி தனது கல்லூரியில் 'இராட்டையின் மூலம் சுயராஜ்ஜியம்' என்ற தலைப்பில் சொற்பொழிவாற்ற இராமூர்த்தியை அழைக்கிறாள். சொற்பொழிவில் இராமமூர்த்தி கூறியகருத்துகள் அவளைத் தேச சேவையின் பால் திருப்புகிறது. கல்யாணி கடைக்குச் சென்று கதர்ஆடைகளும், இராட்டினமும் வாங்கிவந்ததுடன் நாள் தவறாமல் இராட்டினத்தில் நூற்கவும் ஆரம்பித்தாள். படிப்பை முடித்துவிட்டு வந்த கல்யாணி தேவிபுரத்தில் உள்ள ஆசிரமத்தில் தினமும் நூல் நூற்றதுடன் தேசத் தலைவர்களின் வரலாறுகளைக் ஆசிரமவாசிகளுக்குக் கூறியும் வந்தாள்.

தேவி புரத்தில் வாழும் சுந்தரராஜன், ''சர்க்காவின் உயர்ந்த நோக்கங்களை பரவச்செய்ய என்னால் இயன்ற உபகாரத்தைச் செய்ய நான் எப்பொழுதும் தயாராக இருப்பேன்''[28] என்று இராமமூர்த்தியிடம் கூறினார். இந்த நேரத்தில் கல்யாணி இன்டர் முதல் வகுப்பில் தேறியது, தேவநாதனின் தந்தை வருகை ஆகிய செய்திகளைத் தாங்கிய கடிதங்கள் வருகின்றன. தேவநாதனின் தந்தை சுந்தரராஜனிடம் தேவநாதன், கல்யாணி திருமணம் பற்றி வினவிய போது, இன்னும் ஒரு வருடம் கழித்துத் திருமணம் செய்யலாம் என்று கூறிவிடுகிறார். கல்யாணியின் தந்தை தன் மகளின் தேர்ச்சியினை விழாவாகக் கொண்டாடுகிறார். விழாவிற்கு வந்த கல்யாணியின் தோழி நிர்மலாவைத் தேவநாதன் விரும்ப ஆரம்பிக்கிறான். தேவநாதனுக்கும், நிர்மலாவிற்கும் திருமணம் நிச்சயமாகிறது. இதனை அறிந்த கல்யாணி தன்னை தேசத்திற்காக அர்ப்பணம் செய்கிறாள்.

கல்யாணியின் தேச விடுதலை குறித்த கட்டுரைகள் சர்க்காவிலும், மற்றபல பத்திரிகைகளிலும் வெளிவந்தன. இந்த நேரத்தில் சுந்தரராஜன் வேணுகோபாலசுவாமி கோவிலுக்குள் சேரி மக்களை அனுமதிக்கவேண்டும் என்று கேட்டுக் கொண்ட போது முதலில் எதிர்ப்பு வந்தது. பின் பெரும்பான்மையானவர்கள் ஒப்புக்கொண்டனர். இதற்காகத் தேவிபுரத்தில் உள்ள பொன்னம்பலம் என்பவன் சுந்தரராஜனைப் பழிவாங்கவேண்டும் என்று துடித்துக்கொண்டிருந்தான். அதன்படி சுந்தரராஜன் வரும் போது மலையிலிருந்து ஒரு கல்லை உருட்டிவிடுகிறான். அது சுந்தரராஜனைப் படுகாயப்படுத்தி மரணப்படுக்கையில் தள்ளியது. கிராமமக்கள் அனைவரும்பொங்கலுக்கு மறுநாள் கோவிலுக்குள் செல்வதைப் பார்த்து மகிழ்ந்தசுந்தரராஜன் ‘‘கல்யாணியிடம் நான் இனிப் பிழைக்கமாட்டேன்; ஆசிரமத்தைக் கைவிடாதே, சர்க்காவையும் கைவிடாதே என்று கூறியவாறு உயிர் விடுகிறார்’’[29] கல்யாணி இராமமூர்த்தியைத் தேவிபுரத்திலிருந்தே சர்க்காவை வெளியிடலாம் எனக்கூறி வரவழைக்கிறாள். ஒருநாள் பொன்னம்பலம், ஆசிரமத்திற்கு வந்து இராமமூர்த்தி, கல்யாணி ஆகிய இருவர் கால்களிலும் விழுந்து சுந்தரராஜனைக் கொன்றது தான் தான் என்றும், தனக்கு தண்டனை வழங்கும்படியும் கேட்டனன். அவர்கள் அவனை மன்னித்ததுடன் யாரிடமும் கூறுவதில்லை என்றும் கூறுகின்றனர். திருந்திய பொன்னம்பலம் ஆசிரமம், சர்க்கா ஆகியவற்றின் வளர்ச்சிக்குத் தன்னால் இயன்ற உதவிகளைச்செய்து வருகிறான். இச்சமயத்தில் தேவிபுரத்தில் மழை பெய்யாததால் பெரிய பஞ்சம் ஏற்பட்டது. பஞ்சநிவாரணத்திற்காக ராமமூர்த்தியுடன் தேவநாதனைப் பார்க்கக் கல்யாணி சென்னை செல்கிறாள். அவர்கள் வருவதற்கு முன் தேவநாதனிடம் நிர்மலா, நாட்டியப்பள்ளிக்கு அன்பளிப்பாகப் பணம் கேட்கிறாள். கல்யாணிக்கு தேவநாதன் ஆயிரம் ரூபாய்

அளிக்கிறான். வேண்டா வெறுப்பாக நிர்மலாவிற்கும் ஆயிரம் ரூபாய் தருகிறான். இதனால் நிர்மலா அவனிடம் கோபித்துக் கொண்டு தந்தை வீடு செல்கிறாள்.

1930-இல் ஏற்பட்ட சட்டமறுப்பு இயக்கத்தின் போது சர்க்கா பத்திரிகைக்கும் தேவிபுரத்திற்கும் தமிழ்நாடெங்கும் மதிப்பு ஏற்பட்டது. அரசு சர்க்காவின் ஆசிரியரான இராமமூர்த்தியைக் கைது செய்தது. கல்யாணி தொடர்ந்து சர்க்காவை நடத்தியதால் அரசு, நிறுவனத்திற்குச் சீல் வைத்தது. ஆனால் கல்யாணியின் மூலம் சர்க்கா வெளிவந்து கொண்டிருந்தது. கல்யாணியை அடக்க அவளுடைய சொத்துகளை அரசு கைப்பற்றியது. எனினும் சர்க்கா வந்து கொண்டிருப்பதை அறிந்து அதன் ரகசியத்தைக் கண்டுபிடிக்கமுடியாமல் கல்யாணியைச் சிறை செய்தனர். இதன் இடையில் கார் விபத்தில் நிர்மலா இறந்துவிடுகிறாள். இராமமூர்த்தி, கல்யாணி இருவரும் ஓராண்டிற்குப் பின் விடுதலை ஆகின்றனர். அவர்களது பத்திரிகை, மற்றும் சொத்துக்கள் எவ்வித நிபந்தனையும் இன்றி அவர்கட்கு வழங்கப்பட்டது. இரண்டு மாதங்களுக்குப் பின் தேவநாதன் கதர் உடுத்திக் கொண்டு தேவிபுரம் செல்கிறான்.அவனைக் கண்ட கல்யாணி அமைதியுடன் அவனை ஏற்கிறாள். இராமமூர்த்தி மகிழ்கிறான். கோவில் மணி இதனை ஏற்கும் வண்ணம் அடித்தது என்றுகதை முடிவடைகிறது.

## 10. இன்பநினைவு

அகிலனின் இன்பநினைவு என்ற புதினம் பன்னிரெண்டு அத்தியாயங்களையும், எழுபத்து மூன்று பக்கங்களையும் உடையது. கதைத் தலைவன் இராமநாதனையும், துணைத்தலைவன் சுப்பையாவையும் அறிமுகப்படுத்தும் விதமாகக் கதைதொடங்குகிறது. இராமநாதன் தான்

எழுதிய பெண் என்ற புதினத்தின் கையெழுத்துப் பிரதியைச் சிறைத் தோழனான சுப்பையாவிடம் கொடுக்கிறார். அதில் ராமநாதன், பெண்மை வாழ்விக்கப் பிறந்த உயர் பிறவி, போற்றுதற்கு உரியது என்று எழுதியிருந்தார். இதைப் படித்த சுப்பையா "பெண் அழகான விஷம், மிருதுவான வஞ்சனையின் உருவம், மென்மையான சாகசத்தின் பிறப்பிடம், முட்கள் நிறைந்த இதழ்களை உடைய மலர், கொடுமை நிறைந்த மதுவின் ஆழம்,பெண்களைப் புரிந்துக்கொள்ள முடியாது, புரிந்துகொள்ளவும் அனுமதிக்க மாட்டார்கள்"[30] என்றுரைத்து தான் கமலம் என்னும் பெண்ணால் ஏமாற்றப்பட்டதை விளக்குகிறார்.

இந்நிலையில் கதை பின்னோக்கிச் செல்கிறது. இராமநாதன் தன் கல்லூரிப் படிப்பை முடித்துவிட்டு சொந்த ஊரான கரூருக்குச் செல்கிறார். அங்கு ஏற்பட்ட அந்நிய வன்முறைகளைக் கண்டித்து மூவர்ணக்கொடியை ஏற்றி ஆர்ப்பாட்டம் செய்கிறார். போலீசார் ஆர்ப்பாட்டம் செய்தவர்களைச் சிறை செய்து அவர்களை நடுக்காட்டில் கொண்டு போய் விட்டனர். இராமநாதன்காட்டில் நரிகளால் தாக்கப்பட்டுக் குற்றுயிராகக் கிடந்தார். அவர் கண் திறந்து பார்க்கும் போது கட்டிலில் கிடப்பதையும் தன் அருகில் கமலம் நிற்பதையும் அறிகிறார். இராமநாதன் பொன்னாங்குடிக்கு வந்திருப்பது இது இரண்டாவது முறை. இரண்டுவருடங்களுக்குமுன் இண்டர் படிப்பு முடிந்து விடுமுறையில் தன் மாமாவின் வீட்டிற்கு வந்தார். அங்கு வந்த சில நாட்களில் கமலம் அறிமுகமாகிறாள். சாதாரணமாகத் தோன்றிய நட்பானது இறுதியில் காதலாக மலர்கிறது. கல்லூரிப் படிப்பு முடிந்தபின் பெற்றோர் அனுமதியுடன் அவளைமணந்து கொள்வதாகக் கூறிவிட்டுச் செல்கிறார். திருச்சிக்கு வந்தவுடன் நிலைமை மாறுகிறது. அவரது எண்ணம் தேசிய விடுதலைப் போராட்டத்தில் செல்கிறது. ஒருமுறை மகாத்மா காந்தியைக்

காணும் வாய்ப்பு ஏற்படுகிறது. அது இராமநாதனுடைய வாழ்க்கையில் மாறுதலை ஏற்படுத்தியது. காந்தியடிகள் இராமநாதனிடம், ''கல்யாணத்தை தள்ளிப் போடும்படியும், கூடுமானால் பிரம்மச்சாரியாக இரு என்றும் கூறிவிட்டுச் செல்கிறார்.''[31] இவ்வறிவுரை இராமநாதனின் வாழ்வின் போக்கையே மாற்றிவிட்டது.

இராமநாதன் தனக்குத் திருமணமே வேண்டாம் எனக் கூறியதுடன் தன்னுடைய எண்ணத்தையும் தெரிவிக்கிறார். அதன் பின் தீண்டாமை ஒழிப்பு, கதர் துணி விற்றல், அந்நியத்துணி எரிப்புப் போராட்டம் இவற்றைப் பேச்சு, எழுத்து, செயல் மூலம் இடைவிடாது ஆற்றிவந்தார். வழக்கமாக விடுதலைப் போராட்டத்தில் ஈடுபடுபவர்கட்குக் கிடைக்கும் பலன் இராமநாதனுக்கும் கிடைத்தது. ஐந்து முறை வெவ்வேறு சிறைச்சாலைகளில் கைதியாக இருந்து விட்டு, ஆறுமாதக் கடுங்காவலில் இருக்கும் போது தான் பெண் தெய்வம் என்ற புதினத்தைச் சுப்பையாவிடம் படிக்குமாறு கூறுகிறார்.

சுப்பையாவிடம் தான் விடுதலை ஆனபிறகு அமைதிமிகுந்த ஒரு கிராமத்தில் குடியேறி கிராமத்துப் பிள்ளைகளுக்கும், முதியவர்களுக்கும் எழுத்தறிவிக்கப் போவதாகவும் ஓய்வு நேரத்தில் சுற்று வட்டாரங்களில் காந்தீயப்பிரச்சாரம் செய்யப் போவதாகவும், முடிந்தால் பத்திரிகைகளுக்கும், புத்தகங்களுக்கும் எழுதப்போவதாகவும் கூறினார். கூறியது போல் விடுதலையானதும் சோலைப்பாளையம் என்ற கிராமத்தைத் தேர்ந்தெடுத்து பள்ளிகூடத்தைத் துவங்கினார். பகலில் சிறுவர், சிறுமியர்களுக்குக் கல்வி, இரவில் முதியவர்களுக்குப் பாடம் என்று வாழ்வை நடத்த ஆரம்பித்தார். அன்பினால் எதையும் சாதிக்க முடியும் என்பதை உணர்த்தினார். நாளடைவில் அக்கிராமத்தின் தந்தையாகப் போற்றப்பட்டார்.ஒருநாள் பாலு என்ற மாணவன் தன் தாய் அவரை அழைத்து வரும்படி கூறியதாகக் கூறி அழைத்துச்

செல்கிறான். அவரைப் பார்த்த பாலுவின் தாய் “தன்னை யார் என்று தெரிகிறதோ? என்று கேட்டாள். அவளை உற்றுப் பார்த்தவுடன் அவரது நெஞ்சில் மின் வெட்டியது; பொன்னாங்குடி என்று ஆரம்பித்தவரிடம் அந்த பாழாய்ப் போன ஊர் தான் என்று பாலுவின் தாய் கூற உடன் கமலம் என்று அலறினார்.”[32] நீங்கள் திருமணத்தை மறுத்ததால் உங்களைப் பிரிந்து என்னால் வாழமுடியவில்லை. என் பெற்றோர் எனக்கு திருமணம் செய்வித்தனர். அவரிடம் முழுமனத்துடன் ஈடுபட்டு வாழமுடியவில்லை. எங்களிடையே விரிசல் ஏற்பட்டது அதனால் அவர் எங்களை விட்டுச் சென்றுவிட்டார். இன்று நான் உள்ளத்தாலும் தூய்மை அடைந்து விட்டேன். நீங்கள் என் அண்ணா அடுத்த பிறவி என்று இருந்தால் நான் என் கணவருக்கே மீண்டும் மனைவியாக வேண்டும் என்று கூறி பாலுவை அவர் கையில் பிடித்துக் கொடுத்தாள். “என்றாவது அவரை நீங்கள் சந்திப்பீர்கள்; அப்போது அவரிடம் என் கண்மணி பாலுவை ஒப்படைத்து என் மன்னிப்பைத் தெரிவியுங்கள்.”[33] என்று கூறியவள் தன் தலையணைக்கு அடியில் இருந்த ஒரு புகைப்படத்தை எடுத்துக் கொடுத்தாள், அதைக் கண்ட இராமநாதன் தன்னை மறந்து சுப்பையா என்று வாய்விட்டு அலறினார். இராமநாதனின் சத்தம் அடங்குவதற்குள் யாரது என்று கேட்டுக் கொண்டே உள்ளே ஓடி வந்தார் சுப்பையா. கமலம் படுக்கையில் இருந்து புரண்டு சுப்பையாவின் காலில் விழுந்து தன்னுடைய கரங்களால் அவரது பாதங்களைக் கட்டிக்கொண்டு சாமி என்று கூறியவாறு தன் இன்னுயிரை நீத்தாள். அன்று சோலைப்பாளையத்து ஆற்றங்கரையில் மூன்று பேருடைய இளமைக் கனவு கொழுந்துவிட்டு எரிந்தது என்று கதை நிறைவு பெறுகிறது.

## 11. நெஞ்சின் அலைகள்

அகிலன் எழுதிய நெஞ்சின் அலைகள் என்ற புதினம் நாற்பத்திரண்டு அத்தியாயங்களையும், இருநூற்று அறுபத்தெட்டு பக்கங்களையும் கொண்டது. புதினத்தின் கதாநாயகன் வாசுதேவனை அறிமுகப்படுத்தும் விதமாகக் கதை தொடங்குகிறது. அவன் தனது ஒன்று விட்ட தாய்மாமன் தர்மலிங்கத்தின் சுருட்டுக் கம்பெனியில் வேலை பார்க்கிறான். தர்மலிங்கத்தின் இரண்டாவது மனைவியின் தம்பி பசுபதி வாசுவை நோக்கி ‘‘நீ ஒரு குமாஸ்தா; எழுத்து வேலையை மட்டும் கவனி, தொழிலாளர்களை மேற்பார்வை செய்வது உன்வேலை அல்ல என்று கூறுகிறான்.’’[34] பகலில் நடந்த செயலால் மனமுடைந்து வீட்டிற்குச் செல்லாமல் திரையரங்கில் ஆங்கிலப்படம் பார்க்கச் செல்கிறான் வாசு. இடைவேளையின் போது மாமாவின் பெண் கனகத்தைச் சந்திக்கிறான். படம் முடிந்தபின் இருவரும் ஒன்றாக இணைந்து நடந்து செல்கின்றனர். திடீரென்று அவர்கள் எதிரே வந்த கனகத்தின் தந்தை தர்மலிங்கம் வாசுவைக் கண்டபடி திட்டிவிட்டு உனக்கும் எனக்கும் எந்த சம்பந்தமும் இல்லை.நாளையிலிருந்து வேலைக்கு வரவேண்டாம். சம்பளபாக்கி நாளை உன் வீட்டிற்கு வரும்என்று கூறிவிட்டுக் கோபத்துடன் செல்கிறார். வாசு வேலை தேடிச்சென்ற இடங்களில் எல்லாம் பசுபதி இவனைப்பற்றி அவதூறாகக் கூறி வேலை கிடைக்காமல்செய்துவிடுகிறான். ஒருநாள் தெருவில் வரும் போது பட்டாளத்தாரின் வண்டி அவன் மீது மோதிவிட மயிரிழையில் உயிர் தப்புகிறான். அந்த டிரைவர் போகும் போது ‘‘பட்டாளத்தார் காரில் விழுந்து சாவதைவிட பட்டாளத்திலேயே சேர்ந்து சாகலாமே’’[35] என்று கூறிச் செல்கிறான். அவனுடைய சொற்கள் வாசுவை சிந்தனை செய்யவைத்தது. சென்னையில் தனக்கு வேலை கிடைத்துள்ளது, விற்பனைக்காக வெளியூர் செல்லவேண்டும் என்று தன் தாயிடம் கூறியதும் தாய் மறுக்கிறாள். ஆனால் வாசு தான் கிளம்புவது உறுதியென்றும் அன்றே

புறப்படவேண்டும் என்று கூறுகிறான். மதிய உணவிற்கு வந்த தன் தம்பியிடம் உண்மையைக் கூறி தாயைப் பத்திரமாகப் பார்த்துக் கொள்ளச் சொல்லிவிட்டுச் சென்று விடுகிறான்.

இராணுவ முகாமில் முதல் கூட்டம் நடைபெற்றவுடன் அதனைப்பற்றி பேசிக் கொண்டு வரும் போது ஹவில்தார், தேசம், காந்தி, சுதந்திரம் என்ற பேச்சு இனிமேல் கூடாது, எவனாவது வாயைத் திறந்தால் அந்த இடத்திலேயே அறைந்து கொன்று விடுவேன் என்று பேச்சுரிமைக்குப் பூட்டுப் போடுகிறார். சிக்னல் கோர் செய்தியறிவிக்கும் ஸ்தாபனத்தில் வாசுவிற்கு வேலை.அவன் நண்பர்களும் அவனுடன் இருந்தனர். அங்கிருந்த அமர்சிங் என்ற இராணுவ அதிகாரி இங்கு காந்தி பிரச்சாரமா செய்கிறாய்? என்று கூறி அவனைக் காராக்கிரகத்தில் அடைத்தான்.

தாய்லாந்திற்கும், பர்மாவிற்கும் இருப்புப்பாதை போடும் வேலைக்காக வாசு பர்மாவிற்கு அழைத்துச் செல்லப்பட்டான். இச்சூழலில் சுபாஷ்சந்திரரின் தலைமையில் சுதந்திர இந்திய தற்காலிக அரசு உதயமாகியதை அறிந்து, வாசுவும் அதில் இணைகிறான். சுபாஷ்சந்திரபோஸ் பேசும் போது ‘‘இந்தியாவை விடுதலை செய்ய வேண்டுவது நமது முதற்கடமை. அதனை மறப்பதோ, வேறுயாருக்கும் கொடுப்பதோ மானமற்றசெயல். இந்த தூரக்கிழக்கில் உள்ள முப்பது இலட்சம் இந்தியர்கள் ஒன்றாய்த் திரண்டு நமது விடுதலைக்காகக் கடைசிவரைப் போராடுவோம்.’’[36] என்று முழங்கினார்.

1942-இல் நடந்த ஆகஸ்டுப் புரட்சியின் போது ராணுவ அதிகாரி ஒரு பெண்ணிடம் தவறாக நடக்க முயற்சிக்கிறான். அவனை எதிர்த்துக் கேட்டதற்காக வாசுவின் தம்பி சிறையில் அடைக்கப்படுகிறான். ரங்கோனில் வாசு செய்தி இலாகாவில் பொறுப்புள்ள பதவிக்கு உயர்த்தப்பட்டான். மேலதிகாரிகள் அவனைப் பாராட்டும்படி நடந்துகொள்கிறான். இதனிடையில்

தா்மலிங்கம் உடல் நலமின்றிச் சிகிச்சைக்குச் சென்று திரும்பியவர் பசுபதிக்கும், கனகத்திற்கும் திருமணம் நடத்தவேண்டும் என்கிறார். கனகம் வாசுவைத் தவிர வேறு யாரையும் நான் மணக்கப் போவதில்லை என்கிறாள். அவள் வாசுவைப் பற்றிய செய்திகளைத் தெரிந்து கொள்வதற்காகக் கல்கத்தா செல்கிறாள். இந்நிலையில் இராகவன் என்பவன் வாசுவின் மீது புகார்க் கடிதம் எழுதி அனுப்பிவிடுகிறான். அதனால் வாசு சிறை வைக்கப்படுகிறான். சிறையிலிருந்து மீண்ட வாசு இராகவனிடம் “காதல் என்னைக் காட்டிக்கொடுத்தது, பசி என்னைப் பட்டாளத்தில் தள்ளியது, விடுதலை வெறி என்னைஇங்கே கொண்டு வந்திருக்கிறது. இன்னும் நான் எங்கேல்லாம் போகவேண்டுமோ”[37] என்று வருத்தமுடன் கூறுகிறான். பிரிட்டிஷா் பலமெல்லாம் ஒன்று திரட்டி எதிர்த்தனர். இந்திய சேனை உணவு நெருக்கடியால் வருந்தியது. வாசு, ராஜீ, சுந்தரம் அனைவரும் கொரில்லாப் போரில் ஈடுபட்டிருந்தனர் திடீரென்று இந்நிலையில் நேதாஜியிடம் இருந்து ரங்கோனுக்குத் திரும்பும்படி கடிதம் வருகிறது. எதிரிகள் ரங்கோன் ஆஸ்பத்திரியைத் தாக்கியதில் லோகநாதன் அவனது தாய், தந்தை மூவரும் இறந்துவிடுகின்றனர். லோகநாதன் தங்கை புஷ்பாவை அழைத்துக் கொண்டு வாசு அகதிகளுடன் இணைந்து இந்தியா நோக்கி வரும்போது புஷ்பாவிற்கு மலைக்காய்ச்சல் ஏற்படுகிறது. எப்படியோ அவளை அழைத்துக் கொண்டுகல்கத்தா வந்து சேருகிறான். இதனிடையில் பா்மாவிலிருந்து சிட்டகாங் வழியாக ஐம்பது அகதிகள் சேவா சங்கத்திற்கு வந்திருப்பதாகக் கேள்விப்பட்டு அவர்களைக்காண கனகம் செல்கிறாள். வாசுவும்,கனகமும் சந்திக்கின்றனர். புஷ்பா நான் உங்கள் இருவருக்கும் மகளாய்ப் பிறந்து உங்களுடன் வாழவேண்டும் என்று கூறிய வண்ணம் உயிர் துறக்கிறாள். ஆண்டுகள் சென்றன. அவர்களுக்கு ஒரு பெண் குழந்தை பிறக்கிறது. வாசு

“கனகம் எனக்கு விடைதா பெற்ற விடுதலையைப் பேணிக்காக்க சொந்த ராணுவம் அழைக்கிறது.”[38] என்று கூறிப் பணியாற்றச் செல்கிறான் என்ற நிலையில் கதை நிறைவடைகிறது.

## 12. அலை ஓசை

கல்கி எழுதிய அலை ஓசை என்ற புதினம் எண்ணூற்று ஐம்பத்தைந்து பக்கங்களையும், நான்கு பாகங்களையும், நூற்றுமுப்பத்தொரு அத்தியாயங்களையும் கொண்டது. 1930 முதல் 1950 வரை நமது தாய் நாட்டின் சரித்திரத்தில் நிகழ்ந்த நிகழ்வுகள் இப்புதினத்தின் பின்னணியாக அமைந்துள்ளன கதாநாயகியின்தோழியான லலிதாவைச் சௌந்திரராகவன் பெண்பார்க்க வருகிறான். ஆனால் அங்கு சீதாவைக் காண்கிறான். அதனால் லலிதாவை மறுக்கிறான். லலிதாவின் அண்ணன் சூர்யாவின் உதவியால் சௌந்திரராகவன் சீதா, லலிதா பட்டாபிராமன் இவர்களுக்கு திருமணம் நடைபெறுகிறது. சௌந்திரராகவன் நான்கு, ஐந்து மாதங்களில் சீதாவை விட்டு விட்டு வேலையின் நிமித்தம் சீமைக்குச் செல்கிறான். இரண்டு வருடங்கள் கழித்து திரும்பி வந்த சௌந்திரராகவனுடன் வாழ சீதா மாமியாருடனும் மகள் வசந்தியுடனும் டெல்லி வருகிறாள்.

ஒருநாள் சீதாவின் வீட்டிற்கு வந்த சூர்யா பேசிக் கொண்டிருக்கும் போது இராகவன் காந்தியைத் திட்டுகிறான். “காமாட்சி அவ்வாறு திட்டக்கூடாது அவர் மகான் என்கிறார். சூர்யாவும் அவர் மகான் அவரால் நாடு முன்னேறியுள்ளது. சில சில விஷயங்களில் எங்கள் சோஷலிஸ்ட் கட்சி மாறுபடுகிறது என்றாள் அப்பொழுது சீதா என் தாய் மகாத்மா காந்தி தான் தெய்வமென்று கூறியுள்ளாள். அதற்கு விரோதமாக யாரும் எதுவும் கூற வேண்டாம் என்கிறாள்.”[39] சீதா, இராகவன், சூர்யா அனைவரும் ஆக்ராவில் தாஜ்மகாலைப் பார்த்துக் கொண்டிருக்கும் போது தாரணியும் அவளது தோழி

நிருபமாவும் வருகின்றனர். அனைவரும் தாஜ்மகாலைக் கண்டு மகிழ்ந்தனர். பிறகு அனைவரும் ரஜனிப்பூர் செல்கின்றனர். ஏரியில் படகு சவாரி செய்யும் போது சீதா நீரில் விழுந்து விடுகிறாள்.தாரிணி அவளைக் காப்பாற்றுகிறாள். இருவரும் தோழிகளாகின்றனர். இந்நிலையில் லலிதாவின் கணவன் காந்திஜீயை சிறையில் வைத்திருப்பதைக் கண்டித்துக் கூட்டம் போட்டதற்காகச் சிறையில் அடைக்கப்பட்டான். சூரியா லலிதாவின் பையன் பிறந்த நாள் விழாவிற்காகத் தேவபட்டினம் வருகிறான். எதிர் வீட்டு நண்பன் அமரநாதன் தந்தையுடன் பேசும் போது ‘‘உண்மையில் இந்தியாவின் சுதந்திரம் அஹமது நகர் சிறைச் சாலையில் உள்ள காந்தி மகாத்மா, நேருஜீ முதலிய தலைவர்களால் ஸ்தாபிக்கப்பட்டு வருகிறது’’[40] என்கிறான்.

பின் டில்லிக்கு வந்த சூரியா சீதாவைப் பார்க்கப்போகிறான் சீதா தற்கொலைக்கு முயற்சிக்கிறாள் அவன்போய் காப்பாற்றுகிறான். ‘‘சீதா சூரியாவிடம் டில்லி நகரம் நரகமாகிவிட்டது இந்த வீடு சிறைச் சாலையாகிவிட்டது இதிலிருந்து என்னைக் காப்பாற்று’’[41] என்கிறாள். சூரியா சீதாவைச் சந்தித்துப் பேசும் போது அவனைப்பிடிக்க போலீஸார் முயற்சிப்பதைக் கூறி அதனால் டில்லியை விட்டு சென்று விடு என்கிறாள். சூரியா தான் கல்கத்தா செல்லப்போவதாகவும் அவளைத் தன்னுடன் வரும்படியும் அழைக்கிறான். சீதா அதனை மறுத்து தான் தன் கணவனை திருத்தப்போவதாகக் கூறுகிறாள்.

சூரியாவைச் சந்தித்து விட்டுச் செல்லும் சீதாவை நால்வர் கடத்திச் செல்கின்றனர். சூரியா அவர்களைத் தொடர்ந்து சென்று வண்டியின் டயர்களைச் சுடுகிறான் குறிதவறிவிடுகிறது. அவனைப் போலீஸார் கைது செய்கின்றனர். மறுநாள் போலீஸார் சௌந்தரராகவனைக் கூப்பிட்டு புரட்சிக்காரர்களுக்கு அவர் வீட்டில் அடைக்கலம் கொடுத்ததாகக் காரணம்

கூறி சஸ்பெண்ட் செய்துள்ள செய்தியை இலாக்காத் தலைவர் கூறுகிறார். மேலும் சீதா காணாமல் போனதும் ஒரு காரணம் என்கிறார். மேலும் சீதாவும், சூர்யாவும் பகைநாடுகளுக்குச் செய்தியை அனுப்பியதாகவும் அதற்கு சௌந்தரராகவன் உடந்தை என்று கூறுகிறார். சீதாவைக் கடத்திச் சென்றவர்கள் அவள்தாரிணி இல்லை என்பதை அறிந்து ரயிலேற்றி விடுகின்றனர். அவள் அங்கிருந்து கல்கத்தா வருகிறாள். “போலீசார் வந்து தாரிணி, சீதா என்ற இரண்டு பெயரில் செயல்படும் புரட்சிக்காரி என நினைத்துக் கைது செய்து சிறையில் அடைக்கின்றனர்.”[42]

சிறையிலிருந்து திரும்பிய சீதா சூரியா, சுண்டு ஆகிய இருவருடன் தேவபட்டினம் வருகிறாள். ஒரு வருடத்திற்குப் பின் சீதா கல்கத்தா செல்கிறாள். அவள் ஹவ்ராவை அடைந்த போது அங்கு கலவரம் நிழ்ந்து கொண்டிருக்கிறது. சீதா தன்னுடன் வந்த ஹவ்ராவைச் சேர்ந்தவர்கள் வீட்டில் தங்குகிறாள். எட்டு நாட்கள் சென்ற பின் சீதா சித்ராவின் வீட்டை அடைகிறாள். அங்கு சீதாவின் கணவன் கலகத்தின் போது தொண்டாற்றியதால் சுரத்தில் படுத்திருக்கிறான். சீதா தன் பெண்ணுடன் இணைந்து அவனைக் காப்பாற்றுகிறாள். அவளிடம் இராகவன் தான் பஞ்சாப் செல்ல விரும்புவதாகக் கூறுகிறான். சீதா தானும் அவனுடம் இருப்பதாகக் கூறிவிடுகிறாள்.

இந்தியா விடுதலை அடைந்த உடன் தனக்கு அரசாங்க உத்யோகம் கிடைக்கும் என்று கூறி இராகவன் டில்லி செல்கிறான். அப்போது பஞ்சாப்பில் கொலை, கொள்ளை நடக்கிறது. சீதாவின் அப்பா அவளைக் காப்பாற்றியதுடன் தாரிணி, சீதா இருவரும் உடன் பிறந்த சகோதரிகள் என்பதைக் கூறுகிறார். சீதா தாரிணியிடம் தான் இறந்து விட்டால் தாரிணி இராகவனை மணந்து கொள்ளவேண்டும் என்று சத்தியம் வாங்கிக்

கொள்கிறாள். சீதாவுக்கு அடிக்கடி ஜுரம் வந்ததன் விளைவாக அவளுக்குக்காது கேட்கவில்லை,உடல் நலக் குறைவாலும், தள்ளாமையாலும் ரோட்டில் நடந்து கொண்டிருக்கும் போது பாமாவீட்டின் முன் மயங்கி விழுகிறாள். பாமா சூர்யாவை அழைத்து டாக்டரிடம் காண்பிக்கிறாள். அவர் சீதா இனிப் பிழைக்கமாட்டாள் என்று கூறியவுடன் இராகவனுக்குத் தெரிவிக்கிறான். இராகவனும், தாரிணியும், வருகின்றனர். சீதாவின் உயிர் பிரிகிறது. சீதாவின் வேண்டுகோள்படி இராகவன் தாரிணியை மணந்து கொண்டு ரஜனிபூர் சென்று விடுகிறான். சூர்யா பாமாவை மணந்து கொண்டு ராஜம் பேட்டையில் மகிழ்வுடன் வசிக்கலானான் என்ற நிலையில் கதை நிறைவுபெறுகிறது.

## 13. கண்திறக்குமா

விந்தனின் கண்திறக்குமா என்ற புதினம் இருநூற்று எட்டுப்பக்கங்களையும், இருபது அத்தியாயங்களையும் கொண்டது. கதைத் தலைவன் செல்வத்தை அறிமுகப்படுத்துவதாகக் கதைத் தொடங்குகிறது. செல்வம் சட்டம் பயின்று தொழில் அனுபவம் பெறுவதற்காகப் பாரிஸ்டர் பரந்தாமனிடம் பயிற்சி பெற்றுக் கொண்டிருந்தான். ஒருநாள் அவன் அலுவலகத்திற்கு வந்த போது அவனைக் கண்ட பரந்தாமன் மகிழ்வுடன் ‘‘கலகக்காரனைப் பிடித்துச் சிறையில் அடைத்து விட்டார்களாம் என்றார். யார் என்று கேட்டதற்கு அதான் காந்தியை; ரௌலட் சட்டத்தை எதிர்த்துப் போராடியதற்காக என்று கூறியதுடன் நில்லாது காந்தியையும், அவரது செயல்களையும் பழித்துப் பேசத் தொடங்கினார்’’[43] இதைக் கேட்ட செல்வம் பொறுக்கமுடியாமல் உங்கள் வேலையைப் பாருங்கள் என்று கூறிவிட்டு வெளியேறினான். வெளியில் கூட்டத்திற்குத் தலைமை வகித்தவன் இரத்த வெள்ளத்தில் மிதந்து கொண்டிருந்ததைப் பார்த்த செல்வம் அந்த இளைஞன்

கையில் உள்ள கொடியை வாங்கிக் கொண்டு வந்தேமாதரம் என்று முழக்கமிட்டான்.

போலீசார் அவனைத் தாக்குகின்றனர். அவன் உணர்விழந்து வீழ்கிறான். கண்விழித்துப் பார்க்கும்போது ஆஸ்பத்திரியில் படுத்திருக்கிறான். தன்னைப் பார்க்க வந்த தாயிடமும், தங்கையிடமும் தான் அரசாங்கத்திற்கு மன்னிப்புக் கடிதம் எழுதித்தர முடியாது; என்றும் உரைக்கிறான். அவன் சிறையிலிருந்த போது அவனது தாய் இறந்து விடுகிறாள். அவனது மாமா தங்கை சித்ராவை அழைத்துச் சென்றுவிட்டதாகவும், அவளிடம் இருந்து சாந்தினிக்குக் கடிதம் வருவதாகவும் செல்வம் அறிகிறான். விடுதலை ஆன பின் பரந்தாமன் வீட்டில் தங்குகிறான். அவர் மகள் சாந்தினி செல்வத்திடம் சித்ராவின் நிலையைக் கூறி அவளை உடனே சென்னைக்கு அழைத்து வரும்படி கூறியதுடன் செலவிற்குப் பணமும் தருகிறாள்.செல்வம் செய்யாமங்கலம் சென்று மாமாவிடம் நான் சித்ராவை அழைத்துப் போகத்தான் வந்தேன் என்கிறான். அதற்கு அவர் நேற்று இரவிலிருந்து சித்ராவைக் காணவில்லை என்கிறார். செல்வம் சென்னை செல்ல சோளகம் பட்டி ரயில் நிலையத்தில் ரயிலில் ஏறியவுடன் ஒரு குடியானவன் ஓடிவந்துஒரு தந்தியைக் கொடுக்கிறான். அந்த தந்தியில் சித்ரா சென்னைக்குப் பத்திரமாக வந்துவிட்டாள் என்ற செய்தி இருந்தது.

பரந்தாமன், சித்ரா, செல்வம் இருவரிடமும் பேசிக் கொண்டிருக்கும் போது செல்வம் எப்படி உருப்படப்போகிறான் என்று கேட்கிறார். அதற்கு அவன் வீட்டை விற்று உருப்படப்போவதாகக் கூறுகிறான். செல்வத்தின்தங்கை சித்ரா தன்னை மாமா வீட்டிலிருந்து பத்திரமாகக் கொண்டுவந்து சேர்த்தவர் என்று கண்ணன் என்பவரை அறிமுகப்படுத்துகிறாள்.

செல்வம் வீட்டை அடமானம் வைத்து 'தீனபந்து' என்ற பத்திரிகையை ஆரம்பிக்க முடிவுசெய்கிறான். பரந்தாமன் வயது வந்த பெண்ணை வைத்துக் கொண்டு வீட்டை விற்க வேண்டாம், சித்ராவின் திருமணத்தை முடி என்று கூற, செல்வமும் அதன்படி செயல்படுகிறான். சித்ராவின் திருமணம் முடிந்தவுடன் பத்திரிகையை ஆரம்பித்து முழுமூச்சாக உழைக்கிறான். அன்றைய அரசையும், அரசியலையும் தாக்கி எழுதியதால் சிறைப்படுத்தப்படுகிறான். விடுதலையான பின்துணிக்கடை மறியல், கள்ளுக்கடை மறியல் முதலியவற்றில் கலந்து கொள்கிறான். போலீசார் அவனைக் காயப்படுத்தி மருத்துவமனைக்கு அனுப்புகின்றனர். பின் சென்னை கடற்கரையில் நடந்த போராட்டத்தில் கைது செய்யப்பட்டு வேலூர் சிறையில் அடைக்கப்படுகிறான். விசாரணை முடிந்து திரும்பும் போது பாரிஸ்டர் பரந்தாமன் அவனை வரவேற்கிறார். ஏழாவது முறையாக சிறையை விட்டு வந்த பின் இரவு பகல் பாராமல் தேர்தல் பிரச்சாரத்தில் ஈடுபடுகிறான். தனிநபர் சத்தியாக்கிரகத்தில் பங்கு பெற்றதற்காக போலீஸ் அவனை லாரியில் ஏற்றிக் கொண்டு போய் மனித நடமாட்டம் இல்லாத காட்டில் விடுகின்றனர். அங்கிருந்து வந்த பின்சாந்தினிக்கும், செல்வத்திற்கும் திருமணம் நடைபெறுகிறது என்பதாய்க் கதை முடிகிறது.

## 14.கோபுரதீபம்

நா.பார்த்தசாரதி எழுதிய கோபுரதீபம் என்ற புதினம் முந்நூற்று அறுபத்து நான்கு பக்கங்களையும், முப்பத்தி நான்கு அத்தியாயங்களையும் கொண்டது. கதாநாயகன் சுந்தரத்தை அறிமுகப்படுத்தும் விதமாகக் கதை தொடங்குகிறது. சுந்தரம், நம்பிராஜன், கோமதிநாயகம் என்ற மூவரும் பாபநாசம் கல்யாண தீர்த்தத்தைத் தாண்டி தாமிரபரணி ஆறு ஓடும் இடம் வருகின்றனர். சுந்தரம் மட்டும் ஆற்றைத் தாண்டி அக்கரைசென்று டி.எஸ்.பி

மீனாட்சி சுந்தரத்தைக் கொலை செய்வதற்காகச் செல்கிறான். அங்கு தன் காதலி பத்மாவைச் சந்திக்கிறான். அவள் மூலம் போலீஸ் தங்களைத் தேடுவதை அறிந்து ஆற்றில் இறங்கி நீந்தித் தப்பிச் செல்கிறான். விடுமுறை முடிந்து கல்லூரி திறந்ததும் பத்மாவிற்குச் சுந்தரத்திடம் இருந்து பெயர் எழுதாமல் கடிதம் வருகிறது. பிரின்ஸ்பால் அதை அவளிடம் கொடுத்துவிட்டு இதுபோல் இனிமேல் கடிதம் வந்தால் தொடர்ந்து படிக்கமுடியாது என்று கூறினார்.சுந்தரம் குருவிக்காரன் வேடம் அணிந்து டி.எஸ்.பி மீனாட்சி சுந்தரம் இருக்கும் இடத்திற்குச் சென்று போலீஸ் நிலவரங்களை அறிகிறான்.

குற்றாலத்தில் கலெக்டர் துரை சுகவாசத்திற்காக முகாம் போட்டிருந்தார். அவர் பங்களாவில் இரவு ஒருமணிக்கு குண்டு வீசுவது என்று சுந்தரம் குழுவினர் திட்டம் போட்டிருந்தனர். பதினொன்றே முக்கால் மணிக்கு சுந்தரம் அங்கு வந்துவிடுகிறான். மூவரும் பங்களாவை நோக்கிக் குண்டை எறிய கையைத் தூக்கிய போது துப்பாக்கி வெடித்தது. நம்பிராஜன் காயம்பட்டுக் கீழே சாய்ந்தான். சுந்தரமும், கோமதிநாயகமும் தப்பித்து, தாங்கள் இருந்த குகைக்கு வந்து தடயங்களை அழித்தபின் ரயிலேறி சேரமாதேவி சென்று, மகரிஷி வ.வே.சு.ஐயரைச் சந்திக்கின்றனர். சுந்தரம் அவரிடம் நிகழ்ந்தவைகளைக் கூறுகிறான். அவர் ‘‘மனோதிடமும் தன்னம்பிக்கையும் அவசியம். காரியசித்தியின் இரகசியம் அவற்றில் தான் இருக்கிறது. விழித்து எழு, வீறு கொள், உன் தாய்த்திருநாட்டின் கைகளில் பூட்டப்பட்டிருக்கும் கொடியவிலங்கை உடைத்தெறி’’[44] என்கிறார். இருவரும் அங்கிருந்து புறப்பட்டு நண்பன் வேங்கடகிருஷ்ணனுடன் கங்கைகொண்டான் கிராமத்திற்கு வருகின்றனர்.

மூவரும் அமாவாசை அன்று தூத்துக்குடியில் உப்புக்காய்ச்சத் திட்டமிட்டுஅதற்காகத் தீவிரவாதத் தலைவர் வேங்கடகிருஷணனைச் சந்திக்க

முடிவு செய்தனர். சுந்தரத்திற்கு கடும் ஜுரம் வந்துவிட்டது எனவே இருவர் மட்டும் செல்கின்றனர். இந்நிலையில் டி.எஸ்.பி மீனாட்சி சுந்தரம் நம்பிராஜனிடம் குற்றாலம் குண்டுவெடிப்பில் உறுதுணையாக இருந்தது யார் என்று கேட்கிறார். நம்பிராஜன் தெரியாது என்று கூறுகிறான். அவனை மிகவும் கொடுமைப்படுத்துகின்றனர். எந்த நிலையிலும் உண்மையைக் கூறவில்லை. எனவே அவன் சிறையில் கல் உடைக்கிறான்.

இதனிடையில் சுந்தரத்திற்கு அம்மை போட்டு விடுகிறது. போலீசாரிடமிருந்து தப்பிக்க சுந்தரம், பாளையங்கோட்டை வருகிறான். அங்கு பத்மாவும், அவள் தோழி அகிலாவும் அவனை அழைத்துச் சென்று ஒரு வீட்டில் தங்க வைக்கின்றனர். அந்த வீட்டு வாசலில் லாரி வந்து நிற்பதைக் கண்ட சுந்தரம் கொல்லை வழியாகத் தப்பிச்சென்று மூடியுள்ள கிணற்றிற்குள் சென்று ஒளிந்து கொள்கிறான். வீடு முழுவதும் தேடியும் சுந்தரத்தைக் காணவில்லை. ஏட்டு கந்தசாமியை நெல்கொட்டும் குதிரில் பார்க்கச் சொல்கின்றனர். அப்போது அவனைத் தேள் கொட்டிவிடுகிறது. அவனை வெளியில் கொண்டுவர இன்ஸ்பெக்டரும், சி.ஐ.டியும் உள்ள இறங்குகின்றனர். உடலெல்லாம் தூசியாகிறது தண்ணீர் இறைக்க வாளியை கிணற்றிற்குள் விடும்போது சுந்தரம் கயிற்றைப்பிடித்துக் கொண்டு வெளியில் வருகிறான். அனைவரும் திடுக்கிடுகின்றனர். ஆச்சி சுந்தரத்தைப் பார்த்து ‘‘ஐயோ தம்பி அநியாயம் பன்னிட்டீங்களே அம்மை உடம்போடு இப்படிக் கிணற்றுக்குள் இறங்கலாமா? அம்மை மறுமுள்ளுப் பாய்ந்தால் எக்கச்சக்கமாயிடுமே என்று’’[45] கூறுகிறாள். போலீஸ்காரர்களும், டி.எஸ்.பியும் அவனைப்பயங்கர அரசியல் குற்றவாளியாகக் கருதியதால் ஆஸ்பத்திரிக்கு அனுப்பாமல் ரிமாண்டுக்குக்கொண்டு சென்றனர்.

சுந்தரத்தின் நண்பர்கள் அனைவரும் ஒன்று கூடி ‘‘சிறைச்சாலை அதிகாரிகள் சுந்தரத்தின் மேல் அனுதாபம் காட்டி அவனை உடனடியாக ஆஸ்பத்திரியில் சிகிச்சைக்கு அனுப்பவேண்டும் என்று விசிட்டர்களிடமும், இன்ஸ்பெக்டரிடமும் கேட்டுக் கொள்வது அவர்கள் சரியான முறையில் பதிலோ ஆதரவோ தரவில்லையானால் உடனே சிறைக்குள் இருந்தவாறே மறியல் செய்வது’’[46]என்று முடிவு செய்கின்றனர். அவர்கள் மறியல் செய்ததால் அவர்களை பி-வகுப்பு வார்டிலிருந்து சி-வகுப்பு வார்டிற்கு மாற்றுகின்றனர். பகலில் செக்கிழுத்தல், கல்லுடைத்தல் முதலிய தண்டனைகள் அளிக்கப்பட்டன. உணவிற்கு உப்பு இல்லாத கூழ் அளிக்கப்பட்டது. சுந்தரம் அரசாங்க மருத்துவமனையில் தகுந்த பாதுகாவலுடன் சேர்க்கப்படுகிறான். உடல் குணமானவுடன் காலை பதினொருமணிக்கு சுந்தரத்தை சப் ஜெயிலுக்கு அழைத்துச் செல்ல முற்பட்டபொழுது அங்கு வந்த உப்பு லாரி மூலம் தப்பிச் சென்று விடுகிறான். டி.எஸ்.பி மீனாட்சி சுந்தரம் மனபாட்டுக்குத் தேடிவருகின்றார். சுந்தரம் வழியில் மயக்கம் போட்டு விழுந்து விடுகிறான்.அப்பொழுது அவன் காதில் போலீஸ் வண்டியின் ஒலி கேட்கிறது. கடலை நோக்கி ஓடுகிறான். போலீஸ் சுடுகிறது. அவன் உடலைத் தேடுகின்றனர்.உடல் கிடைக்கவில்லை. சுந்தரத்தின் உடல் செந்தில் ஆண்டவன் கோவில் கோபுரத்தின் உச்சியில் சோமவாரத்திற்கு ஏற்றப்பட்ட கொப்பறை தீபத்துடன் இணைந்து விட்டது என்ற நிலையில் கதை நிறைவு பெறுகிறது.

## 15. தியாகத்தழும்பு

நாரண துரைக்கண்ணன் இயற்றிய தியாகத்தழும்பு என்ற புதினம் முந்நூற்று முப்பத்தெட்டு பக்கங்களையும், பத்து அதிகாரங்களையும் உடையது. சுதந்திரப்போராட்ட காலத்தில் வாழ்ந்த சிவப்பிரகாச முதலியாரும்

தற்காலத்தைச் சார்ந்த தேவதாஸ், ராமகிருஷ்ணன் ஆகிய மூவரும் கடற்கரையில் பேசிக் கொண்டிருக்கும் நிலையில் கதை தொடங்குகிறது. அவர்கள் பேச்சின் இறுதியில் தேசத் தொண்டன் தியாகராஜன் வரலாற்றைக் கூறத் தொடங்குகிறார் சிவப்பிரகாசர். 1930-ஆம் ஆண்டு மார்ச் மாதம் 12-ஆம் தேதியன்று காந்தியடிகள் சபர்மதியிலிருந்து புறப்பட்டு ஏப்ரல் 13-ஆம் தேதியன்று தண்டிக் கடற்கரையில் தம் தொண்டர்களுடன் உப்பு அள்ளி சர்க்காரின் தடை உத்தரவை மீறினார். அதன்படி சென்னையில் சிவப்பிரகாசம் சாம்பமூர்த்தி தலைமையில் உப்பெடுத்தனர். இதற்காகச் சென்னை கடற்கரையில் கூட்டம் ஏற்பாடாகி இருந்தது. சிவப்பிரகாசமும் அவரைப் போன்ற பலரும் சத்தியாக்கிரகத்தில் ஈடுபட்டனர். அரசு 144 தடை உத்தரவிட்டு கூட்டத்திற்கு வரும் தொண்டர்களைத் தண்டிக்கத் தயாராக இருந்தது.

அக்கூட்டத்தில்பதினாறு வயது மதிக்கத்தக்க பெண்மணி ஒருத்தி தேசியக் கொடியை ஏந்திய வண்ணம் வந்தாள் அவள் பெயர் துர்க்காபாய். அவள் கடைசி வரை எதற்கும் அஞ்சாமல் சிலைபோல் தேசியக் கொடியைப் பிடித்தபடி இருக்க, கமிஷனர் கொடியைக் கீழே போட்டுவிடுமாறு கூறுகிறார். துர்க்காபாய் ‘‘என் உயிர் போவதானாலும் தேசியக் கொடியைக் கீழே போடமாட்டேன்’’[47] என்கிறாள். போலீஸின் தடிஅடி தாங்காமல் துர்க்காபாய் சோர்ந்து விழுகிறாள். பிரகாசமோ ஆவேசமாக எழுந்து நின்று என்னைச் சுடுங்கள் என்று தனது மார்பைத் திறந்து காட்டுகிறார். அச் சமயத்தில் இளைஞன் ஒருவன் பின்புறமாக வந்து அவரைத் தூக்கிச் செல்கிறான். பாதுகாப்பான இடத்தில் உட்காரவைத்தபின் அவரை வணங்கித் தன்னை மன்னிக்கும் படி கேட்கிறான். பிரகாசம் வீட்டிற்குப் புறப்பட்டபோது தன்னை அழைத்து வந்தவனை அவனுக்குச் சௌகரியப்பட்ட நாள் அன்று

உதயவனத்திலோ, சுயாராஜ்ய பத்திரிகாலயத்திலோ வந்து தம்மைப் பார்க்குமாறு கூறிவிட்டுச் செல்கிறார்.

சிவப்பிரகாசம் அந்தப் பையனைப் பற்றிக் கேட்கும்பொழுது தனது பெயர் தியாகராஜன் என்றும் தந்தை தச்சுத்தொழில் பார்ப்பவர் என்றும், தான் நெசவுத்தொழில் செய்வதாகவும் கூறுகிறான். மேலும் உப்பு சத்தியாக்கிரகத்திலும், மறியலிலும் நம்மைப் போன்றவர்களும் கலந்து கொள்ளவேண்டியது அவசியம் அல்லவா? என்று கேட்பதிலிருந்து நாட்டு விடுதலை மீதுஅவன் கொண்ட பற்று வெளிப்படுகிறது. அதிலிருந்து தியாகராஜனுக்கும், சிவப்பிரகாசத்திற்கும் இடையே நட்பு ஏற்பட்டது. தீவிரதேசபக்தனாக மாறிய தியாகராஜனை சிவப்பிரகாசம் பார்க்கச் சென்ற போது அவன் நெசவாள நண்பர்களைப் பார்த்து ‘‘நீங்கள் வேண்டுமானால் பாருங்கள்; மகாத்மா காந்தியை வெள்ளைக்காரன் என்றைக்குச் சிறை பிடித்தானோ அன்றைக்கே அவன் ராஜ்ஜியத்திற்கு அழிவுகாலந்தான்; இன்றில்லாவிட்டாலும் என்றாயினும் ஒருநாள் அவன் நம்நாட்டை நம் கையில் கொடுத்து விட்டு ஓடவேண்டியவன் தானே’’[48] என்று கூறுகிறார். இதனைக் கேட்டுக்கொண்டு வந்த அவனது முதலாளி அவனை வேலையை விட்டு நீக்குகிறார்.

உப்பு சத்தியாக்கிரகப் போராட்டத்தில் தியாகராஜனும் பங்குபெறுகிறான். போலீசார் கூட்டத்தைத் தடியால் அடித்துக்காயப்படுத்தி ஒடுக்குகின்றனர். பின் அவர்களை லாரியில் ஏற்றிச் சென்று ஆள் அரவம் இல்லாத எண்ணூர் என்ற இடத்தில் விட்டுச் செல்கின்றனர். தியாகராஜனுக்கு அடிபலமாக இருந்தது. அங்கிருந்த மீனவர்கள் உதவியால் அவன் உயிர் பிழைக்கிறான். அப்பொழுது தியாகராஜன் சத்தியாக்கிரகம் நடந்த அன்று செங்கோட்டை கேபிள் கம்பியில் தேசியக் கொடியைப் பறக்கவிட்டது

நான்தான் என்கிறான். இதைக் கேட்ட சிவப்பிரகாசர் ‘‘நீ செய்துள்ள காரியம் மகத்தானது. மற்றவர்கள் மனத்தாலும் நினைக்க முடியாதது. சுதந்திரப் போராட்ட வரலாற்றில் பொன்னெழுத்துக்களால் பொறிக்கத்தக்க மகா அற்புத சம்பவம் இது. நீ ஒரு சரித்திர சம்பவம் ஒன்றையே சிருஷ்டித்துவிட்டாய் இதை நம் மக்கள் அறிந்தால் உனக்கு ஒரு சிலையே எழுப்பிவிடுவார்கள்’’[49] என்று பாராட்டுகிறார். தியாகராஜன் புதிய தொண்டர்களைச் சேர்த்துக் கொண்டு அந்நியத் துணியெரிப்பு, மதுபானக் கடை மறியல் போன்றவற்றில்

ஈடுபடுகிறான். இதனால் ‘‘அவன் போலி தேசபக்தர்களுக்கு பரமவிரோதியாகவும் போலீஸ்காரர்களின் கண்களுக்குப் புரட்சிக்காரனாகவும், அரசாங்க அடிவருடிதாசர்களுக்குப் பயங்கரவாதியாகவும் காட்சியளித்தான்’’[50]

காந்தியடிகள் தொடங்கும் ஒவ்வொரு போராட்டத்தின் போதும் முதன் முதலாக அரசாங்க அடக்குமுறைக்கு ஆளாகுபவர்களில் தியாகராஜனே முதன்மையாக இருந்தான். இவனது சேவையைக் கண்ட காங்கிரஸ் தலைவர்கள் அவனது குடும்பத்திற்குப் பண உதவி செய்தனர். தியாகராஜன் காந்தியடிகளைத் தமது உயிராகக் கருதினான். தியாகராஜன் தனிநபர் சத்தியாக்கிரகம் செய்ய விரும்பியபோது அவனுக்குத் தலைவர்களிடம் இருந்து அனுமதி கிடைத்தது. அவன் தனிநபர் சத்தியாக்கிரகம் பற்றியும், ஆங்கில ஆட்சியின் கொடுமைகள் பற்றியும் பேசியதை ஆயிரக்கணக்கில் மக்கள் கூடிக் கேட்டுக் கொண்டிருந்தனர். போலீசார் அவனைக் கைது செய்து நீதிமன்றத்தில் நிறுத்தினர். வழக்கின் போது குற்றத்தை மறுக்கவில்லை. அதனால் அவனுக்கு ஒருவருடக் கடுங்காவல் தண்டனை கிடைத்தது. அவனை அலிப்பூர் சிறையில் அடைத்தனர் சிறையிலிருந்து வெளிவரும் போது உருமாறிப் போயிருந்தான்.

1942-இல் நடைபெற்ற வெள்ளையனே வெளியேறு இயக்கத்தில் தியாகராஜன் கலந்து கொண்டான். அவன் மீது பொறாமை கொண்ட கம்யூனிஸ்ட் கட்சியைச் சேர்ந்த ஒருவன் அவன் இருக்கும் இடத்தைக் காட்டிக் கொடுத்துவிடுகிறான். அங்கு வந்த போலீஸ் சுட்டதில் தியாகராஜனுக்குத் தோளில் குண்டடிபட்டது. தியாகராஜன் நான்கு ஆண்டுகள் சிறையில் வைக்கப்பட்டான். தோளில் பட்ட துப்பாக்கிக் குன்டின் தழும்பு கடைசிவரை மறையவில்லை. தியாகத்தழும்பாகவே அவன் தோளில் பதிந்துவிட்டதுஎன்ற நிலையில் கதை நிறைவு பெறுகிறது.

## 16.புதுவெள்ளம்

அகிலன் எழுதிய புதுவெள்ளம் என்ற புதினம் மூன்று பாகங்களையும், தொன்னூற்றொரு அத்தியாயங்களையும், அறுநூற்று ஐம்பத்தாறு பக்கங்களையும் உடையது. கதைத்தலைவன் முருகையனை அறிமுகப்படுத்தும் விதமாகத் தொடங்குகிறது. திருச்சியில் கல்லூரியில் படித்துவந்த முருகையனின் தலைமையில் 1942-ஆம் ஆண்டு ஆகஸ்ட் பிற்பகுதியில் ஒரு கூட்டம் நடைபெறுகிறது. இதனை ஒட்டுக்கேட்ட போலீஸ்காரர் தன் தலைமை இடத்தில் கூற போலீஸ் அதிகாரி முருகையனின் கல்லூரி விடுதிக்கு வந்து கல்லூரித் தலைவரிடம் விசாரிக்கிறார். “முருகையன் ஆபத்தானவன் அவனை என்னிடம் ஒப்படையுங்கள் என்கிறார். கல்லூரித் தலைவர் அவன் அப்படிப்பட்டவனல்ல, அவன் நேற்று திருவரங்கம் சென்றுள்ளான், நாளை வந்து பாருங்கள் என்று கூறி அனுப்புகிறார்”[51] அவர் சென்ற பின் முருகையனிடம் என்னால் உன்னைக் காவலரிடம் ஒப்படைக்க முடியாது, உன்னைக் கல்லூரியிலிருந்து நீக்கிவிட்டதாக வைத்துக்கொள் என்று கூறி அவனை இரயில் ஏற்றி ஊருக்கு அனுப்புகிறார்.

அவன் ஊருக்கு வந்த இரண்டாம் நாள் நண்பன் பெருமாள்சாமியினால் ஊரில் கலவரம் நடக்கிறது. அதன் விளைவால் மறுநாள் முருகையன் அபாயகரமான குற்றவாளி என்று கருதிக் கைது செய்யப்படுகிறான். ‘‘முருகையனின் தந்தை கன்றை இழந்த பசுவைப்போல காருக்குப் பின்னால் ஓடிவர முயன்று விழுந்து விடுகிறார்’’[52] முருகையனைத் தண்டனை இல்லாமல் விடுவிக்க, அவன் நாட்டுப்பற்று கொண்டது தவறென்றும் அதற்காக மன்னிக்கவேண்டும் என்றும் எழுதிக்கொடுத்தால் அவனுக்கு விடுதலை தருவதாய்க் கூறினார்கள். அவன் அதற்கு மறுப்பு தெரிவித்துவிட்டான். விளைவு மூன்று ஆண்டுகள் சிறைத் தண்டனை. தண்டனை முடிந்து தந்தையைக் காணப் பெரிய பாளையம் செல்கிறான். வீட்டிற்குப் போவதற்கு முன்னால் தோட்டத்திற்குச் செல்கிறான். படிக்காததாலும் தன் அண்ணனிடம் நம்பிக்கை கொண்டதாலும், முருகையனின் அப்பா ஏமாற்றப்பட்டு சொத்துக்களை அவரின் அண்ணன் குமாரவேலிடம் இழந்துவிட்டதை வேலையாள் மூலம் அறிந்து இடிந்து போகிறான். தந்தை அனைத்தையும் இழந்து ஒரு குடிசையில் கூழைக் குடித்துக் கொண்டிருப்பதைக் காண்கிறான்.

இந்நிலையில் செல்வரத்தினம் சிவப்பிரகாசம் வீட்டிற்கு வந்து தன் தந்தையால் மீண்டும் இன்னல் நேராமல் இருக்கவேண்டும், அதனால் எப்படியாவது முருகையனை ஊரைவிட்டு அனுப்பிவிடும்படிக் கூறி, செலவிற்கு அங்கு உள்ள பாட்டியிடம் பணம் கொடுத்து, அவள் கொடுப்பது போல் கொடுத்து அனுப்புமாறு கூறிவிட்டுச் செல்கிறான். அன்று இரவு பாட்டியும், தந்தையும் கூறியவற்றை யோசித்து வாழ வழிதேடிச் சென்னையில் உள்ள சித்ராவீட்டிற்குச் செல்கிறான். அவன் ஏழை என்பதை அறிந்த சித்ரா வீட்டார் அவனை உதாசினப்படுத்த முருகையன் சுந்தரத்தின் உதவியுடன் அவன்

வீட்டில் தங்குகிறான். சுந்தரத்தின் தங்கை உறவிலிருந்த சாந்தாவின் நட்புக் கிடைக்கிறது. சுந்தரம் ஆந்திர மாநிலத்தில் நிலக்கரிச் சுரங்கம் ஒன்றில் நல்ல சம்பளத்தில் வேலை கிடைப்பதால் குடும்பத்துடன் அங்கு சென்றுவிடுகிறான். முருகையன் சாந்தாவை விட்டுப் பிரிகிறான்.

பழைய நண்பன் முனியாண்டியின் உறவு கிடைக்கிறது. அவனுடன் வசித்துக் கொண்டு பாண்டிபஜாரில் பொருட்கள் வாங்கி விற்கும் தொழிலைச் செய்கிறான். முனியாண்டி காலில் ஆணிகுத்தி அல்லலுறுவதை என்பதை அறிந்து அவனை மருத்துவமனையில் சேர்த்துவிட்டு, தான் ரிக்ஷா இழுத்து அந்தக் குடும்பத்திற்கு உதவும் சமயத்தில், குமாரவேலுவால் சென்னைக்கு அனுப்பிவைக்கப்பட்ட தந்தையை ரயில் நிலையத்தில் யார் என்று அறியாமல் தன் வண்டியில் ஏற்றி வருகிறான். முகவரியை வாங்கி பார்த்ததும் துடிதுடித்து வேகமாகச் செல்ல எதிர் வந்த காரில் மோதி இருவரும் விழுகின்றனர். தந்தை மகனை இந்த நிலையில் கண்டவுடன் துடிக்கிறார். அவரைத்தூக்கி வந்து முனியாண்டியின் வீட்டில் படுக்கவைத்தபின், “நான் இனி சித்ராவுடன் இருக்கப் போகிறேன். எனக்கு வேலை கிடைத்துவிட்டது; நீங்களும் என்னுடன் இருந்துவிடலாம் என்று தந்தையின் கையைப் பிடித்துக்கொண்டு கூறுகிறான்”[53] இவற்றைக் கேட்ட சிவப்பிரகாசம் புன்னகை பூத்த வண்ணம் உயிர் துறக்கிறார்.

சித்ரா அவனை அழைத்துச்சென்று தன் வீட்டில் தங்கவைக்கிறாள். சித்ராவின் அண்ணன் மாணிக்கம் கலப்பட வியாபாரத்திற்கு முருகையனை பின்புலமாகக் கொண்டு பொருள் ஈட்ட வழி செய்து அவனை முதலாளியாக்கித் தன்னுடன் கூட்டுச் சேர்த்துக் கொள்கிறான். இந்நிலையில் கலப்படச் செயல்களுக்கு மறைமுகமாகத் தான் இருந்ததை முருகையன் உணர்கிறான். இவற்றால் கோபம் அடைந்து இருக்கும் நேரத்தில் காந்தி

மறைந்துவிட்டார் என்ற செய்தியும் வருகிறது. தன் நிலையிழந்து கிடந்த முருகையனைக் கடை அலுவலர்கள் வீட்டிற்குக் கொண்டுவந்து சேர்கின்றனர். உண்மை தெரிந்த மாணிக்கம் தன்னை அனுசரித்து தன் தங்கை சித்ராவை மணந்து வாழவேண்டும் என்கிறான். முருகையன் இதனை எதிர்க்கிறான்.உயர் அதிகாரியிடம் தன் விற்பனை உரிமையை ரத்து செய்யும்படி கூறியபின், ஆந்திர மாநிலம் சென்று சுந்தரத்தின் உதவியுடன் நிலக்கரிச் சுரங்கத்தில் வேலையில் சேர்கிறான் அங்கு சாந்தா, பெருமாள்சாமி இருவரையும் பார்க்கிறான் அங்கும் போராட்டம். இறுதியில் முருகையன் சாந்தாவுடன் இணைகிறான் என்ற நிலையில் கதை முடிகிறது.

## 17.சோலைமலை இளவரசி

கல்கியின் சோலைமலை இளவரசி என்ற புதினம் நூற்று எழுபத்து மூன்று பக்கங்களையும், இருபது அத்தியாயங்களையும் கொண்டுள்ளது. புதினத்தின் கதாநாயகன் குமாரலிங்கத்தை அறிமுகப்படுத்தும் விதமாகத் தொடங்குகிறது. 1942-இல் நாட்டில் நடைபெற்ற ஆகஸ்ட் புரட்சியின் போது இந்திய வாலிபர்கள் தமது நாட்டுப்பற்றை வெளியிட வாய்ப்பைத் தேடிக் கொண்டிருந்த நேரத்தில் “பல அச்சடித்த துண்டு பிரசுரங்களுடன் வந்த குமாரலிங்கம் பல செய்திகளையும் சேர்த்துக் கூறுகிறார். மேலும் ஒரு ஊருக்குச் சென்று கொண்டிருக்கும் போது அவனைக்கைது செய்யும்படிச் சென்னையிலிருந்து ஆணைவருகிறது. தான் கைது ஆவதற்கு முன் ஏதேனும் செய்யவேண்டும் என்ற எண்ணத்துடன் அரசாங்கத் தடை உத்தரவை மீறிப் பொதுக்கூட்டம் போடுகிறான்.”[54]அவர்களிடமிருந்து தப்பிக்க நினைத்து வரும் வழியில் குமாரலிங்கம் தண்டவாளங்களைப் பெயர்க்கிறான். வண்டியில் வந்த போலீசார் அவனைப் பார்த்துவிட்டுச் சுட முயற்சிக்க அங்கிருந்து தப்பித்து ஓடுகிறான் இறுதியில் சோலைமலைக்கு அடியிலுள்ள கோட்டைக்கு வந்து

சேருகிறான். கோட்டைக்குள் செல்லும் போதுதான் தான்முன்பு அங்கு வந்ததாக உணர்கிறான். இங்கு கதை பின்னோக்கிச் செல்கிறது. இந்தப்புதினம் மாறனேந்தல் இளவரசன், குமாரலிங்கம் என்ற இரு கதாநாயகர்களைப் பற்றிய நிகழ்வாக அமைந்துள்ளது.

நூறு வருடத்திற்கு முன் சோலைமலை, மாறனேந்தல் என்ற இரு சிற்றரசுகள் இருந்தன மாறனேந்தல் இளவரசனுக்குச் சோலைமலை இளவரசியை மணமுடிக்க முடிவுசெய்திருந்தனர், ஆனால் பிரிட்டிஷ் ஆட்சியாளரின் தலையிட்டால் இரு நாடுகளிடையே போர் மூண்டது, பகைமை வளர்ந்தது, இறுதியாக ஆங்கிலேயர் மாறனேந்தல் கோட்டையைத் தாக்கினர். பீரங்கிப் படைகளை எதிர்க்க முடியாமல் கோட்டை வீழ்ந்தது, கோட்டை வீழ்வதற்கு முன் அரசன் இளவரசனைஅழைத்துத் தப்பிச் செல்லுமாறும், சமயம் பார்த்து நாட்டைக்காப்பாற்ற வேண்டும் என்றும் கூறுகிறார். இளவரசன் உலகநாததேவனும், தந்தையின் சொல்படி தப்பித்துச் செல்லும் போது ஆங்கிலேய வீரர்கள் துரத்த ஆரம்பித்தனர். அவர்களிடமிருந்து தப்பிக்க சோலைமலைக் கோட்டைக்குள்ளேயே ஒளிந்து கொள்கிறான்.

பதினைந்து நாட்கள் கழித்து மாறனேந்தல் ஆட்சியை உலகநாதனுக்கே தருவதாகச் சோலைமலைராஜாகூறியதாக இளவரசி கூறுகிறாள். ஆனால் ஆங்கிலேயர்கள் சோலைமலை ராஜாவையும் ஏமாற்றி விட்டு உலகநாதனைக்கைது செய்து தூக்கிலிட முடிவெடுத்துள்ளனர். தூக்கிலிடும் மரத்தினடியில் உலகநாதன் நின்றநேரத்தில் அரண்மனையின் உப்பரிகையில் இருந்து அலறிக்கொண்டு இளவரசி கிழேவிழுகிறாள். தூக்கிலிடும் நேரத்தில் உலகநாதன் தப்பியோட ஆங்கிலேயர் சுட்டுவிட்டதாகக் கதைமுடிகிறது.

சோலைமலைக் கோட்டைக்குள் நுழைந்த குமாரலிங்கம் அங்குள்ள வசந்த மண்டபத்தில் படுத்து உறங்கிவிடுகிறான். உச்சிவேளையில் கண்விழிக்கும் போது ஒரு பெண் தலையில் கூடையுடன் நின்று கொண்டிருந்தாள். அவனுக்கு அவள் சோலைமலை இளவரசி போலக் காட்சிதருகிறாள் எனினும் அவளைப்பற்றி வினவியபோது தான் இந்தஊர் மணியக்காரர் மகள் என்றும், தன் பெயர் பொன்னம்மாள் என்றும் கூறித் தான் வைத்திருக்கும் உணவை அவனுக்கு அளிக்கிறாள். அவளிடம் தான் இரண்டு, மூன்று நாட்களுக்கு இருப்பதாகவும் தனக்கு உணவிட வேண்டுமென்றும் கேட்டுக்கொள்கிறான். பத்துநாட்கள் சென்றபின் “இரண்டு காங்கிரஸ் காரர்கள் சோலைமலை கிராமத்திற்கு வந்து மணியக்காரரைச் சந்தித்துத் தலையாரியைக் கூப்பிட்டு சுயராஜ்யம் வந்து விட்டது என்றும் புரட்சி வீரர் குமாரலிங்கத் தேவரைப்பிடித்து புதுடில்லிக்கு அனுப்பும்படியும், ஜவகர்லால் நேருவிடமிருந்து கட்டளை வந்துள்ளது, குமாரலிங்கத்தேவர் இருக்குமிடத்தைக் கண்டுபிடித்துச் சொல்பவர்களுக்கு ஆயிரம் ரூபாய் இனாம் கிடைக்கும் என்று தண்டோரா போடும்படி கூறுகின்றனர்”[55] இதனைக்கேட்ட பொன்னம்மாள் குமாரலிங்கத்தேவரைச் சரணடையுமாறு கூறுகிறாள். குமாரலிங்கத்தேவர் சென்று சரணடைய போலீஸ்காரர்கள் அவரை விலங்கிட்டு அழைத்துச் செல்கின்றனர். தன்னைப் பார்க்கவந்த மணியக்காரரிடம் பொன்னமாளுக்கு வேறு இடத்தில் திருமணம் செய்யுங்கள் என்று கூறுகிறான். அப்போது மணியக்காரர் உன்னை எண்ணிய மனத்தினாலே அவள் யாரையும் எண்ணுவாளா என்கிறார். வழக்கின் முடிவில் ஒருவருடம் கழித்து குமாரலிங்கத்திற்குத் தூக்கு தண்டனை என்பது முடிவாயிற்று. அவனையும் அவனது நண்பர்களையும் வேறு சிறைக்கு மாற்ற கூட்டிச் சென்றார்கள். ரயிலில் போகும் போது வழியில் அதிலிருந்து இறங்கித்

தப்பி ஓடும் போது காவலர்கள் அவனைப் பின்தொடரவில்லை என்பதை உணர்ந்து பொன்னம்மாளைக் காணச் செல்கிறான்.

ஏழுநாட்கள் கழித்து நாடு விடுதலை அடைந்ததை மணியக்காரர் மூலம் அறிகிறான். பொன்னம்மாள் மனநிலை பாதிக்கப்பட்டு என் பெயர் பொன்னம்மாள் இல்லை, நான் மாணிக்கவள்ளி, சோலைமலை இளவரசி என்கிறாள். அவள் மனம் பேதலித்துவிட்டது. என்பதையும் இனி ஒருநாளும் தன்னை அவள் அறிந்து கொள்ளப் போவதில்லை என்றும் உணர்ந்தான். அதே நேரத்தில் அவனுடைய இதய வீணையின் ஜீவ நரம்பு படீரென்று வெடித்து அறுந்தது. “அவன் உலகப்பற்றை ஒழித்துச் சாமியாராகி கோவில்களில் வாசம் செய்யலானான். பூர்வாசிரமத்தில் அவர் ஒரு தேசத் தொண்டர் குமாரலிங்கம் என்று அறிந்தவர்கள் கூறுவார்கள்”[56] என்னும் கூற்றோடு கதை நிறைவு பெறுகிறது.

## 18. இருபது வருஷங்கள்

எம்.எஸ் கல்யாணசுந்தரம் எழுதிய இருபது வருஷங்கள் என்ற புதினம் இருநூற்று ஐம்பத்தாறு பக்கங்களையும்,முப்பத்தி ஏழு அத்தியாயங்களையும் உடையது. இப்புதினம் 1930-ஆம் ஆண்டு கூடிய மாகாணசாரணர் சந்திப்புடன் தொடங்குகிறது. மாநாட்டின் இறுதி நாளில் பேசிய கேசவராவ் காந்தியடிகளின் ஒத்துழையாமை இயக்கத்தில் பங்கு கொள்ள விரும்புவதால் தனது காரியதரிசி பதவியையும் இதர தொடர்புகளையும் ராஜினாமா செய்வதாகத் தெரிவிக்கிறார். வீட்டில் எதிர்ப்புகள் வரினும் அவர் தமது உறுதியில் இருந்து சிறிது கூட விலகவில்லை. கேசவராவ் தலைமையில் அந்நியத் துணிக்கடை மறியல், கள்ளுக்கடை மறியல் என்று போராட்டம் ஆரம்பம் ஆனது. கேசவராவ் ஏனைய பதவிகளைத் துறந்தாலும் ஆஸ்பத்திரி வேலையை மட்டும் ராஜினாமா செய்யவில்லை. காரணம் போராட்டத்தில்

அடிபட்டவர்களுக்கு சிகிச்சை செய்ய நினைத்ததே ஆகும். இறுதியில் வேலையையும் ராஜினாமா செய்கிறார்.

ஒருநாள் மாலை சப்இன்பெக்டர் காரில் வந்து அவரை அழைத்துச் செல்கின்றார். கேசவராவிற்கு ஒரு வருடம் சிறைவாசமும், நூறுரூபாய் அபராதமும் விதிக்கப்பட்டது. விடுதலையாகி வந்த கேசவராவ் தனியார் மருத்துவமனையை ஆராம்பித்தார். சோதனைக்காக வந்தஜில்லா அதிகாரியிடம் குஷ்டரோகத்தால் தாக்குண்டவர்களுக்கு சிகிச்சை செய்ய விரும்புவதாகக் கூறுகிறார்.

அவ்வூர் மக்கள் ஹரிஜன முன்னேற்ற சங்கத்தைத் துவங்கினர். டாக்டரை அதன் தலைவராகத் தேர்ந்தெடுத்தனர். மகாத்மா காந்தி தமிழ்நாட்டு சுற்றுப்பயணத்தின் போது பெரியகுளம் வருகிறார். அனைத்தையும் சுற்றிப்பார்த்துவிட்டு பாராட்டிச் செல்கிறார். 1941-இல் நிகழ்ந்த போரின் காரணமாக, சிங்கப்பூர் ஆஸ்பத்திரிக்கு கேசவராவ் அனுப்பப்பட்டார். இரண்டரை வருடங்கள் கழித்துநாடு திரும்புகின்றார். இந்நிலையில் 1947-ஆம் ஆண்டு ஆகஸ்ட் மாதம் பதினைந்தாம் நாள் இந்தியாவிற்கு விடுதலை கிடைக்கிறது.

கேசவராவின் உடல்நிலை மோசமடைந்த நிலையில் அங்கு வந்த ஒருவர் டாக்டரின் வயது என்ன என்று கேட்கிறார். அதற்குச் சாவித்ரி “பிறருக்கு உபயோகமான நாட்கள் தான் கணக்கில் சேரும் என்றால் இவர் வயது இருபது எனலாம்.”[57] என்கிறாள். டாக்டர் தன்னைச் சுற்றியுள்ள அனைவரையும் ஒருமுறை பார்த்தபின் கண்களைமூடிக்கொண்டார். அவர் உருவாக்கிய டாக்டர்கள் அவர் வழியில் கடமைகளைச் செய்தனர் என்ற நிலையில் கதை நிறைவடைகிறது.

## 19.அணையாச்சுடர்

எம்.எஸ் வெங்கட்ராமன் எழுதிய அணையாச்சுடர் என்ற புதினம் நூற்றைம்பது பக்கங்களையும், இருபத்திரண்டு அத்தியாயங்களையும் உடையது. இந்தப்புதினம் குஜராத்தின் கிழக்குப் பகுதியில் உள்ள பீகார் என்ற கிராமத்தில் கதைத் தலைவன் கௌதமனை அறிமுகப்படுத்தும் விதமாகத் தொடங்குகிறது. கௌதமன் இராணுவத்தில் சேர்ந்தபொழுது துருக்கி நாட்டுக்கு உதவுவதற்காகப் பிரிட்டீஷ் அரசு இந்தியப் படையையும் அனுப்பியது. பீட்டர்ஸ் என்ற படைத் தலைவன் கௌதமன், மங்கள் பாண்டே உதவியுடன் எதிரியின் வெடிமருந்துக்கிடங்கைத் தகர்த்தனர். அன்று இரவு ஜான்சன் குடி வெறியில் மங்கள் பாண்டேயை வம்பிக்கிழுத்து ஏச, சண்டை உச்ச நிலை அடைந்து ஜான்சனைக் கொல்லும் நிலைக்குப் போகிறான். அவனைத் தடுக்க கௌதம் செல்கிறான். அதனால் இருவர் மீதும் கொலைக் குற்றம் சாட்டப்படுகிறது, அங்கு அதை நிறைவேற்றினால் இந்தியர்கள் கோபம் அடைவர் என்பதால் படைத்தலைவர் பீட்டர்ஸிடம் ‘‘சரி உன் படையை இந்தியாவிற்கு அழைத்துப்போ; மன்னிப்புக் கோரும் விண்ணப்பத்தை நான் அரசினருக்கு அனுப்புகிறேன். நீ பம்பாய்க்குப் போய் இரண்டொரு மாதங்கள் காத்திரு பதில் கிடைக்காவிட்டால் இருவரையும் சுட்டுக் கொல்ல உனக்கு அதிகாரம் உண்டு’’[58] என்று கூறி அனுப்புகிறார். பீட்டர்சுடன் கிளம்பிய மங்கள்பாண்டேயும் கௌதமனும் கப்பலில் இருந்து கடலில் குதித்துத் தப்புகின்றனர். கௌதமன் ருத்ரதத்தரால் காப்பாற்றப்படுகிறான்.

ருத்ரதத்தர் வீட்டிற்கு வந்த ஆங்கிலேயேச் சிப்பாய்கள் கௌதம் எங்கே என்று கேட்டனர்.அவர் தெரியாது என்றவுடன் வீட்டைச் சோதித்து விட்டு செல்கின்றனர்.ருத்ரதத்தரைக் காண வந்த தாந்தியாதோபே பேசி முடித்தபின் அவர் கவலையுடன் செல்வதையே பார்த்துக் கொண்டிருந்த தத்தர் தன்

மனதிற்குள் ‘‘எல்லாம் வீண் இது கடைசி வேள்வியாகத் தோன்றுகிறது இதனால் முகலாயர்களும், பீஷ்வாக்களும் அழிவார்கள் இனி ஏதோ ஒரு புதிய ஆட்சி வரப்போகிறது’’[59] என்று நினைக்கின்றார்.

கௌதம் தான் பத்துப் பதினைந்து நாட்களில் கட்டளை வந்தவுடன்சென்று விடுவேன் என்று ருத்ரதத்தரிடம் கூறுகிறான். அன்று இரவு ஆற்றங்கரை புதருக்குப் பின்னால் கௌதமைச் சந்தித்த மங்கள் பாண்டே, மூன்று வெள்ளையரைக் கொன்றுவிட்டேன். குதிரையும், ஆயுதங்களும் தயாராக இருக்கின்றன. உனக்கு இடம் தெரியுமே அங்குவா என்று கூறிவிட்டுச் செல்கிறான். கௌதம் ஊர் எல்லையில் இருந்த குதிரையின் மீது ஏறிச் செல்கிறான். இரண்டு நாள் கழித்து அவனுக்குப் புதிய குதிரை கிடைக்கிறது. தொடர்ந்து பயணிக்கிறான் வழியில் ஒரு சத்திரத்தில்சையது, பாபா ஆகிய இருவரைச் சந்திக்கிறான். அவர்கள் மூலம் பசுவின் கொழுப்பும், பன்றியின் கொழுப்பும் கலந்து பூசப்பட்ட குண்டுகளைக் கொடுத்து இராணுவத்தில் உபயோகப்படுத்த நிர்ப்பந்திக்கப்படுவதை அறிகிறான்.அதனால் கோபம் அடைந்த பாண்டே இரண்டு ஆங்கில வீரர்களைக் கொன்று விடுகிறான். அதனால் கௌதமன் கைதாகிறான்.கௌதமை மீட்பதற்காக கல்யாணி, திரியம்பகன், ருத்ரதத்தர் ஆகிய அனைவரும் செல்கின்றனர்.

கலகக்காரர்கள் ருத்ரதத்தரைக் கொன்று விடுகின்றனர். அவரது ஈமக்கிரியைகள் நடைபெறும் முன் கௌதம் வந்து விடுகிறான். அவனும் அதில் பங்கு கொள்கிறான். பின் கௌதம் போகும் இடம் எல்லாம் புரட்சிக்காரர்களை திரட்டிக் கொண்டு புரட்சிக் கொடியைப் பறக்க விட்டுக் கொண்டே போகிறான். அவர்களைப் பின்பற்றி கல்யாணியும் திரியம்பகமும் மாறு வேடத்தில் சென்றனர்.

கோட்டையைக் கைப்பற்றி கோட்டையின் மீது கொடியேற்றிவிட்டு ஹர ஹர மகாதேவ், அல்லாஹு அக்குபர் என்ற முழக்கங்கள் முழங்கப்படுகின்றன அந்தக் கோட்டையில் இருந்து ஜாக்சனை கௌதம் விடுதலை செய்கிறான் ஆனால் அவன் பம்பாயிலிருந்து வந்த ஆங்கிலப்படையுடன் சேர்ந்து மீண்டும் போரிடலானான். உயிருக்குப் போராடும் நிலையில் ஜாக்சன் தண்ணீர் கேட்கிறான். கௌதம் அவனுக்குத் தண்ணீர் அளிக்கிறான். ஆனால் அவன் கௌதமைக் கட்டாரியால் கொன்று விடுகிறான். உயிர் பிரியும் நிலையில்கல்யாணியும், கௌதமும் உள்ளத்தால் இணைகிறார்கள். கல்யாணி கௌதமுடன் இறக்கத் துணிகிறாள். திரியம்பகன் நீ உன் கணவன் விட்டுச் சென்ற கடமையை நிறைவேற்ற வேண்டும் என்று சத்தியம் வாங்கிக் கொள்கிறான். ராணுவ மரியாதையுடன் கௌதமின் சடலம் சிதை மீது ஏற்றப்பட்டது. வீரமும் வீரத்தைப் போற்றுவோரும் இருக்கும் வரை கௌதம் என்ற அந்த பெயர் வாழ்ந்து கொண்டிருக்கும் என்ற ஆசிரியர் கூற்றுடன் கதை நிறைவு பெறுகிறது.

## 20.காலவெள்ளம்

இந்திரா பார்த்தசாரதி எழுதிய காலவெள்ளம் என்ற புதினம் முந்நூற்று நான்கு பக்கங்களையும், இருபத்தொருஅத்தியாயங்களையும் உடையது. இப் புதினம் திருவரங்கத்தில் உள்ள பச்சைக்கல் பத்பனாபாச்சாரியாரை அறிமுகப்படுத்தும் விதமாகத் தெடாங்குகிறது. பெண் குழந்தை இல்லை என்பது தான் அவரது ஒரேகுறை. அதற்காகச் செல்லம்மாள் என்ற ஏழைப் பெண்ணை இரண்டாவதாகத்திருமணம் செய்து கொள்கிறார். ஆனால் செல்லத்திற்கும் ஆண் குழந்தை தான் பிறக்கிறது. செல்லத்திற்குக் குழந்தைப் பிறந்தபின் முதல் மனைவி அலமேலுவிற்கு பெண்குழந்தை பிறக்கிறது. குழந்தை பிறந்த இருபத்தெட்டாவது நாளில் அலமேலு

இறந்துவிடுகிறாள். கணவனின் தொல்லை தாங்காமல் செல்லம் திருச்சி வருகிறாள். தன் தாயிடம் கூறி இருவரும் சென்னை செல்கின்றனர். பச்சைக்கல் தனது தூரத்து உறவினளான ஒரு பாட்டியை அழைத்து வந்து குழந்தைகளை வளர்த்து வந்தார். ஒரு நாள் வீரராகவாச்சாரியார் குழந்தைகளை அழைத்துக் கொண்டு தன் வீட்டிற்குச் செல்கிறார், அங்கு கோபாலன் செல்லம்மா பையன் மற்றவர்கள் அலமேலுவின் குழந்தைகள் என்பதை வெளிப்படுத்துகிறார். மறுநாள் கோபாலன் தன் அம்மாவின் படத்தை வரைந்து காட்டும்படி கூறுகிறான். சாரங்கன் வரைந்து காட்டுகிறான் உப்பிலி அதை எடுத்துக் கொண்டு போய் தந்தையிடம் காட்டுகிறான். பச்சைக்கல் கோபம் அடைந்து இனி நீ வீட்டில் இருக்க வேண்டாம் என்று கூறிக் கோபாலனை அடிக்கிறார். இதனால் சாரங்கன் ஊரைவிட்டுச் சென்று விடுகிறான். படிப்பு வராததால் உப்பிலியை எட்டாவதுடன் நிறுத்தி விடுகிறார். வேதவல்லியை ஐந்தாவதுடன் நிறுத்திவிடுகிறார். கோபாலன் மெட்ரிகுலேசனில் மாகாணத்திலேயே முதலாவதாக வருகிறான். தலைமை ஆசிரியர் பரிந்துரையினால் சென்னையில் உயர்கல்வி கற்கச் செல்கிறான்.

மகள் வேதவல்லியை மன்னார்குடியில் உள்ள சாரங்கபாணி ஐய்யங்கார் மகன் ராஜகோபாலுக்கு மணமுடித்துக் கொடுக்கிறார். திருமணம் வெகு விமரிசையாக நடைபெற்றது. சென்னை திரும்பிய கோபாலனுக்கு மனம் படிப்பில் செல்லவில்லை. நாடெங்கும் சுதந்திரவேட்கை பரவியிருந்ததால் நண்பன் ராஜகோபாலனுடன் அரசியல் கூட்டங்களில் பங்கு கொள்ள ஆரம்பித்தான். அவனது நா வன்மை அனைவரையும் கவரத்தொடங்கியது. திருவல்லிக்கேணியில் ஒரு கூட்டத்தில் பேசிவிட்டுத் திரும்பிய கோபாலனைத் திடீரென்று ஒரு பெண்மணி நிறுத்துகிறாள். அவள் அந்த வட்டாரத்துப் பெண்கள் சங்கத்தின் தலைவி கமலா ஆவாள். அவனிடம் நீ எந்த ஊர்

படிக்கவில்லையா? என்று கேட்கிறாள் தன்னைப் பற்றி கூறும் போது திடீரென்று உணர்ச்சி வசப்படுகிறான். இதன் இடையில் ‘‘நாட்டு விடுதலைக்காக மூச்சுள்ளவரைப் போராடுவதைத் தவிர வேறு எந்தவித ஈடுபாடும் தனக்குக் கிடையாது என்பதை ஒரு வெள்ளைத் தாளில் எழுதித் கோபாலனையும் அதில் கையெழுத்திடத் தூண்டினான்’’[60] இராஜாராமன்.

ஒருநாள் கோபாலன் கமலாவைப் பார்க்கிறான். அவளிடம் பேசும்போது வேதவல்லியைப் பற்றிக் கூறுகிறான். அவள் கூறியதன்படி கோபாலன் தனது சகோதரி வேதவல்லியை அழைத்துக் கொண்டு மன்னார்குடியில் உள்ள அவர்கள் வீட்டுக்குச் செல்கிறான்.சாரங்கபாணி ஐயங்கார் வேதாவை ஏற்றுக் கொண்டதுடன் அவள் இனி எக்காரணம் கொண்டும் ஸ்ரீரங்கம் செல்லக்கூடாது என்று கூறிவிடுகிறார். சரி என்று ஒப்புக் கொண்டு அவளை அங்கு விட்டு விட்டு ஸ்ரீரங்கம் வருகிறான் கோபாலன். பச்சைக்கல் தன்னைச் சென்னைக்கு அழைத்துச் செல்லுமாறு கோபாலனிடம் கூறுகிறார். ஊரிலிருந்து திரும்பிய கோபாலன் கமலாவிடம் தன்னுடன் தந்தையும் வந்திருப்பதைக் கூறுகிறான். கமலாவிடம் தன் தந்தையைப் போய் பார்க்கும்படி கூறுகிறான். அவள் மறுத்து விடுகிறாள்.

கமலா அவனிடம் நீ போலீஸில் சரணடை; மீதியை நான் பார்த்துக் கொள்கிறேன் என்கிறாள். கோபாலன் அவள் மீது கோபம் கொண்டு நேராக காங்கிரஸ் கட்சி காரியாலயம் வருகிறான். துரைராஜ் என்பவரிடம் தான் பம்பாய் போவதாகக் கூறுகிறான். பம்பாய் சென்ற கோபாலன் குறித்துள்ள முகவரிக்குச் சென்று தேஷ்பாண்டேயைக் காண்கிறான்.அவன் பம்பாயைச் சுற்றிவரும் போது தன் அண்ணன் சாரங்கனைச் சந்திக்கிறான். தேஷ்பாண்டேயைக் கைது செய்து விட்டார்கள்என்ற செய்தி அறிந்தகோபாலன், சாரங்கன், அவன் மனைவி சந்தியாவுடன் சென்னை

வருகின்றனர். கோபாலனைத் தேடி வேதா, ராஜகோபாலன் மூவரும் கமலா வீட்டிற்கு வருகின்றனர். கமலா தான் யார் என்பதைக் கூறி விடுகிறாள். இதேநேரத்தில் சாரங்கன், கோபாலன், சந்தியா மூவரும் பச்சைக்கல்லைச் சந்திக்கின்றனர். அவர் சுயநினைவற்று இருக்கிறார். கோபாலன் தான் மட்டும் கமலாவைக்காணச் செல்கிறான் எல்லோரும் பச்சைக்கல்லை பார்க்க வருகின்றனர். இராஜாராமன் மதுரையில்கைது செய்யப்பட்டதை அறிகிறார்கள். அவர்கள் வீட்டிற்கு வந்து பச்சைக்கல்லைப் பார்க்கும் போது அவர் எந்த உணர்வையும் காட்டாதவராக இருக்கிறார். அப்பொழுது கோபாலனைக் கைது செய்யப் போலீஸ் வருகிறது என்ற நிலையில் கதை நிறைவடைகிறது.

## 21.ஆத்மாவின் ராகங்கள்

நா.பார்த்தசாரதி எழுதிய ஆத்மாவின் ராகங்கள் என்ற புதினம் இருநூற்று அறுபத்து மூன்று பக்கங்களையும், பதினைந்து அத்தியாயங்களையும் கொண்டுள்ளது. தியாகமும், தேசபக்தியும் சராசரி இந்தியனின் விரதமாக மாறிய சுதந்திர வேள்வித் தீயில் கலந்து அதன்பின் அதையடுத்த பரபரப்பான காலத்தில் தனியே விலகி வாழ்ந்த ஒரு தேசபக்தனின் கதை ஆத்மாவின் ராகங்கள் ஆகும். கதாநாயகன் காந்திராமனின் மறைவுச் செய்தியை வெளியிடும் முகமாகக் கதை தொடங்குகிறது. கதாநாயகன் இராஜாராமனும் அவன் நண்பர்கள் சிலரும் திலகர் தேசிய வாசக சாலையில் கூடுகின்றனர். அங்கு அந்நியத்துணி பகிஷ்காரம், கள்ளுக்கடை மறியல் போன்றவற்றைப் பற்றித் திட்டமிடுகின்றனர். கூட்டத்திற்கு ஏற்பாடு செய்தபின் வாசகசாலைக்கு வந்தபோது பத்தர்வாசகசாலை சிஐடி பார்வையில் இருப்பதாகக் கூறுகிறார். உடனே இராஜாராமன் கூட்டம் நடத்தும் இடத்தை மாற்றியபின் பத்தரிடம் அதனைக்கூறிவிட்டுச் செல்கிறான். இராஜாராமன் வந்திருந்த மூன்று

நண்பர்களைக் கொண்டு போராட்டத்தைத் துவங்குகிறான். போலீஸ் காரர்கள் வந்து அவனைக் கைது செய்து கொண்டு போய் லாக்கப்பில் வைக்கின்றனர். ரிமாண்டு விசாரணைக்குப்பின் வேலூருக்கு கொண்டு செல்லப்படுகிறான். அவனைக் கைது செய்து போலீஸ் அழைத்துச் செல்வதை மதுரம் பார்க்கிறாள். இராஜாராமன் வேலூர் சப்ஜெயிலில் ‘சி’ வகுப்பில் அடைக்கப்பட்டான். அங்கு புதுக்கோட்டையைச் சேர்ந்த பிரகதீஸ்வரர் என்பவர் இராஜாராமனின் நண்பராகின்றார்.

சிறையிலிருக்கும் போது இராஜராமனின் தாய் இறந்து விட்டதாகவும், யாரேனும் பரோலில் அழைத்துச் செல்ல வந்தால் அனுப்புவதாகவும் சிறை அதிகாரி கூறிவிட்டுச் சென்றார். தான் போய் இனி ஆகப்போவது என்ன என்று கூறி இராஜாராமன் அங்கேயே இருந்துவிட்டான். சிறையிலிருந்து திரும்பியதும் பத்தரிடம் அவர் எவ்வாறு உதவி செய்தார் வருவாய் குறைவே என்று கேட்கிறான். அப்பொழுது அவர் இராஜாராமன் சிறைக்குச் சென்றபின் மதுரம்தான் உதவியதாகக் கூறுகிறார். முதலில் அவளை வெறுத்துப் பேசியவன் பின் ஒருவாறு மனது தேறி அவளை ஏற்றுக் கொள்கிறான். பத்தரும் “கவலைப்படாதீங்க தம்பி தப்பான காரியத்துக்கு நான் எப்பவும் ஒத்தாசையாக இருக்கமாட்டேன் எது கில்ட் எது அசல்னு எனக்கு நல்லாத் தெரியும் வீணாமனது நோகச்செய்யாதீர்கள்”[61] என்றார். இதனால் இராஜாராமன் மதுரம் காதல் அரும்ப ஆரம்பித்தது.

வீடு, நிலம் ஆகியவற்றை விற்ற பணத்தை மதுரத்திடம் கொடுத்த இராஜாராமன் முன்னால் செய்த செலவோடு இனிச் செய்யும் செலவுகளுக்கும் அந்தப் பணத்தைப் பயன்படுத்துமாறு கூறுகிறான். மதுரம் “நீங்கள் ஊரறிய உலகறிய தேசத்துக்காகத் தியாகம் பண்ணுங்கோ; ஆனால் ஊரறியாமல் உலகறியாமல் புகழை எதிர்பாராத ஒரு அந்தரங்கமான தியாகத்தை

உங்களுக்காக நான் பன்றதை நீங்க தடுக்கப்படாது அது நியாயமில்லை தர்மமுமாகாது தயவு பண்ணி இனிமே எங்கிட்ட நீங்க ரூபாய் அணாகணக்குப் பேசக்கூடாது என்கிறாள்.''[62]

நாளடைவில் இராஜாராமன் இளம் தேசியவாதிகளின் அணிக்கு வழி நடத்தும் பொறுப்பை ஏற்றான். காந்தியின் ஹரிஜன நிதிக்கு மதுரம் தன் நகைகளில் கணிசமான பகுதியைக் கொடுக்கிறாள். அப்போது டாக்டர் டி.என்.எஸ்.ராஜன் வாய்தடுமாறி இராஜாராமன் என்பதற்குபதில் காந்திராமன் என்று கூப்பிடுகிறார். காந்தி மதுரைக்கு வந்ததற்கு அடையாளமாக காந்திராமன் என்றே உன் பெயரை மாற்றிக் கொள் என்கிறார் வைத்தியநாதய்யர். மதுரம் தன்னிடம் படிக்க வருபவர்களிடம் காந்தியைப் பற்றியும், கதர் நூற்பு பற்றியும் எடுத்துக் கூறுகின்றாள். அவள் பிரச்சாரத்தினால் பலர் மாறினர்.

மதுரம் தனது மாந்தோப்பினை ஆசிரமத்திற்காகப் பத்திரம் பதிந்து சாசனம் செய்து கொடுத்தாள். ஆசிரம வேலைகள் நடைபெறலாயிற்று. இந்நிலையில் இராஜாராமனும் முத்திருளப்பனும் மறியல் செய்து தனிநபர் சத்தியாக்கிரகத் திற்காகச் சிறை செல்கின்றனர்.

தங்கள் நினைவிலும், கனவிலும் மட்டுமே இருந்த சத்தியசேவாசிரமம் உருவாகி விட்டதைக் கண்டபோது இராஜாராமனுக்குப் பூரிப்பாயிருந்தது. 1942-இல் வெள்ளையனே வெளியேறு இயக்கம் நாடெங்கும் தீவிரமாகப் பரவியது 'செய் அல்லது செத்துமடி''வெற்றி அல்லது இறுதிவரை போராட்டம்'என்ற முழக்கங்கள் ஒலித்தன. இராஜாராமன் கமிட்டி ஆபிசில் வைத்துக் கைது செய்யப்பட்டு வேலூர் சிறையில் வைக்கப்பட்டிருந்தான். பின் அமராவதியில் சிறை வைக்கப்பட்டான் இது கொடுமையின் எல்லைகளைக் கொண்டதாய் இருந்தது. 1945-ஆம் ஆண்டின் முற்பகுதியில் விடுதலை செய்யப்பட்டான்.

அவன் வந்து பார்க்கும் போது வாசக சாலை, பத்தர் கில்ட்டு கடை, மதுரத்தின் வீடு ஒன்றும் இல்லை. இறுதியாகப் பத்தர் பையன் கடையைக் கண்டுபிடித்துச் சென்றபோது அவன் மூலம் பத்தர் மதுரத்தின் மாமா, மங்கம்மா ஆகிய அனைவரும் இறந்தது, மதுரம் க்ஷயரோகத்தால் பாதிக்கப்பட்ட நிலையில் நாகமங்கலத்தார் குடும்பத்தினர் வந்து அவளை அழைத்துச் சென்றதையும் இப்போது சற்றுத் தேவலாம் என்பதையும் அறிகிறான்.

பிரகதீஸ்வரனும், இராஜாராமனும் நாகமங்கலம் செல்கின்றனர். அங்கு மதுரத்தின் நிலையைப் பார்த்து உருகுகிறான். மதுரத்திற்குக் கொஞ்சம் உடல் நிலை தேறியபின் காலை, மாலை வேளைகளில் அவளை உலாவ அழைத்துச் செல்கிறான். ஒருநாள் மாலை உலாவி விட்டு வந்ததும் இராஜாராமன் முதலில் பாடிக் காட்டிய பாடலைப் பாடுகிறாள். அதனால் அவள் இரும ஆரம்பிக்கிறாள். இராஜாராமன் மருத்துவரை அழைத்துவரச் செல்கிறான் அவன் வருவதற்குள் அவள் இன்னுயிர் பிரிந்து விடுகிறது. அவளது பிரிவின் சோகத்தால் இராஜாராமன் படும் அவஸ்தையை அறிந்து அவனைத் அழைத்துச் சென்று தன்னுடன் தங்க வைத்துக் கொண்டார் பிரகதீஸ்வரன். காந்தியடிகளை வணங்கும் பாக்கியமும் வாய்மொழியாகவே ஆசி பெறும் பேறும் அவர்களுக்குக் கிடைத்தது. ‘‘எல்லாத் தொழில்களையும் யந்திரமயமாக்கிவிட்டால் கிராமங்களும் தரித்திர நாராயணர்களும் வருந்திப் பாழடைய நேரிடும். சர்க்கா, நெசவு போன்ற குடிசைத் தொழில்கள் பெருகவும் வளரவும் உங்கள் சத்திய சேவாசிரமம் பாடுபடவேண்டும்’’[63] என்று இராஜாராமனிடம் கூறினார் மகாத்மா.

சேவாசிரமத்திற்கு அரசு அங்கீகாரமும் அதனுடைய ஒதுக்கீடாக பெருந்தொகையும் கிடைத்தது. பல புதிய வகுப்புகளும் பெருகின,

இராஜாராமன் புகழ் நாடெங்கும் பேசப்பட்டது. 1947-ஆம் ஆண்டு இந்தியா விடுதலை அடைந்ததை மகிழ்ச்சியுடன் கொண்டாடினர். எங்கும் மூவர்ணக் கொடிகள் பட்டொளிவீசின சுதந்திர தினத்தன்று தன்னுடைய பழைய விரதம் இராஜாராமனுக்கு நினைவுக்கு வந்தது. வாழ்வில் கலக்க முடியாத இராஜாராமனும் மதுரமும் தியாகங்களில் கலந்து விட்டார்கள். 1948-ஆம் ஆண்டு ஜனவரி 30-ம் தேதி பிரார்த்தனைக் கூட்டத்திற்குப் போகும் போது காந்திமகான் சுட்டுக் கொல்லப்பட்டார். செய்தி கேட்ட இராஜாராமன் மூர்ச்சையாகிவிட்டான். மறுநாள் இராஜாராமனும், பிரகதீஸ்வரனும் ஓடையில் மூழ்கி மகாத்மாவுக்காக அவர் மீது வைத்திருந்த பாசத்தின் அடையாளமாகத் தர்ப்பணம் செய்தனர்.இராஜாராமன் தன் பெயரை காந்திராமன் என்று மாற்றிக் கொண்டு கெஸட்டுக்கும் அறிவித்து விட்டான். ஆசிரமப்பணியே தன் பணியாகப் கொண்டு செயலாற்றலானான். நாட்டுக்கு நான் எதைச் செய்ய வேண்டுமோ அதை இந்த ஆசிரமத்தின் மூலம் தாராளமாகச்செய்வேன் என்று கூறி தன்னை நாடி வந்த பதவிகளை விலக்கிவிடுகிறான்.

அடிக்கடி நெஞ்சு வலியாலும் இரத்தக் கொதிப்பாலும் அவஸ்தைப்பட்டார். மதுரத்தின் சிரார்தத்த தினத்தன்று நாகமங்கலம் சென்று வந்தார் இரவு படுக்கப் போகும் போது நெஞ்சு வலி அதிகமாயிற்று கண் எதிரே வீணையைக் கொண்டு வந்து வைத்துக் கொண்டார், அதனைக் கண்ணால் கண்டு கொண்டிருக்கையிலேயே அவரது ஆன்மா உடலை விட்டுப் பிரிந்தது. என்ற நிலையில் கதை நிறைவு பெறுகிறது.

## 22.கல்லுக்குள் ஈரம்

ர.சு.நல்லபெருமாள் எழுதிய கல்லுக்குள் ஈரம் என்ற புதினம் எழுநூற்று இருபதுபக்கங்களையும், ஐம்பத்தொருஅத்தியாயங்களையும் உடையது. கதைத் தலைவன் இரங்கமணியை அறிமுகப்படுத்தும் விதமாகக் கதை

தொடங்குகிறது இரங்கமணியின் கண்ணெதிரிலேயே அவன் தந்தை விடுதலைப் போராட்டத்தில் உயிரை விடுகிறார். அதனால் ஒரு ஆங்கிலேயன் உயிரையாவது எடுக்க வேண்டும் என்ற எண்ணத்துடன் தீவிரவாதி ஆகிறான். இரங்கமணி தாத்தாவின் கூற்றின் பேரில் சங்கரராம தீக்ஷிதர் என்ற காங்கிரஸ்காரர் மூலம் காந்தியடிகளைச் சந்திக்கிறான். அப்பொழுது அவன் மனதில் காந்தியடிகளும், ஆசிரமச் சூழ்நிலையும் தன்னை மாற்றிவிடும் என்று தோன்றவே சென்னைக்கு வந்து விடுகிறான். சென்னையில் சர்தார் சொக்கலிங்கம் என்பவரைச் சந்திக்கிறான்.

அவர் அவனை நெல்லையில் உள்ள சுயேச்சைப் பத்திரிகையின் உதவி ஆசிரியர் ஆக்குகிறார். இரங்கமணி சர்தாரின் வீட்டில் தங்குகிறான். சர்தாரின் பெண் திரிவேணியுடன் பழக்கம் ஏற்படுகிறது. அவனை 1910-ல் நடைபெறும் கிரிப்ஸ் தூதுக்குழு நிகழ்ச்சிகளை அறியவும் அங்கு நடைபெறும் நிகழ்ச்சிகளைப் பதிவு செய்துவரவும் டில்லிக்கு அனுப்புகிறார். இரங்கமணி டெல்லி செல்லும் போது மில்லர் என்ற அமெரிக்க நிருபரைச் சந்திக்கிறான். டில்லியில் சர்தார் கேட்ட கருவி கிடைப்பதற்கு இரண்டு மூன்று வாரங்கள் ஆகும் என்பதால் அவனைச் சுயேச்சை பத்திரிகை நிருபராகச் செயல்படச் சொல்கிறார்கள். மூன்று வாரங்கள் சென்ற பின் ‘‘டில்லியில் உள்ள இயக்கத்தலைவர் இரவிந்திரசென் குப்தா என்பவர் ஒரு பகுதிதான் கிடைத்துள்ளது இதை எடுத்துச் செல்லுங்கள் மீதிப் பகுதியை பம்பாயிலிருந்து பெறலாம் இது பற்றி சர்தாருக்கு நான் செய்தி அனுப்பிவிடுகிறேன்’’[64] என்று கூறி அனுப்பிவிடுகிறார். பம்பாயில் ஆகஸ்ட் முதல் வாரத்தில் ரேடியோ ஒலிப்பரப்பின் பாக்கிக் கருவிகளை பம்பாயில் வந்து பெற்றுக்கொள்ளுமாறு இரவிந்திரசென் குப்தாவிடமிருந்து தகவல் வரவே இரங்கமணியை சர்தார் பம்பாய்க்கு அனுப்புகிறார். பம்பாயிலும்

அமெரிக்க பத்திரிக்கை நிருபர் மில்லரை இரங்கமணி சந்திக்கிறான். மேலும் நேருவை சந்தித்து பேட்டி எடுக்கிறான். சங்கர் தேவ் என்ற போலீஸ் அதிகாரி புத்தக வடிவில் இரண்டு கைத் துப்பாக்கிகளை ரங்கமணியிடம் கொடுத்து சர்தாரிடம் அளிக்குமாறு கூறுகிறார். மறுநாள் மகாத்மா காந்தி, நேரு உட்பட அனைத்துத் தலைவர்களையும் விலங்கிட்டு அழைத்துச் செல்கின்றனர், என்ற செய்தியைச் சேகரித்துக் கொண்டு ஹோட்டலுக்கு வருகிறான். அங்கு மில்லர் "நேரு கொடியேற்றுவதாக இருந்த இடத்தில் பொதுமக்கள் கொடியேற்ற உள்ளார்கள், நாம் சென்று பார்த்துவிட்டு வருவோம் என்று கூறுகிறான். அங்கும் நடந்த வீரச்செயல்களைப் பார்த்துப் படம் எடுத்து வருகின்றனர்."[65]

அவன் நெல்லை வருவதற்குள் நெல்லையில் ஏற்பட்ட போராட்டத்தில் வெங்குவும், திரிவேணியின் அத்தையும் இறந்துவிடுகின்றனர். இதன் நடுவில் சர்தார் தம் கூட்டத்தினரிடம் தம்இயக்கம் நடத்தும் பெரிய செயலுக்கு டி.எஸ்.பியினுடைய மனைவி கமலவாசகி வெளியில் இருந்தால் ஆபத்து என்றும் அவளைப் பாபநாசத்தில் வைத்து கடத்திவிடவும் திட்டம் தீட்டுகிறார். அதனைச் செயல் படுத்துவதை இரங்கமணி செய்யவேண்டும் என்று கூறுகிறார். இரங்கமணி அவளைக் கடத்தும் போது தான் காதலித்த ராணிதான் கமலவாசகி என்பதை அறிந்து கொண்டு கடத்தாமல் திரும்பிவிடுகிறான். சர்தார் காரணம் கேட்ட போது இது முற்றிலும் தனது சொந்த விசயம் இதற்கு என்ன தண்டனை அளித்தாலும் ஏற்றுக்கொள்ளத் தயார் என்கிறான். கமலவாசகி வீட்டிற்கு வந்தபின் இரகசிய போலீஸ் கிருஷ்ணனிடம் சுயேச்சை அச்சகத்தைக் கண்காணிக்கும்படியும் தன் கணவன் சிவானந்தத்திடம் நேரம் வரும் போது கூறலாம் என்று கூறுகிறாள்.

சர்தார் தன் அச்சகத்தில் இரகசியக்கூட்டம் கூட்டுகிறார். அதில் முன்தினம் பம்பாயிலிருந்து ரேடியோ செய்தி வந்ததாகவும் அதில்

திருவனந்தபுரத்திலிருந்து இன்னும் பத்து நாட்களில் ஒரு இரயில் வண்டி நிறைய வெள்ளைக்காரப்படை வருகிறது. கிட்டத்தட்ட அறுநூறு வெள்ளைக்காரர்கள் இருப்பார்கள் நல்லசந்தர்ப்பம் அத்தனை பேரையும் ஒருநேரத்தில் பரமண்டலத்திற்கு அனுப்பிவிட்டால் அரசாங்கத்திற்குப் பெரிய அதிர்ச்சியாய் இருக்கும் என்கிறார். அதன் படி வண்டியை சேரன்மாதேவியில் கவிழ்க்கத்திட்டமிட்டு இரங்கமணி, மீனாட்சிநாதன் இருவரும் செல்கின்றனர். தன் தந்தை மீது சந்தேகம் கொண்டு திரிவேணி சுயேச்சை பத்திரிகை நிறுவனத்திற்குச் சென்று பார்க்கிறாள். அவர்களது சதித்திட்டத்தை அறிந்து கொண்டு இரயில் கவிழ்ப்பைத் தவிர்க்க தீக்ஷிதரைத் துணைக்கு அழைத்துக் கொண்டு சென்று வெடிகுண்டை வெடிக்கவிடாமல் செய்கிறாள். ஆனால் பயங்கரவாதிகளின் துப்பாக்கிக் குண்டிற்கு இரையாகிறாள். போலீஸ்காரரிடமிருந்து தப்பித்துச் செல்லும் போது இரங்கமணி திரிவேணி இருக்கும் இடத்தில் விழுகிறான்.

அவன் மடியில் திரிவேணி உயிர்விடுகிறாள். சிவானந்தத்திடம் இரங்கமணி சரண் அடைகிறான். நீதிமன்றத் தீர்ப்புக்கு பின் அவனுக்கு ஆயுள் தண்டனை கிடைக்கின்றது. சுதந்திரம் அடைந்ததன் காரணமாக ஐந்து ஆண்டுகளிலேயே இரங்கமணி விடுதலை செய்யப்படுகிறான். விடுதலைக்குப்பின் காந்தியைப் பார்ப்பதற்காக டில்லி செல்கிறான், நேரமாகிவிட்டதால் காந்திஜி பிரார்த்தனைக் கூட்டத்திற்குச் செல்லும் வழியில் நின்று பார்க்கிறான். அப்போது விநாயகராவ் என்பவன் காந்திஜியைச் சுட்டுவிடுகிறான். கீழே விழப் போன காந்தியை பாபுஜி என்று கூறித் தன் கையில் தாங்கிக்கொள்கிறான். காந்தியின் இரத்தமும் இரங்கமணியின் கண்ணீரும் ஒன்றாயிற்று என்ற நிலையில் கதை நிறைவுறுகிறது.

## 23.வளைக்கரம்

ராஜம் கிருஷ்ணன் எழுதிய வளைக்கரம் என்ற புதினம் இரண்டு பாகங்களையும், ஐம்பத்தொன்பது இயல்களையும், எழுநூற்று இருப்பத்தாறு பக்கங்களையும் உடையது. இப்புதினம் போர்ச்சுக்கீசியரின் காலணியான கோவா விடுதலைப் போராட்டத்தை விளக்கும் முகமாக அமைந்துள்ளது. மாதவன் கோவாவில் உள்ள பனஜீயில் பிறந்தவன், தாயை இழந்ததன் பின் சிற்றன்னையால் வளர்க்கப்பட்டவன். கல்லூரிப் பட்டம் பெறுவதற்காக ஐந்தாறு ஆண்டுகள் பூனாவிற்கும், பம்பாய்க்கும் சென்றவன் மீண்டும் தன் தாய் மண்ணிற்கு வருகிறான். அவன் ரகோத்தமர் வீட்டிற்கு வரும் போது அங்கு 1942-இல் நடந்த வெள்ளையனே வெளியேறு இயக்கத்தில் சேர்ந்து சிறை சென்றுவந்த இராதாநாத்தைச் சந்திக்கிறான்.

அன்று மாலை கூட்டம் முடிந்தபின் ரகோத்தமர் தன் மகளை மாதவன் மணக்க வேண்டும் என்று கேட்கிறார். கூட்டத்திற்கு வந்த லூசியா என்பவள் புதன் கிழமை மாலை மாப்பசா நகரை அடுத்த மாந்தோப்பு இல்லத்தில் ஒரு லிடணி (கூட்டம்) நடைபெற உள்ளது. அதற்கு மாதவன் வரவேண்டும் என்று அழைத்துவிட்டு செல்கிறாள். அக்கூட்டம் போர்ச்சுக்கல் சர்க்காரை எதிர்க்க நடைபெறும் கூட்டம் என்பதை மாதவன் உணர்கிறான். ரகோத்தமரை அவர் மனைவி மகளின் திருமணம் பற்றி இறைவனிடம் பூ கேட்டு வருமாறு அனுப்புகிறாள். அதே நேரத்தில் மாதவனும், அவன் சித்தி ருக்மணியும் பூ கேட்க வந்து நிற்கின்றனர். பூஜை செய்பவர் இறைவனிடம் கேட்டு பூ பிரசாதம் கிடைத்துள்ளது. புதிய வேலை ஏற்கப் போகலாம் என்று மாதவனிடமும், திருமணத்தை நன்கு நடத்தலாம் என்று ரகோத்தமரிடமும் கூறுகிறார்.

இந்த நேரத்தில் லூசியா ஒரு கற்றைத் துண்டுப் பிரசுரங்களை டிசௌசா தந்ததாகக் கூறி இராதாநாத்திடம் தருகிறாள். அங்கு வந்த தினேஷ், லூசியா,புரட்சிக்காரி அல்ல; அவள் போலீஸ் இன்ஸ்பெக்டர் ஜோவின் கையாள் என்று கூறிச் செல்கிறான். மாதவனுக்கும் சுஜாதைக்கும் திருமணம் நடைபெறுகிறது. அந்த வருட மார்ச்சு மாத உற்சவத்தின் போது மாதவன் அளித்த பிரகலாத நாடகம் அரங்கேறுகிறது. இரண்யனாக ஈசானும் பிரகலாதனாக முரளிதரும் நடிக்கின்றனர். ‘‘ஜெயநாராயணா, ஜெயநமோநாராயணா, ஜெய்ஹிந்த், வந்தேமாதரம் என்கிறான். பிரகலாதன் இந்த பக்தனை தாய்த் திருநாட்டின் தொண்டனை சிறை என்ன செய்யும் என்கிறான். மேலும் ‘அரி அரி’ என்றொரு காந்தி அளித்ததோர் தெம்பு எனக்குண்டு. அரே உன் சாட்டை வீச்சுக்கும் உன் துப்பாக்கிக் குண்டுக்கும் அஞ்சிடும் புழுவில்லை நான்’’[66]என்கிறான். இரணியனின் வாக்கிலே பிரிட்டிஷ் ஏகாதிபத்தியச் செருக்கும் போர்ச்சுகீசிய காலனி ஆதிக்க வெறியும் முறுகி நிற்கின்றன.

மடகாவ் இரயில் வண்டி நிலையத்திற்கு அருகில் உள்ள மைதானத்தில் போர்ச்சுக்கீசிய அரசை எதிர்த்துக் கூட்டம் நடைபெற உள்ளது. அதற்காக ஈசான், லூசியா, முரளி, ரவி ஆகியோர் கொடியை ஏந்திக்கொண்டு செல்கின்றனர். கூட்டம் மைதானத்தை அடைகிறது. போலீஸ் தலைவர் ஜோ துப்பாக்கியுடன் வரும் போது சகோதரிகளே தயங்காதீர்கள் என்ற லூசியாவின் குரலைக் கேட்டுத் திகைக்கிறான். போலீசார் கூட்டத்தினரை அடித்துக் கொட்டடியில் அடைக்கின்றனர். பாரதத்தலைவரையும், இராதாநாத்தையும் சிறை செய்து வழக்குத் தொடுத்து ஏழுவருடம் நாடு கடத்துகின்றனர். விநாயகசதுர்த்தி பூஜையை ஒட்டி மாதவன் கல்யாண்பூர் வருகிறான். அவனை ரயில் நிலையத்திலேயே கைது செய்து

அழைத்துச் சென்று ஒன்றரை வருடம் சிறை தண்டனை அளிக்கின்றனர். சிறையில் வசதிவேண்டும். என்று உண்ணாவிரதம் இருப்பதால் மாதவனை வேறு சிறைக்கு மாற்றுகின்றனர்.

மாதவனின் அப்பா விஸ்வநாதன் வேலை செய்யும் கம்பெனியின் தானாதாரர் வந்து ‘‘இந்த மேன்மை மிக்க போர்ச்சுகீசிய ஆட்சியின் உண்மையான ஊழியனாக இருப்பதாய் நான் மனம், மெய் சாட்சியாக உறுதியளிக்கிறேன் என்று எழுதிய காகிதத்தைப் காட்டிக் கையெழுத்துப் போடச் சொல்கிறான்’’[67]விஸ்வநாதன் மறுக்க உடன் கைகலப்பு ஏற்படுகிறது. மாதவன் இருக்கும் பங்களாவில் இரகசியக் கூட்டம் நடக்கிறது. அதற்கு வித்தியாசாகர், ஈசான், டிசௌசா, லூசியா போன்றோர் மாறுவேடத்தில் வருகின்றனர். கூட்டம் நடைபெற்ற அன்று ஜோ லூசியாவை அழைத்துக் கொண்டு மாதவன் வீட்டிற்கு வரும் வழியில் கார்மோதி ஜோ இறக்கிறான். இதன் காரணமாக மாதவனுக்கு எட்டு ஆண்டு சிறைத் தண்டனையும், இருபத்தெட்டு ஆண்டுகள் நாடுகடத்தல் தண்டனையும் கிடைக்கிறது. அதனால் சுஜாதையும், ருக்மணியும் முந்திரிப் பருப்பை உடைத்துக் கொடுக்கும் பணத்தைத் கொண்டு காட்டில் வாழ்ந்து வருகின்றனர்.

தினேஷ் அவள் மகன் தாமுவை தன் வீட்டிற்கு அனுப்பிவைக்கும் படி சுஜாதையின் தந்தையிடம் கூறுகிறான். இதனை சுஜாதை மறுத்துவிடுகிறாள். இந்நிலையில், ராதாநாத்தின் மனைவி சாந்தினியுடன் சுஜாதையின் மகன், சித்தி ருக்மணி மாதவன் தங்கை புஷ்பா ஆகியமூவரும் பம்பாய்க்குச் செல்கின்றனர். இந்நிலையில், தினேஷ் வீட்டில் நடைபெறும் விருந்தின் போது போர்த்துகீசிய ஆளுகை நீடுழி வாழ்க அவ்வரசின் உண்மை ஊழியர்களாக காலணி ஆட்சியின் உண்மையான பிரஜைகளாக இருப்போம் என்ற வழக்கமான சொற்களைக்கூறி மது அருந்த ஆரம்பிக்கின்றனர். யஷ்வந்தும்

இதனை மறுத்ததுடன் வீட்டிற்கும் சென்று விடுகிறான். இதனால் யஷ்வந்தும் அவரது மனைவியும் நாடு கடத்தப்படுகின்றனர். கலவரம் ஏற்படவே அரசு அடக்குமுறைச் சட்டங்களைக் கொண்டு வருகின்றது. மகாராஷ்ர மாநில எல்லையில் தொட்டமார்க் கிராமத்தில் போராட்ட வீரர்கள் கூடுகின்றனர். அந்தப் போராட்டத்தில் பங்கு பெற புஷ்பா, சாந்தினி இருவரும் வருகின்றனர். தலைவரான இராதாநாத் கோவா பாரதத்தினைச் சேர்ந்தது. உயிரே போயினும் எங்கள் உரிமையைப் பறிகொடோம் என்று ஒரே குரலாய் ஒலிக்கின்றனர். விஸ்வநாதன் போராட்டத்தில் பங்கு பெற்றதுடன் தாய்நாட்டுக் கொடியை எடுத்துக்கொண்டு ஓடுகிறார். அவரைக் காவலர்கள் சுட்டு வீழ்த்துகின்றனர். இதைக்கண்ட சுஜாதை ஓடிச் சென்று கொடியை எடுத்து நிமிர்த்திக் கொள்கிறாள். சுஜாதையைப் பனஜி நகர் சிறையில் அடைக்கின்றனர். சிறை தண்டனைக்குப் பின் சுஜாதை, இராதாநாத் இருவரையும் கோவா எல்லையைத் தாண்டி போலீஸ்காரர்கள் இறக்கிவிடுகிறார்கள்.

அவர்கள் பம்பாய் சென்று பார்க்கும் போது ருக்மணி கோவா சென்றிருப்பதாக அறிகின்றனர். பல இன்னல்களுக்கு இடையே ருக்மணி தன் மகன் பிரேமைச் சந்திக்கிறாள். அவன் அவளைத் தனது வீட்டிற்கு அழைத்து வருகிறான். வீட்டில் கணவன் விஸ்வநாதனைக் கண்டவுடன் அவரது காலடியிலேயே தமது இன்னுயிரைத் துறக்கிறாள். இராதாநாத்தும், சுஜாதையும் கோவாவில் காட்டிற்குள் எல்லைதாண்டி வந்துவிடுகின்றனர். அவர்கள் இருவரையும் போர்ச்சுகீசியர் கொன்று விடுகின்றனர். மூன்று ஆண்டுகள் கழித்து 1961-ஆம் ஆண்டு டிசம்பர் 19-ஆம் நாள் கோவாவிற்கு விடுதலை கிடைக்கிறது. மாதவன், சாந்தினி இருவரும் வருகின்றனர். ருக்மணி, சுஜாதை, இராதாநாத் போன்றோரின் மறைவு அவர்களை வருத்துகிறது. அவர்கள் இராதாநாத், சுஜாதை இறந்த இடத்தை

பார்த்துவிட்டுத் திரும்பும் போது ஒவ்வொருவர் உள்ளத்திலும் ஒவ்வோர் எண்ணத்துடன் திரும்புகின்றனர் என்ற நிலையில் கதை நிறைவுபெறுகிறது.

## 24.மண்ணில் தெரியுது வானம்

சிதம்பரசுப்பிரமணியன் எழுதிய மண்ணில் தெரியுது வானம் என்ற புதினம் இருநூற்று ஐம்பத்து நான்கு பக்கங்களையும், முப்பத்து நான்கு அத்தியாயங்களையும் கொண்டது. கதைத்தலைவன் நடராஜனின் தந்தை தன் மகன் சென்னை ராஜதானியில் பட்டப்படிப்பில் முதலாவதாக வரவேண்டும் என்று நினைக்கிறார். தேர்வு முடிவு வரும் நாள் அன்று தந்தையும், மகனும் பேசிக் கொண்டிருக்கும் போது நடராஜன் காந்தியைப்பற்றிக்கூறுகிறான். உடன் கோபம் கொண்ட தந்தை ‘‘இந்த பரிட்சையில் நல்லபடியாகத் தேறி ஐ.சி.எஸ் பாஸ் செய்து கலெக்டர் ஆகி வருவாய் என்று கனவு கண்டு கொண்டிருக்கிறேன். பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தின் தூணாக்கப் பார்க்கிறேன். அந்த சாம்ராஜ்யத்தை அசைத்துக் கொண்டிருப்பவரை பற்றிப் பெருமையாகப் பேசுகிறாய், அரசியல் பேச்சே வேண்டாம் என்கிறார்.’’[68] தேர்வுமுடிவுகள் வந்ததும் அவன் முதல் வகுப்பில் தேறியுள்ளதை அறிந்ததும் போட்டித் தேர்வு எழுதுவதற்கு தயார் செய்து கொள்ளக் கூறுகிறார். சாப்பிடும் போது நடராஜன் தனக்கு ஐ.சி.எஸ் படிப்பு வேலையில் விருப்பம் இல்லை என்றும் தன்னால் கலெக்டர் வேலை பார்க்க இயலாது, கலெக்டர் ஆவது தேசத் துரோகமான செயல் என்று கூறுகிறான். மேலும் ‘‘மக்களின் தலைவர்களை தேசத்தின் தலைசிறந்த தியாகிகளைத் துன்புறுத்தும் இழிவான காரியத்தை செய்யும் ஆங்கிலேயனுக்குக் கையாளாக இருந்து, அவன் வாலைப் பிடித்துக் கொண்டு, அவனுக்குப் பல்லைக்காட்டி சம்பளம் பெறும் உத்தியோகத்தைவிட

வேறு எந்த ஈனமான தொழிலையும் செய்யலாம் என்கிறான்”[69] அருணாச்சலம் இதைக் கேட்டு இடிந்து போகிறார்.

தந்தைக்காக நடராஜன் அந்த வருடம் மட்டும் தேர்வுக்குச் செல்வதாகக் கூறுகிறான். குறிப்பிட்ட நாள் அன்று பஸ் டிரைவரிடமும் கண்டக்டரிடமும் ஏற்பட்ட மோதலால் வீட்டிற்கு வந்து விடுகிறான். மீண்டும் நாள் பார்த்ததற்கு முதல்நாள் 144 தடை உத்தரவை மீறி கதர்வேட்டி அணிந்து கொண்டு கூட்டத்திற்குச் செல்கிறான். கூட்டத்தில் போலீசாரால் ஏற்பட்ட மோதலால் அடி வாங்கி மருத்துவமனையில் சேர்க்கப்படுகிறான். வீட்டிற்கு வந்த அன்று போலீஸ் அவனை அழைத்துச் சென்று அது போல் போராட்டங்களில் ஈடுபடுவதில்லை என்று உறுதிமொழி எழுதிக் கொடுத்தால், எவ்வித நடவடிக்கையும் எடுக்கவில்லை என்று கூறுகின்றனர். நடராஜன் மறுத்துவிடவே அவனுக்கு ஆறு மாதச் சிறைத் தண்டனை கிடைக்கிறது. தண்டனைக் காலம் முடிந்து வீட்டிற்கு வந்த நடராஜனைப் பார்க்க மக்கள் வருகின்றனர் அப்பொழுது அவன் தந்தை இது அரசாங்க அதிகாரியின் வீடு காங்கிரஸ் மண்டபம் இல்லை என்று வெறுப்புடன் கூறுகிறார். நடராஜன் கோபத்துடன் தனக்குத்தாய் இல்லை, வீடு இல்லை, வேலை இல்லை, மனைவி இல்லை, தந்தை இருந்தும் இல்லை அதனால் நான் சென்னை செல்கிறேன் என்று நண்பர்களிடம் கூறிவிட்டு சென்னை சென்று விடுகிறான். சென்னையிலிருந்து சேவாதளப் பயிற்சிக்காக பம்பாய் செல்கிறான். 1931-இல் காந்தியடிகள் தண்டியில் செய்த உப்பு சத்தியாக்கிரகத்தின் போது கைது செய்யப்பட்டு எரவாடா சிறைக்குச் சென்ற பின் நடராஜன் மீண்டும் சென்னை உதயவனம் வருகிறான். அப்பொழுது சென்னையில் அந்நியத் துணிக்கடைமறியல் நடந்து கொண்டிருந்தது. அதில் பங்கு கொண்டதன் காரணமாக கையில் எலும்பு முறிவு ஏற்படுகிறது. அப்பொழுது அவருக்கு சரோஜா என்ற பணிப் பெண் உதவியாக இருக்கிறாள். உடல் நலம் பெற்ற

பின் சரோஜாவின் வீட்டு மாடியில் குடியேறுகிறார். ஒரு மாதம் கழித்து பம்பாயில் உள்ள தயாநிதி என்பவர் நடத்தும் பத்திரிகையில் வேலைக்குச்சேருகிறார். பின் கட்டுரைகள், சிறுகதைகள் எழுத ஆரம்பிக்கிறார்.

சரோஜாவின் அம்மா அனுமதியுடன் சரோஜாவை பதிவுத் திருமணம் செய்துகொள்கிறார். பின் 'சங்கத்வனி' என்ற பத்திரிகையில் சேர்ந்து செயலாற்றும் போது முதல் இதழ் வெளிவந்த அன்று அவருக்கு ஒரு ஆண் குழந்தை பிறக்கிறது. அக்குழந்தைக்கு காந்தியின் நினைவாக 'மோகன்' என்று பெயரிடுகிறார். இவ்வாறு நாட்கள் கழிந்து கொண்டிருக்கும் போது இரண்டாம் உலகப்போர் வருகிறது. ஒருநாள் சென்னைத் துறைமுகத்தில் ஜப்பான் குண்டினை போட்டது. இதை அறிந்த நடராஜ் தன் மனைவியிடம் அவளைத் திருச்சி அல்லது மதுரையில் பாதுகாப்பாகக் கொண்டு போய் விடுவதாக கூறுகிறார். நான் இங்கு தான் இருப்பேன் உங்களுக்கு ஏற்படுவது எனக்கு என்று சரோஜா கூறுகிறாள். சரோஜா யுத்தம் எப்பொழுது முடியும் அமைதி எப்பொழுது பிறக்கும் என்கிறாள். அதற்கு நடராஜ் "பொறுத்துக்கொள் மண்ணிலே வானத்தை நிறுவவிருக்கும் ராமராஜ்யத்தை நம் மகாத்மா நிலைநிறுத்தட்டும் அப்பொழுது யுத்தம் ஒழிந்துவிடும்"[70] என்கிறார். 1947-ஆம் ஆண்டு இந்தியாவுக்கு சுதந்திரம் கிடைக்கிறது. ஆனால் காந்தி விரும்பிய சுதந்திரம் கிடைக்கவில்லையே என்று வருந்துகின்றனர்.

1948-இல் காந்தியடிகள் சுட்டுக் கொல்லப்படுகிறார். நடராஜனின் தந்தையும் இறந்து விடுகிறார். நடராஜ் தன் தந்தையின் பணத்தை வைப்பு நிதியாக்கி அதிலிருந்து வரும் தொகையை தந்தை படித்த பள்ளியிலிருந்து தேறிய மாணவனின் மேல் படிப்புக்கு வசதி இல்லாத அதிக மதிப்பெண் வாங்கிய மாணவனுக்குக் கொடுக்கவேண்டும் என்றும், அதைத் தேர்ந்தெடுக்கும் முடிவை ராமலிங்கஅடிகள், வெங்கடேஷ், அப்பள்ளியின்

தலைமையாசிரியர் மூவரும் தர்மகர்த்தாக்களாக இருந்து செயல்படவேண்டும் என்று எழுதிவிடுகிறார். நடராஜ் வேலை பார்க்கும் பத்திரிகை முதலாளி தன்னிடம் காட்டிவிட்டுத்தான் தலையங்கத்தைப் போடவேண்டும் என்கிறார். தன்மானம் உடைய நடராஜ் வேலையை ராஜினாமா செய்கிறார்.

நடராஜ், சரோஜா, யோகானந்தராஜு மூவரும் இணைந்து ஒரு கட்டிடத்தில், கீழ்மட்டக் குழந்தைகளைச் சேர்த்து காந்திஜியின் ஆதாரக்கல்வி முறையை ஆரம்பித்தனர். அவரது மகனுக்கு நன்னடத்தைக்கு உரிய பரிசு கிடைக்கிறது. எல்லோரும் நல்லவர் ஆகவேண்டும் அப்பொழுதுதான் புத்தர், ஏசு, காந்தி கண்ட கனவு நனவாகும். அப்பொழுது மண்ணில் தோன்றும் வானம் என்று நடராஜ் கூறுவதுடன் இக்கதை முடிவடைகிறது.

## 25.எங்கே போகிறோம்

அகிலனின் எங்கே போகிறோம் என்ற புதினம் நாற்பது அத்தியாயங்களையும், முந்நூற்று முப்பத்தொன்பது பக்கங்களையும் உடையது. விடுதலைக்கு முன் நிகழ்ந்த நிகழ்வுகளையும் விடுதலைக்குப்பின் நிகழும் நிகழ்வுகளையும் ஒருங்கே விவரிக்கின்றது. கோபாலன் என்பவர் விடுதலை வேள்விக்கு தன் எழுத்தின் மூலம் பங்காற்றி வருகிறார். அவரது விடிவெள்ளி என்ற பத்திரிகை மக்களிடம் விடுதலை உணர்வைத் தூண்டிவிடும் ஒரு விளக்காக விளங்கிவருகிறது. இந்நிலையில் கதைத்தலைவனான சிதம்பரம் இரண்டு மூன்று கட்டுரைகளை விடிவெள்ளிக்கு எழுதி அனுப்புகிறான். அவற்றைப் பிரசுரித்த கோபாலன் அவனை நேரில் வரும்படி கூறுகிறார். அவனிடம் தன் பத்திரிகையில் பணியாற்ற விருப்பமா? என்றும், தன்னால் அதிக சம்பளம் தரமுடியாது என்றும் கூறுகிறார். சிதம்பரத்தின் தந்தை உனக்கு விருப்பம் இருந்தால் சேர்ந்து செயலாற்று என்று கூறவே உதவியாளராகச் சேர்ந்த சிதம்பரம் இரண்டு ஆண்டுகளில்

உதவி ஆசிரியராக உயர்வு பெறுகிறார். கோபாலன் தாம் இறக்கும் போது ‘‘நம் தொழில் மக்கள் கூட்டத்திற்கு வழிகாட்டும் தொழில்; அவர்களை வழுக்கி விழச் செய்யும் தொழில் அல்ல; தலையங்கம் எழுதுகிறவனும் ஒரு தலைவன். அவனுக்கு குறைந்தபட்சத் தலைமைத் தகுதியாவது இருக்கவேண்டும்; அவன் தீமைகளைக் கண்டு அஞ்சவும் கூடாது; தனக்கென்று பேராசைப் படவும் கூடாது; சத்யம் என்று நீ நம்புவதைத் துணிவாக எடுத்துச் சொல்; சத்யம் உன்னை கைவிடாது’’[71] என்று கூறியதுடன் பத்திரிகையை அவனிடம் அளித்துவிட்டு உயிர் நீத்தார். அன்றிலிருந்து விடிவெள்ளி பத்திரிகையின் ஆசிரியர் ஆனார்.

ஒருநாள் அவர்களது குடும்ப நண்பர் பொன்னையா தான் சிபாரிசு செய்து சிதம்பரத்தின் தந்தை மூலம் கிராம வளர்ச்சி வேலையைப் பெற்றவன், வேலையில் ஊழல் செய்து நிறையப் பணம் கையாடினான். அவனைக் காப்பாற்றும்படி தந்தை இராமலிங்கத்திடம் சிபாரிசு செய்யும்படி சிதம்பரத்தினிடம் கூறுகிறார். சிதம்பரம் நடந்ததை தந்தையிடம் கூறும் போது, என் நிலையில் நீ இருந்தால் என்ன செய்வாய் என்று கேட்க குற்றம் ருசுவாகிவிட்டால் யார் சொன்னாலும் கேட்க மாட்டேன் என்கிறார். அது தந்தைக்கு மகிழ்ச்சியைத் தருகிறது. மறுநாள் குடியரசு தினத்தன்று பொன்னையா இராமலிங்கத்தைப் பார்த்துத் தன் காண்ட்ராக்டர் பற்றிக் கேட்டார். இராமலிங்கம் குற்றப்பத்திரிக்கையைப் படித்து காட்டியதுடன் தான் ஏற்கனவே தயாராக தலைமைச் செயலருக்கு எழுதிவைத்திருந்த ராஜினாமா கடிதத்தை எடுத்துக் கொடுக்கிறார். வீட்டிற்கு வந்ததும் தன் மகளைத் திருமணம் பேச வந்த மாப்பிள்ளை வீட்டாரிடம் தான் வேலையை ராஜினாமா செய்ததைக் கூறுகிறார். மாப்பிள்ளை இராஜனின் தந்தை வெற்று மனிதரான அவரது சம்பந்தம் தேவையற்றது என உதறிச் செல்கிறார். ‘‘மறுநாள் அங்கு

வந்த டாக்டர் இராஜன் கொஞ்சம் பொறுத்துக் கொள்ளும்படியும், தந்தையைச் சம்மதிக்க வைக்கப்பார்க்கிறேன். அப்படி இல்லை என்றால் நான் பாரதியை மணந்து கொள்கிறேன்''.[72]என்று கூறிக் கொண்டிருக்கும் நிலையில் இராஜனின் தந்தையிடமிருந்து தொலைபேசி அழைப்பு வருகிறது. இராஜனை உடனே அனுப்புங்கள், இனி நமக்குள் உறவில்லை என்று கூறுகிறார்.

இராமலிங்கம் இதுவரையிலிருந்த அரசாங்க வீட்டில் இருந்து வெளியேறி ஒரு சிறுவீட்டிற்குச் சென்று குடியேறுகிறார். துரைசாமி தமது விடிவெள்ளி பத்திரிகையில் பதினாறு பக்கங்களை உதவி ஆசிரியர் பஞ்சுவிற்கு அளிக்கும்படிக் கூறுகிறார். மனவருத்தத்துடன் இருந்த சிதம்பரம் தனது கல்லூரித் தோழி புவனாவைச் சந்திக்கிறார். தான் வேலையை விடப்போவதாகக் கூறியபோது புவனா அவசரப்படவேண்டாம் என்று கூறுகிறாள். பஞ்சுவின் வீணான ஆசையாலும், கெட்டஎண்ணத்தாலும் சிதம்பரத்தின் வேலைக்கு ஊறு ஏற்படுகிறது. அவன் துரைசாமியால் வேலையை விட்டு நீக்கப்படுகிறான். இதனால் கோபம் அடைந்த சிதம்பரத்தின் தம்பி சுபாஷ் பஞ்சுவைக் கொல்ல முயற்சிக்கிறான். தன்நிலைக்கு சிதம்பரமும் ஒரு காரணம் என பஞ்சு வாக்குமூலம் கொடுத்ததால் சிதம்பரமும், சுபாசும் சிறையில் அடைக்கப்படுகின்றனர். இதனை அறிந்த புவனா சிதம்பரத்தை வக்கில் மூலம் சிறையிலிருந்து விடுவிக்கிறாள். சுபாஷை ஜாமீனில் வெளிவிடுகின்றனர். இராமலிங்கம், அப்துல் ரஹீம், சிதம்பரம் மூவரும் ஒரு புதிய பத்திரிகையை தனியாக வெளியிடத் திட்டம் தீட்டும் போது "அங்குவந்த புவனா சிறந்த பத்திரிகையாக வெளியிடவேண்டும் அதற்கு ஐந்து லட்சம் ரூபாய் தேவை என்று கூறியதுடன் நில்லாது, மூன்றுலட்சம் ரூபாயை அன்பளிப்பாகவும் அளிக்கிறாள்"[73]

மேலும் புதிய பத்திரிகை வெளிவரத்தேவையான வேலைகள் அனைத்தையும் இடைவிடாது தானே மனமுவந்து ஓடி ஓடிச் செய்கிறாள். இதற்குக் காரணம்அவள் சிதம்பரத்தைத் தன் கணவனாக நினைத்ததாகும். பத்திரிகைக்கு 'புதுவாழ்வு' என்று பெயரிட்டு அதற்குத் துவக்க விழாகாணத்துடித்துக் கொண்டிருக்கும் போது அவள் நோய் உச்சக்கட்டத்தை அடைகிறது. புத்தகம் அச்சாபீஸிலிருந்து வந்தவுடன் அதனை எடுத்துக்கொண்டு தன் வீட்டிற்கு வரும்படி சிதம்பரத்தை அழைக்கிறாள். அவனுக்குத் தன்கையால் சமைத்துப் போடுகிறாள். ஒரு மனைவியைப் போல் அவன் சாப்பிட்ட இலையில் அவளும் சாப்பிட்டுவிட்டு சிதம்பரத்துடன் பேசிக் கொண்டிருந்து விட்டு அவனை அனுப்பிய பின் தூக்கமாத்திரைகளை உண்டு உயிர் துறக்கிறாள். எண்ணமெல்லாம் சிதம்பரத்தின் மீதும், புதுவாழ்வு மீதும் நிலைத்திருக்க இவ்வுலக வாழ்வை நீத்தாள் புவனா என்ற நிலையில் கதை நிறைவடைகிறது.

## 26. இரு விழிகள்

என்.ஏ.வேலாயுதம் எழுதிய இரு விழிகள் என்ற புதினம் இருநூற்று ஐம்பத்தாறு பக்கங்களையும், அறுபது அத்தியாயங்களையும் உடையது. கதைத்தலைவன் தியாகி சிவஞானத்தை அறிமுகப்படுத்தும் விதமாகக் கதை தொடங்குகிறது. சிவஞானம் பள்ளியில் படிக்கும் போதே விடுதலைப் போராட்டத்தில் கலந்துகொண்டவன். தன்னுடன் பிறமாணவர்களையும் அழைத்துச் சென்று அதனால் தண்டனை வாங்கியவன். மாணிக்கம், ஆனந்தவல்லி, சிவஞானம் மூவரும் இணைபிரியா நண்பர்கள். மாணிக்கமும், சிவஞானமும் நாகர்கோவில் சென்று பள்ளியில் சேர்ந்தனர். நாகர்கோவில் சிவஞானத்தின் தேசிய உணர்வைத் தூண்டுவதாக அமைந்தது. அவனது உணர்விற்கு தடைபோட்டு கல்வியில் செலுத்த நினைத்தான் மாணிக்கம் இயலவில்லை. விறகு வெட்டச் சென்ற தாய் பாம்பு தீண்டியதால்

இறந்ததையும், அவனை கண்ட தந்தை இனி எனக்கு யார்? என்று கூறி இறந்ததையும் அறிந்த சிவஞானம் மீளாத் துயரில் இருக்கும் போது மாணிக்கத்தின் தந்தை தமது பையனுடன் வளரும்படி கூறுகிறார்.

நாட்டில் ஒத்துழையாமை இயக்கம் பரவிக்கொண்டிருந்தது. நாகர்கோவிலிலும் கட்டபொம்மன் திடலில் கூட்டம் ஏற்பாடு செய்யப்பட்டது. சிவஞானம் அதில் கலந்து கொண்டதுடன் மேடைக்கு அருகிலும் சென்றுவிடுகிறான். அதனால் கல்அடியும் கிடைக்கிறது. போலீஸ்காரர்கள் அவன் காந்தியின் அடையாள அட்டை அணிந்திருப்பதைப் பார்த்து அரசதுரோகி என்று கூறி அழைத்துச் செல்கின்றனர். மறுநாள் சிவகுருநாதர் என் பையன் என்று கூறி காவல் நிலையத்திலிருந்து அழைத்து வருகிறார். வீட்டிற்கு வந்த பின் “நடந்தவைகளை மறந்துவிட்டு நடப்பவைகளையும், நடக்க வேண்டியவைகளையும்சிந்தனை செய். வருங்காலமும், நிகழ்காலமும் தான் நமது செல்வங்கள் அவைகளை நன்முறையில் பயன்படுத்தினால் போதும். எங்கு சென்றாலும் இரவுக்கு முன் வீட்டிற்கு வந்துவிடு”[74] என்று அறிவுரை கூறிச் செல்கிறார். நாட்கள் செல்கின்றன.

ஒருநாள் சுதேசமித்திரனில் காந்தியடிகள், முகமது அலி, சவுக்கத் அலி மூவரும் சென்னைக்கு வருகிறார்கள் என்ற செய்தியைப் பார்க்கிறான். அவனுக்கு சென்னைச் செல்லவேண்டும் என்ற எண்ணம் ஏற்படுகிறது. எப்படி போவது என்று நினைத்துக் கொண்டிருந்தவன் சிவகுருநாதர் கல்லூரிக்குக் கட்டக் கொடுத்த பணத்தை எடுத்துக் கொண்டு புறப்படுகிறான். திருநெல்வேலியில் சிவகுருநாதனுக்கும், மாணிக்கத்திற்கும் கடிதம் எழுதி அஞ்சலில் செலுத்திவிட்டுச் செல்கிறான். இரயிலில் இஸ்மாயில் என்பவர் அறிமுகம் ஆகிறார். அவர் துணையுடன் காந்தியடிகளை அருகில் சென்று பாருக்கும் வாய்ப்பு கிடைக்கிறது. காந்தியடிகளுடன் இஸ்மாயிலும்,

சிவஞானமும் பல ஊர்களுக்குச் சென்று பொதுக்கூட்டங்களில் பங்கு கொள்ளுகின்றனர். சென்னை வந்தவுடன் இஸ்மாயிலின் பையன் ரஹீம் சிவஞானத்தை அங்கேயே தங்கி வியாபாரத்தொண்டும், தேசத்தொண்டும் செய்யட்டும் என்று கூறியதும் சிவஞானம் மகிழ்வுடன் ஏற்றுக்கொள்கிறான்.

1929-இல் சைமன் கமிஷனை எதிர்த்து நாடுமுழுவதும் போராட்டம் நடைபெற்றது. அதில் பங்கு கொண்ட சிவஞானம் முதல் முதலாக அன்னை நாட்டிற்காகச் சிறை செல்கிறான். இஸ்மாயில் சிறை செய்யப்பட்டு உள்ளார் என்ற செய்தியையும், மாணிக்கம் முந்நூறு ரூபாய் சம்பளத்தில் டெல்லியில் உள்ள ஆங்கிலத் கம்பெனியில் வேலையில் சேர்ந்த செய்திக் கடிதத்தையும் ரஹீம் கொடுக்கிறான். மறுநாள் சென்னையிலிருந்த சிவஞானத்தை சேலம் சிறையில் இஸ்மாயில் இருந்த அறையில் அடைக்கின்றனர். அவர்களைப் பார்க்க இஸ்மாயிலின் பெண் ஜான்சியும், மகன் ரஹீமும் வருகின்றனர். அவர்கள் விடைபெற்றுச் சென்றபின் இஸ்மாயிலை சேலம், கோவை என்றெல்லாம் மாற்றிப்பின் சென்னையில் கொண்டு வந்து அடைக்கின்றனர். மூன்று மாதம் கழித்து சிவஞானம் ரஹீம்மைச் சந்திக்க நெல்லை வருகிறான் இந்நிலையில் மாணிக்கத்தின் தந்தை சிவகுருநாதருக்கு உடல்நலம் இல்லை என்று தந்தி வரவே, சிவஞானம் அவரைப் பார்க்கச் செல்கிறான்.

பர்த்தோலி சத்தியாக்கிரகத்தை முன்னிட்டு நடந்த ஊர்வலத்தில் சிவஞானமும், இஸ்மாயிலும் கலந்து கொள்கின்றனர். போலீஸ்தாக்குதலால் அடிபட்டுக் கீழே விழப்போன இஸ்மாயிலை சிவஞானம் தாங்கிக் கொள்கிறான். அவனது தோளிலும் குண்டு பாய்கிறது. அவர்களைப் போலீசார் கைது செய்த பின் மருத்துவமனையில் சேர்க்கின்றனர். அங்கு ‘‘இஸ்மாயில் சிவஞானத்திடம் நீயும் ஜான்சியும் விரும்புவதை நான் அறிவேன். ரஹீமிடமும் கூறிவிட்டேன். உங்கள் திருமணத்திற்கு என் ஆசிகள் என்று கூறியபின்

உயிரை விட்டு விடுகிறார்.”[75] 1930-ஆம் ஆண்டு உப்பு சத்தியாக்கிரகம் இராஜாஜி தலைமையில் நடைபெற்றது. அதே நேரம் அந்நியத் துணி எரிப்பும் கள்ளுக்கடை மறியலும் நடைபெற்றது. இவற்றில் சிவஞானம் பங்கு கொண்டான். ரஹீம் தன் கடையில் உள்ள அத்தனை அந்நியத் துணிகளையும் நடுவீதியில் போட்டுக் கொளுத்தினான். 1932-இல் காந்தியடிகள் எரவாடா சிறையில் அடைக்கப்பட்ட செய்தி கேட்டு நாடே கொதித்தெழுந்தது. அப்பொழுது நடைபெற்ற போராட்டத்தில் சிவஞானம் பங்கு பெற்றான். ‘‘சுதந்திரம் எங்கள் பிறப்புரிமை என்று முழங்க வெளியில் நின்ற போலீஸ் அதிகாரியால் அதைப் பொறுத்துக் கொள்ள முடியவில்லை. தன் கையிலிருந்த தடியால் அவன் முதுகில் ஓங்கி அறைந்தான். அய்யோ என்ற கத்திக் கொண்டு சிவதானுபிள்ளையின் தோள் மீது சாய்ந்தான்”[76] சிவஞானம்.

சிவஞானம் சிறையிலிருந்து விடுதலையானதும் ஜான்சியைப் பார்க்கச் செல்கிறான். அங்கு போலீசார் அவனை கைது செய்கின்றனர். போகும் போது சிவஞானம் ‘‘ஜான்சி எது வந்தாலும் இதயம் தளராதே; பாட்டியைத் துணைக்கு அழைத்துக்கொண்டு சென்னை புறப்படு நான் கடிதம் எழுதிய பிறகு பதில் எழுது என்று கூறிச் செல்கின்றான்”[77] எழும்பூரில் காந்தியடிகளும் நேருவும் வந்த போது ஏற்பட்ட கலவரத்தில் ரஹீம் இறக்கிறான். சிறையிலிருந்து மீண்டுவந்த சிவஞானம் ஜான்சியிடம் தான் ஆண்மை இழந்துவிட்டதாகவும் அதனால் கணவன் மனைவியாக வாழமுடியாது என்றும் கூறுகிறான். ஜான்சி நான் உங்கள் உத்தம தேசப்பற்றுத் தொண்டைத்தான் காதலித்தேன். நாம் இருவரும் நண்பர்களாக வாழ்வோம் என்று கூறுகிறாள். அதன்படி தேசபக்தர்கள் தலைமையில் திருமணம் செய்துகொண்டு சென்னை செல்கின்றனர். அங்கு ராஜாஜி, சத்தியமூர்த்தி, காமராஜ் போன்றவர்கள் கட்டளைப்படி ஜான்சியும், சிவஞானமும் தமிழக கிராமங்களுக்குச் சென்று

சுதந்திரத்தின் தேவையை விளக்கி பிரச்சாரம் செய்கின்றனர். இராட்டையில் நூல்நூற்கக் கற்றுக்கொடுகின்றனர்.

1940-இல் நடைபெற்ற தனிநபர் சத்தியாக்கிரகத்தில் பங்கு பெற்று சிவஞானமும், ஜான்சியும் மதுரையில் தண்டனையை அனுபவித்து விட்டு திருநெல்வேலிக்கு வருகின்றனர். பொன்குளத்தில் உள்ள ஒரு துறவி ஜான்சியிடம் உனக்கு குழந்தை பேறு இல்லை என்றாலும் ஒரு குழந்தையை வளர்க்கும் பேறு கிடைக்கும் என்கிறார். அதன்படி நெல்லையில் பக்கத்து வீட்டிலிருக்கும் கிருஷ்ணம்மாளுக்கு குழந்தை பிறந்ததும் இறந்து விடுகிறாள். அக்குழந்தையை சிவஞானமும், ஜான்சியும் வளர்க்கின்றனர். 1942-இல் நடைபெற்ற ‘வெள்ளையனே வெளியேறு’ இயக்கத்தில் குழந்தையுடன் பங்கு கொண்ட சிவஞானமும் ஜான்சியும் சிறை தண்டனைக்குப் பின் பொன்குளம் வருகின்றனர். மாணிக்கம் இறக்கிறான். குடும்பத்தைக் காக்கும் பொறுப்பு சிவஞானத்திடம் வருகிறது. 1947-இல் இந்தியாவிற்கு சுதந்திரம் கிடைத்தது. சிவஞானமும், ஜான்சியும் நாட்டின் மண்ணையும் மாணிக்கத்தின் தோட்டத்தின் மண்ணையும் எடுத்து கண்களில் ஒற்றிக்கொள்கின்றனர். தன்மகள் வள்ளியையும், மாணிக்கத்தின் மகன் சிவகுருவையும் இருவிழிகளாகக் கருதி, அவர்கள் திருமணத்தை முடிக்க நினைக்கும் நிலையில் கதை நிறைவுபெறுகிறது.

## 27. வானவீதி

கு.ராஜவேலு எழுதிய வானவீதி என்ற புதினம் இருநூற்று அறுபத்தைந்து பக்கங்களையும், ஒன்பது அத்தியாயங்களையும் கொண்டது. இப்பதினம் கதைத்தலைவியை அறிமுகப்படுத்தும் விதமாகத் தொடங்குகிறது. சொக்கப்பன் தான் புதிதாகக் குடிவந்த வீட்டுவாசலில் நின்றபோது ஐம்பத்தைந்து வயதுடைய திருநீரு அணிந்திருந்த ஒரு அம்மா வந்து பூ

வங்கிச் செல்கிறாள். சொக்கப்பன் அவளிடம் தன்னை மன்னிக்குமாறு கேட்க நினைக்கிறான். ஆனால் உள்ளம் தயங்குகிறது. மறுநாள் காலை எதிர் வீடுபூட்டப்பட்டு உள்ளதை அறிந்து, வீட்டிற்குள் வந்து பெட்டியில்உள்ள பழையநாட்குறிப்புகளை வெளியே எடுத்து ஆய்கிறான். என்ற நிலையில் கதை பின்னோக்கிச் செல்கிறது. சொக்கப்பன் 26 ஆண்டுகளுக்கு முன்பு சப்-இன்ஸ்பெக்டராக வேலை பார்க்கும் போது அம்மாவைப் பார்க்கத் திருவையாற்றிற்கு வருகிறான். அப்பொழுது அவன் தாயைக் காண எழில் என்ற எதிர் வீட்டுப்பெண் வருகிறாள். சொக்கப்பனைக் கண்டவுடன் சென்று விடுகிறாள். சொக்கப்பன் தன் தாயிடம் அவளைத்தான் மணந்து கொள்வதற்கு வேண்டிய வகைகளைச் செய்யுமாறு கூறுகிறான்.

எழிலின் தாய் மாமன் ஆன கணபதியிடம் சொக்கப்பனின் தாய் திருமணம் பற்றிப் பேசிய போது அவள் ஓய்விற்கு வந்திருக்கிறாள். அவளை மீண்டும் கல்கத்தாவில் கொண்டு போய்விட்டுவரும் போது கேட்டுவருவதாகக் கூறுகிறார். சொக்கப்பன் விடுமுறை முடிந்து ஊருக்குப் புறப்படும் அன்று இரவு எழில் கதர்ஜிப்பாவும், வேட்டியும் அணிந்த இளைஞனுடன் பேசிக் கொண்டிருப்பதைக் காண்கிறான். கோபத்துடன் பேருந்து நிலையம் சென்று தன் நண்பனுடன் தஞ்சாவூர் புறப்படுகின்றான். இந்நிலையில் எழில் சொக்கப்பனைக் கண்டதும் தன் இறந்த கால வாழ்வை நினைக்கிறாள். பி.ஏ. தேர்வு எழுதி விட்டு கல்கத்தாவில் பெற்றோருடன் வசித்து வரும் எழிலைக் காணத் தாய்மாமன் கணபதி வருகிறார். அப்பொழுது கல்கத்தாவில் நடைபெற்ற இனக் கலவரத்தைக் கண்ட கணபதி எழிலையும், அவள் தாய் மீனாவையும் திருவையாற்றிற்கு அழைத்து வருகிறார். திருப்பழனத்தில் உள்ள எழிலின் பெரியம்மா வீட்டிற்குச் சென்று தங்கிய நாட்களில் மாமாவுடன் ஆற்றங்கரை பக்கமாக உலவச்செல்கிறாள். ஆற்றங்கரையில் உள்ள

மரவேரின் மீது ஒரு வாலிபன் ஈரஆடையுடன் ஜுரத்துடன் இருப்பதைக்கண்ட எழில், தனது மாமாவை அழைத்து அவருடன் வாதாடி அவனை வீட்டிற்கு அழைத்து வருகிறாள். அவளது தம்பி டாக்டரை அழைத்துவருகிறான். உடல் நலம் பெற்ற பின் அந்த இளைஞன் எழிலிடம் தன்பெயர் பண்ணன் என்றும், தான் ஒரு காங்கிரஸ்காரன் என்றும் கூறுகிறான். மேலும் 1928-இல் எம்.ஏ. படிக்கும் போது சைமன் கமிஷனை எதிர்த்துப் போராடியதற்காக கைது செய்யப்பட்டதாகவும் நீதிபதி மாணவன் என்பதால் அறிவுரை கூறிவிட்டுவிட்டதையும் கூறுகிறான். மேலும் 1930-இல் சென்னைக் கடற்கரையில் உப்புக் காய்ச்சியதற்காக கைது செய்யப்பட்டு ஒன்பது மாத கடுங்காவல் தண்டனை அடைந்ததாகவும் அவனது தந்தை ஆபத்தான நிலையில் இருப்பதாகக் கூறி விடுதலை செய்யப்பட்டதையும் ஆனால் தான் வருவதற்குள் தந்தை இறந்ததையும் கூறியவன், நாடெங்கும் நடக்கும் வரிகொடா இயக்கத்தில் பங்கு கொள்ள கும்பகோணம் வந்ததாகவும் அங்கு ஏற்பட்ட கலவரத்திலிருந்து உயிர் தப்பிக்க ஆற்றில் குதித்து இயன்றவரை நீந்தியபின் இயலாநிலையில் மரவேரில் ஒதுங்கி சாய்ந்ததாகக் கூறுகிறான். அன்று இரவே ஊருக்குப் போய்விடுகிறான்.

மறுநாள் எழிலின் தந்தையிடமிருந்து கடிதம் வருகிறது. ஒரு மாதத்தில் அவள் தந்தை கமல்கோஷை அழைத்துக் கொண்டு வருவதாக எழுதியிருந்தார். எழில் தன் மாமாவிடம் கூறிப் பண்ணனையும் திருவிழாவிற்கு அழைக்கச் செய்தாள். அனைவரும் மகிழ்வுடன் திருவையாற்றில் நடைபெறும் ஏழுதலப்பெருவிழாவை அனுபவித்தனர். விழா முடிந்த மறுநாள் மாலை அனைவரும் பண்ணனின் தங்கை மணிக்குமாரியின் பாடலைக் கேட்டு மகிழ்ந்தனர். அப்பொழுது பண்ணனின் தாய் தன் மகனுக்கு ஒரு வேலை ஏற்பாடு செய்யவேண்டும் என்று எழிலின் தந்தையிடம்

கேட்கிறாள். மறுநாள் மாலை எழிலின் தந்தை பண்ணனுக்கு வங்கியில் மானேஜர் வேலைக்கு ஏற்பாடு செய்ததுடன் காப்பீட்டுத் தொகையையும் கட்டிவிட்டு வருகிறார். அவர்களுக்கு திருவையாற்றில் ஒரு வீடுபார்த்துத் தருகிறார். தினமும் மாலை நேரத்தில் எழிலும், பண்ணனும் சந்தித்து உரையாடி மகிழ்கின்றனர். இந்தவேளையில் தான் எழில் சொக்கப்பனைச் சந்திக்கிறாள். திருவையாற்றிலிருந்து புறப்பட்ட சொக்கப்பன் தன் நண்பனிடம் எப்படியும் நான் எழிலை மனைவியாக அடைய வேண்டும் அதைச் செய்வது உன் பொறுப்பு என்று கூறிச் செல்கிறான். கரூர் சென்ற சொக்கப்பனுக்கு இரகசிய போலீஸ் இன்ஸ்பெக்டராக தஞ்சாவூருக்கு மாறுதல் உத்தரவும் வந்தது.

சொக்கப்பனுக்கும் அவன் நண்பனுக்கும் ஒரே நேரத்தில் தஞ்சைக்கு மாறுதல் ஆகிறது. தஞ்சையில் சொக்கப்பன் வீட்டிலேயே இருவரும் தங்குகின்றனர். இதனிடையே எழிலின் மாமா அவளைக் கல்கத்தாவிற்கு அழைத்துச் செல்கிறார். அவர்கள் சென்ற இரண்டு நாள் கழித்து சொக்கப்பன் தன்தாயையும், நண்பன் பஞ்சநதத்தையும், எழிலின் தந்தையைக் காண கல்கத்தாவிற்கு அனுப்புகிறான்.இ தனிடையில் சொக்கப்பனின் நண்பன் சாந்தலிங்கத்தின் தாய் இறக்கிறாள். சொக்கப்பனின் தாயும், பஞ்சநதமும் சென்ற இரயில் பம்பாய் அருகே கலகக்காரர்களால் கவிழ்க்கப்பட்டு விபத்து ஏற்பட்ட செய்தியைச் செய்தித்தாள் மூலம் அறிந்து கொண்டு பம்பாய் செல்கிறான். தாய் இறந்து விடுகிறாள்; நண்பன் பிழைத்துக் கொள்கிறான். நண்பன் சாந்தலிங்கத்தை வரவழைத்து தாயின் இறுதிக்கடனை முடிக்கிறான். இதனிடையில் கல்கத்தா கமல்கோஷ் பற்றி ரகசிய அறிக்கை கிடைக்கிறது அதன் மூலம் பண்ணனும் கமல்கோஷும் இரகசியத் தொடர்பு உள்ளவர்கள் என்று அறிந்ததுடன் அரசியல் காரணம் கூறி பண்ணனை விலங்கிட்டு

அழைத்துச் செல்கிறான் சொக்கப்பன். மாமாவிடமிருந்து வந்த கடிதத்தில் “சொக்கப்பன் செய்த சூழ்ச்சியால் பண்ணனைச் சதிவழக்கில் சம்பந்த படுதியுள்ளார்கள் என்னால் முடிந்தவரை அவனைக்காக்கப் போராடுகிறேன்”[78] என்ற செய்தியை கண்டபிறகு அம்மாவிடம் தன் உள்ளத்தைத் திறந்து காட்டுகிறாள். தந்தை தாயுடன் செல் ‘உன் மனம் போல் வாழ்வு கிட்டவேண்டும்’ என்று கூறி அனுப்புகிறார். கல்கத்தாவிலிருந்து திருவையாற்றிற்கு வந்தவுடன் சிறைக்குச் சென்று பண்ணனைச் சந்திக்கிறாள். அன்று மாலை சொக்கப்பன் அவள்வீட்டிற்கு வந்து அவள் தன் இச்சைக்குச் சம்மதித்தால் பண்ணனை விடுதலை செய்வதாகக் கூறுகிறான். எழில் திட்டி, விரட்டி விடுகிறாள்.

மறுநாள் காலை யாரும் இல்லாத நேரத்தில் கொல்லைப் புறத்தில் எழிலைக் கெடுக்கவருகிறான் சொக்கப்பன் அப்பொழுது வாழை மரத்தின் பின்னால் ஒளிந்திருந்த கிழவன் ஒருவன் சொக்கப்பன் காலில் சுட்டுவிட்டு, ஊரிலிருந்த டாக்டரையும் பக்கத்து ஊருக்கு அழைத்துச் சென்று விடுகிறான். பிறகு நடந்த நிகழ்சிகள் அனைத்தையும் பண்ணனிடம் கூறிவிட்டுக் காணாமல் போய்விடுகிறான். எழில் தனது தாய், முத்துசாமி ஆகியோருடன் பண்ணனைப் பார்க்கச் செல்கிறாள் அங்கு அனைத்தையும் அறிந்து கொள்கிறாள். இரண்டு நாள் கழித்து மாமா பண்ணன், சொக்கப்பன் பற்றிய செய்திகளைப் போலீஸ் உயர் அதிகாரியிடம் கூற தஞ்சாவூர் செல்கிறார். சொக்கப்பன் மாமா கணபதியைக் கைது செய்ய வருகிறான். “பாம்புக்கு என்னதான் பால் வார்த்தாலும் அதன் நச்சுத்தன்மை எவ்வாறு நீங்கும்”[79] என்பதற்கேற்ப சொக்கப்பன் நடக்கிறான் என்று எழில் உணர்கிறாள். தஞ்சை போலீஸ் அதிகாரி கணபதியை பக்கத்தில் வைத்துக் கொண்டே சரியான

விசாரனையின்றி கைது செய்ய முயன்றது தவறு என்றும், முதலில் போய் கல்கத்தா சூதாட்டக்காரர்களை கைது செய் என்று கூறி சொக்கப்பனை அனுப்பி விடுகிறார்.

பண்ணன் நிரபராதி என விடுதலை செய்யப்படுகிறான். பண்ணன் திரும்பிவந்ததும் எழிலும், பண்ணனும் மகிழ்வுடன் வாழ்கின்றனர். ஒரு நாள் மாலை இருவரும் உலாவச் சென்ற போது வழியில் தேசிகாச்சாரி என்ற பெயரில் கமலைச் சந்திக்கின்றனர். அவன் மறுநாள் தன்னைப் பணத்துடன் வந்து தஞ்சையில் சந்திக்குமாறு கூறுகிறான். கமலைச் சொக்கப்பன் தஞ்சையில் கைது செய்து விடுகிறான். மறுநாள் இரவு கமல் சொக்கப்பனால் கொல்லப்பட்டு புதைக்கப்படுகிறான். பண்ணனுக்கும், எழிலுக்கும் எளிமையாகத் திருமணம் நடைபெறுகிறது. எழிலும், பண்ணனும் இல்லறம் நடத்திவரும் நாளில் இரண்டாம் உலகப் போர் தொடங்குகிறது. நாட்டில் மீண்டும் அடக்குமுறை தலைவிரித்தாடியது. அதனால் காந்தியடிகள் தனிநபர் சத்தியாக்கிரகத்தைத் தொடங்கினார். திருவையாற்றில் பண்ணன் முதல் சத்தியாக்கிரகியாகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

பண்ணன் சத்தியாக்கிரக நாளன்று போலீஸாரால் கைது செய்யப்பட்டார். ஆறுமாத தண்டனை அளித்துத் திருச்சி சிறையில் அடைக்கப்பட்டார். சிறையிலிருந்து திரும்பியபின் 1942-இல் வெள்ளையனே வெளியேறு இயக்கம் தோன்றியது. அதில் பங்கு பெற்ற பண்ணனைச் சொக்கப்பன் அடித்துக் கொன்று விடுகிறான். பின் நாடு விடுதலை அடைந்த பிறகு அவனுக்குச் சென்னையில் போலீஸ் இன்ஸ்பெக்டர் ஜெனரலாக பதவி உயர்வு கிடைக்கிறது. பணி ஓய்விற்கு பின் திருவையாற்றிற்கு வருகிறான். வந்த அன்றே எழிலைச் சந்திக்கிறான். மறுநாள் காலை எழில் தன்கணவன் சமாதியில் அமர்ந்து உண்ணா விரதம் இருக்கத் தொடங்குகிறாள். உயிரை

விட்டுவிடுகிறாள். சொக்கப்பன் போன்ற மிருகத்திடமிருந்து தன்கற்பைக் காத்துக் கொள்ள இதை விட வேறு வழியில்லை என்று உணர்ந்த எழில் உயிரைவிட முற்படும் நிலையில் கதை முடிவடைகிறது.

## 28. மகுடபதி

கல்கி எழுதிய மகுடபதி என்ற புதினம் நூற்று எண்பத்தெட்டு பக்கங்களையும், இருபத்தேழு அத்தியாயங்களையும் உடையது. இந்தப் புதினம் கதாநாயகன் மகுடபதியை அறிமுகப்படுத்தும் விதமாகத் தொடங்குகிறது. உப்பு சத்தியாக்கிரகத்தில் பங்கு கொண்டு சிறைதண்டனை அனுபவித்தபின் கோயம்பத்தூரில் மதுவிலக்குப் பிரச்சாரம் செய்து வரும் மகுடபதி ஒரு பெண்ணைச் சந்தித்தான். அவளை மீண்டும் 1931-இல் நடைபெறும் சத்தியாக்கிரகத்தின் போது கள்ளிப்பட்டி கார்கோடகக்கவுண்டர் ஆட்களால் துரத்தப்படும் போது ஒரு வீட்டில் மறைந்து கொள்ள நுழைகிறான். அங்கே அவளைச் சந்திக்கிறான். அவளுடன் உரையாடும் போது அவள் பெயர் செந்திரு என்பதும் தாய், தந்தை இன்றி அவள் சித்தப்பா தங்கசாமிக்கவுண்டர் தன்வீட்டில் அவளை வளர்த்து வந்தார் என்பதும் புலனாகியது. தங்கசாமி கவுண்டர் கள்ளிப்பட்டிக் கவுண்டரிடம் அதிகமாகக் கடன் பட்டிருந்தார். செந்திருவை தனக்குக் கல்யாணம் செய்து கொடுத்தால் கடனைத் திருப்பிச் செலுத்தத் தேவையில்லை என்று கார்கோடகக்கவுண்டர் கூறினார். மேலும் அவள் மேஜர் ஆவதற்கு முன் அந்த மாதத்திலேயே திருமணத்தை முடித்துவிடுவதென்று தீர்மானித்தனர். செந்திரு இதைத் தடுக்க விஷம் வாங்கித்தரும்படி பெரியண்ணக்கவுண்டரிடம் கேட்டாள். அவர் வேறு முறையில் தடுக்கலாம் என்று கூறிக்கொண்டிருக்கும் போது செந்திருவின் தோழி கோயம்புத்தூரில் இருப்பதாக கடிதம் வரவே அதன்படி இருவரும் கோயம்புத்தூர் வந்தனர் என்ற செய்தியை மகுடபதி அறிகிறான்.

அவர்கள் பேசிக் கொண்டிருக்கும் போது வாசலில் கள்ளிப்பட்டிக் கவுண்டரும், தங்கசாமிக் கவுண்டரும் வருகின்றனர். அவர்களைக் கண்டதும் செந்திரு கதிகலங்கிவிட்டாள். இரு கவுண்டர்களும் அவர்கள் அங்கு வந்த காரணத்தைக் கேட்கும் போது செந்திரு தனக்கு இந்த வயதில் திருமணம் செய்து கொள்ள விருப்பமில்லை அதற்காகத்தான் புறப்பட்டு வந்ததாகக் கூறுகிறாள். தங்கசாமி கவுண்டர் அவளைச் சாட்டையால் அடிக்க அது அறிந்த மகுடபதி பூட்டிய கதவை திறந்து கொண்டு வந்து அவர்களை எதிர்க்கிறான். கார்கோடகக் கவுண்டர் கோபத்தின் உச்சியில் மகுடபதியைக் குத்திக் கொல்ல வரும் போது, அந்தக் குத்தை பெரியண்ணன் ஏற்க அவர் மயக்கமுற்று விடுகிறார். மகுடபதியைக் கட்டிப்போட்டுவிட்டு செந்திருவை அழைத்துக் கொண்டு செல்கின்றனர். மகுடபதி கட்டுக்களை அவிழ்த்துக் கொண்டு கொல்லைப்புறம் வழியாக தனக்குத் தெரிந்த டாக்டர் புஜங்கராவின் வீட்டிற்குச் செல்கிறான். அவரிடம் நடந்தவைகளைக்கூறுகிறான் அவர் உடனே நாம் போலீஸிடம் கூறி அவர்களையும் அழைத்துக் கொண்டு நீ சொல்லும் வீட்டிற்குப் போவோம் என்கிறார். அவர்கள் சென்று பார்க்கும் போது அங்கு பெரியண்ணனைக் காணவில்லை. போலீஸார் மகுடபதியைச் சிறையில் அடைக்கின்றனர்.

செந்திருவைக் கள்ளிப்பட்டி கவுண்டரும் அவளது சித்தப்பாவும் ஆளரவமில்லாத ஒரு மலைமேட்டிலுள்ள ஒரு பங்களாவில் கொண்டு போய் அடைக்கின்றனர். இதனிடையே பங்கஜமும் அவள் பெற்றோரும் வீட்டில் நுழைந்தவுடன் செந்திருவின் கடிதத்தை பார்க்கின்றனர் பங்கஜத்தின் வேண்டுகோளின்படி ராவ்பகதூரும், ஐயாசாமி முதலியாரும் சிங்கமேட்டிற்குச் செந்திருவைக் காணச் சென்றனர். கள்ளிப்பட்டிக் கவுண்டரும் செந்திருவின் சித்தப்பாவும் நாடகமாடி அவர்களை நன்கு வரவேற்றதுடன் செந்திருவிற்குச்

சித்தப்பிரமை பிடித்துவிட்டது என்றும் கூறி அவர்களைச் செந்திரு இருக்கும் இடத்திற்கு அழைத்துச் சென்று காட்டி நம்பவைத்து அனுப்புகின்றனர். இச்செய்தியை பங்கஜத்தின் அப்பா அவளிடம் கூறுகிறார். இச்செய்திகளை எல்லாம் மகுடபதி ஒட்டுக் கேட்கிறான். கேட்டுவிட்டு அவன் நகர்ந்து கொடி வீட்டிற்கு போவதைக் பார்த்த பங்கஜம் அங்கு சென்று பேசுகிறாள். மகுடபதி தான் போலீஸாரால் விடுதலை செய்யப்பட்டதும், அப்போது கள்ளிப்பட்டிக் கவுண்டர் தன்னை அடித்துக் காரில் ஏற்றிச் சென்றதும், இடையில் கார்பழுதாகியதால் தான் தப்பியதும், தனக்கு வழியில் செங்கோடக் கவுண்டர் உதவியதும், அவர் மூலம் பங்கஜம் வீட்டைத் தெரிந்து கொண்டு அங்கு தவசிப் பிள்ளையாக அமர்ந்ததையும் கூறுகிறான். பங்கஜம் அவனிடம் செந்திருவிற்கு பயித்தியம் பிடிக்கவில்லை அவள் நடிக்கிறாள். நீ அங்கு சென்று அவளிடமிருந்து தான் பயித்தியம் இல்லை என்ற ஒரு கடிதத்தை வாங்கி வா. பின் நான் பார்த்துக் கொள்கிறேன். என்று கூறி அவனிடம் செலவிற்குப் பணமும் கொடுக்கிறாள்.

மகுடபதியும் பெரியண்ணனும் கூனூர் சென்று அங்கு செந்திரு அடைத்து வைக்கப்பட்டுள்ள பங்களாவைத் தேடும்போது செந்திரு தனக்கு நடக்கும் செயல்களையும் வரும் அபாயத்தையும் தான் பயித்தியம் அல்ல என்றும் தன்னைக் காப்பாற்றுமாறும் எழுதி ஒரு கல்லில் சுற்றிக் கீழே எறிகிறாள். இந்நிலையில் தான் மகுடபதியும் பெரியண்ணனும் சாமியாரைப் பார்க்க வருகின்றனர். அவர்கள் பேசிக் கொண்டிருக்கும் போது அவரிடமிருக்கும் பையன் எஸ்டேட்டுக்கு வெளியே பேப்பர் ஒன்று செடியில் மாட்டிக் கொண்டிருந்ததாகக் கூறுகிறான். மகுடபதியும் பெரியண்ணனும் உண்மையை உணர்ந்து நடந்தவைகளைச் சாமியாரிடம் கூறுகின்றனர். அவர் தான்பார்த்து அவளை விடுவிப்பதாகக் கூறுகிறார். மகுடபதி ஊர்சுற்றிப்

பார்த்துவிட்டு வருவதாக கூறி பங்களாவிற்குச் செல்கிறான். பங்களாவில் காவல்காரனிடம் கேட்டுக் கொண்டு உள்ளே நுழைகிறான். அங்கு கையில் ஒரு துப்பாக்கியுடன் கள்ளிப்பட்டிக் கவுண்டர் நின்று கொண்டிருந்தார். “இந்த முறை நீ என்னிடமிருந்து தப்பிக்க முடியாது என்று கூறுகிறார். இங்கு எதற்கு வந்தாய்; இது உன் அப்பன் வீடா என்று கூறியவுடன் தன் நிலையையும் தன்னைவளர்த்த தாயையும் நினைத்து அழுகிறான். பெண்பிள்ளைமாதிரி ஏன் அழுகிறாய் உன் வீரதீரம் எங்கே? என்று கேட்கிறார். மகுடபதி ஏன் சும்மா இருக்கிறாய் சுட்டுத் தொலை என்கிறான். நீ உயிர் பிழைக்க வேண்டுமானால் இந்தக் காகிதத்தில் கையெழுத்து போட்டாயானால் இங்கிருந்து பிழைத்துப் போகலாம்”[80] என்கிறார். அதில் நான் காங்கிரஸ் தொண்டன் என வேஷம் போட்டு பணம் வசூலித்து துன்மார்க்கமான காரியங்களுக்கு உபயோகப்படுத்தியது உண்மை. தாங்கள் பணம் கொடுக்காத படியினால் தங்கள் கள்ளுக்கடையில் மறியல் நடத்தியதும் உண்மை. செந்திருவினுடைய நகைகளை அபகரிக்கும் நோக்குடன் அவளை கடத்திக் கொண்டு போகும் போது தடுத்த பெரியண்ணனைக் கத்தியால் குத்தி விட்டேன். இத்தகு செயல்களைச் செய்த என்னை இந்த முறை மன்னித்துவிட்டால், இந்த கோயம்புத்தூரில் அடிவைக்க மாட்டேன் என்று எழுதியிருந்தது.

மகுடபதி அதில் கையெழுத்தும் இடக்கூடாது கவுண்டரையும் கொன்று விடவேண்டும் என நினைத்துக் கொண்டிருக்கும் போது கையெழுத்துப் போடப் போகிறாயா? இல்லையா? என்று மிரட்டியவரைக் கோபத்துடன் சுவற்றுடன் மோதுகிறான். கவுண்டர் துப்பாக்கியை எடுத்துச் சுடமுயன்ற போது, பெரியண்ணன் சுடாதீர்கள் அவன் உங்களுடைய காணாமல் போன மகன், இடது காதுக்குப் பின்னால் அடையாளம் இருக்கிறது என்கிறார். இதைக்கேட்ட கள்ளிப்பட்டி கவுண்டர் தள்ளாடிக் கீழே விழுகிறார். கீழே விழுந்தவர்

பக்கவாதத்தில் படுத்து விட்டார் தன் சொத்துக்கள் அனைத்தையும் மகன் மகுடபதி பெயருக்கு மாற்றிவிட்டார். அவன் மூதாதையர் பணத்தைமட்டும் வைத்துக் கொண்டு கள்ளுக்கடையின் மூலம் வந்த பணத்தைத் தர்மகாரியங்களுக்குத் தானம் செய்கிறான், என்ற செய்தியை முதலியார் தன் மகள் பங்கஜத்திடம் கூறுகிறாள். மகுடபதி திருமணம் செய்து கொண்டபின் தேசத் தொண்டில் பங்கு கொண்டு தொண்டாற்றப் போவதாகவும் அப்போது செந்திரு தன் தகப்பன் கள்ளிப்பட்டிக் கவுண்டரைப் பார்த்துக் கொள்ளவேண்டும் என்று கூறும் நிலையில் கதை நிறைவடைகின்றது.

## 29. இரத்தம் ஒரே நிறம்

சுஜாதா எழுதிய இரத்தம் ஒரே நிறம் என்றபுதினம் முந்நூற்று நாற்பத்தொரு பக்கங்களையும், ஐம்பத்திரண்டு அத்தியாயங்களையும் உடையது. இந்த புதினம் கதைத் தலைவன் முத்துக்குமரனை அறிமுகப்படுத்தும் விதமாகத் தொடங்குகிறது. கோவில் விழாவில் சிலம்பாட்டம் ஆடிக்கொண்டிருந்த முத்துக்குமரனிடம் அந்த வழியில் வந்த மக்கின்ஸி என்ற ஆங்கிலத்துரையும் சேர்ந்து ஆடவருகிறான். மற்றவர்கள் துரையிடம் தோற்றுப் போகுமாறு கூற அவன் இதுவிளையாட்டு அதனால் முடியாது என்று கூறுகிறான். மக்கின்ஸி தோற்ற கோபத்தில் கத்தியை எடுத்து வீசுகிறான். அது முத்துக்குமரனின் தந்தை மீது பட அவர் உயிர் துறக்கிறார்.

அந்த வஞ்சத்தைத் தீர்க்க முத்துகுமரன் வித்தைக்காட்டுபவர்களைத் துணையாகக் கொண்டு மக்கின்ஸி இருக்கும் இடத்திற்குச் செல்கிறான். மக்கின்ஸி எமிலியுடன் உல்லாசமாக இருக்கும் போது மக்கின்ஸியைக் குத்திவிடுகிறான். மக்கின்ஸி அடிபட்ட நிலையில் புலம்பிக் கொண்டிருக்கிறான். முத்துக்குமரன் அங்கிருந்து தப்பி பூஞ்சோலை

என்பவளின் குடிசையை அடைந்து மயக்கமுறுகிறான். சிப்பாய்கள் தேடிவந்த போது முத்துக்குமரனை பூஞ்சோலை மறைத்து வைத்து விடுகிறாள். சிப்பாய்கள் பூஞ்சோலையின் தங்கை சிவகாமியை அழைத்துச் செல்கின்றனர். மறுநாள் முத்துக்குமரன் அவளை மீட்க முயல்கிறான். எனினும் பிடிபட்டு விடுகிறான். முத்துக்குமரனுக்குக் கொலை தண்டனை அளிக்கப்படுகிறது. தண்டனை நாளன்று சிறை அதிகாரி ஆஷ்லி என்பவர் அவனை தப்பவிட்டுவிடுகிறார். முத்துக்குமரன் தப்பிவந்து பூங்கோதையைக் காணவருகிறான். அதற்குள் பூங்கோதைக்குத் திருமணம் நடந்து வருகிறது.

முத்துக்குமரன் அவர்களை விட்டு காட்டுவழியே வரும்போது சிவகாமி அவன்பின்னால் வந்து அவனுக்குப் பயிற்சி அளிக்கக் கூடிய ஒரு தலைவரிடம் கூட்டிச் செல்கிறாள். இதனிடையில் கர்னல் நீல் கூட்டம் போட்டு இந்தியாவின் வடபகுதியில் ஏற்பட்ட சிப்பாய்க்கலகம் பற்றியும் அதனைத் தீர்ப்பதற்காக இங்குள்ள படைகள் எப்பொழுது வேண்டுமானாலும் செல்லக்கூடிய நிலையில் தயாராக இருக்கவேண்டும் என்றும் கூறுகிறார். பைராகி முத்துக்குமரனை அழைத்துக் கொண்டு ஆங்கிலப்படையில் சேர்க்கச் செல்கிறார். அங்கு தண்ணீர் ஊற்றும் ஆளாக முத்துக்குமரனைச் சேர்த்துவிடுகிறார். தன்பெயரை முத்துக்கருப்பன் என மாற்றி வைத்துக் கொள்கிறான்.

பைராகியின் உதவியுடன் மக்கின்ஸி செல்லும் கப்பலில் செல்கிறான். முத்துக்குமரன் இம்முறையும் அவனால் மக்கின்ஸியைக் கொல்ல முடியவில்லை. அங்கிருந்து தப்பியவன் பைராகியை பார்த்துப் பேசிய பின் தான் வடக்கே செல்ல விரும்புவதாகவும் பைராகி தன்னுடன் வரவேண்டுமென்றும் கூறுகிறான். பூஞ்சோலையும் அவர்களுடன் செல்கிறாள். கல்கத்தாவிலிருந்து படைகள் வருவதற்குள் மீரட்டில் கலகம் ஆரம்பித்து

விடுகிறது. இந்த செய்தி கான்பூருக்கும் எட்டிவிடுகிறது. முத்துக்குமரன், பூஞ்சோலை, பைராகி ஆகிய மூவரும் கான்பூரை அடைந்தனர். பைராகி அவர்களை நானாசாகிப் படைத்தலைவன் தாந்தியாதோபேயை சந்திக்க அழைத்துச் செல்கிறார். மக்கின்ஸி கான்பூர் வந்தபின் அங்கு ஒரு கலகம் ஏற்படுகிறது. முத்துக்குமரன் மக்கின்ஸியின் மனைவியை இந்திய சிப்பாயிடமிருந்து. காப்பாற்றுகிறான். பைராகி அவள் யார் என்பதைத் தெரிந்து கொண்டபின் அவளுக்கு அடைக்கலம் தந்து மக்கின்ஸியை முத்துகுமரன் காலில் விழச் செய்யலாம் என்கிறார். ஆஷ்லி, மக்கின்ஸி இருவரும் படையுடன் கான்பூரை நெருங்குகின்றனர். கவர்னர்ஜெனரலிடமிருந்து நீலுக்கு ஒரு செய்தி வருகிறது. அதில் அவரை மேஜர்ஜெனரலாக பதவி உயர்வு செய்திருப்பதாகவும் வேவல் துரையுடன் சேர்ந்து கொள்ளும்படியும் செய்தியிருந்தது ஆனால் வேவல் “உமக்கு இங்கு எந்த அதிகாரமும் கிடையாது நானிருக்கும் வரை எந்த ஆணையும் நீர் தரக்கூடாது”[81] என்கிறார். மக்கின்ஸி, ஆஷ்லி, நீல் மூவரும் எமிலியைத் தேடி வருகின்றனர். ஆஷ்லி தெருவில் வந்து கொண்டிருக்கும் போது ஒரு வீட்டிற்கு அருகில் குழந்தை அழுது கொண்டு இருக்கிறது அதை எடுத்துக் கொண்டுஅருகிலுள்ள வீட்டிற்குள் நுழைந்த போது அங்கு எமிலியைப் பார்க்கிறான் அவளைப் பார்த்து மகிழ்வுடன் அணைக்கிறான் அங்கு வந்த மக்கின்ஸி முத்துக்குமரனைப் பார்க்கிறான் இருவருக்கும் இடையில் சண்டை ஏற்பட மக்கின்ஸி முதலில் முத்துக்குமரனை கத்தியால் குத்திவிடுகிறான். பின் முத்துக்குமரனும் அவனைக் கொன்று விடுகிறான். அவர்கள் இருவரின் இரத்தமும் ஒரே நிறமாக இந்திய மண்ணில் கலந்தது என்ற நிலையில் கதை நிறைவு பெறுகிறது.

## 30.பாதையில் பதிந்த அடிகள்

இராஜம்கிருஷ்ணனின் பாதையில் பதிந்த அடிகள் என்ற இப் புதினம் இருநூற்று தொன்னுற்றேழு பக்கங்களையும், முப்பத்திரண்டு அத்தியாயங்களையும் கொண்டது. கதாநாயகியான வாலாம்பாள் என்ற மணியை அறிமுகப்படுத்தும் விதமாகத் துவங்குகிறது. பத்துவயதில் திருமணமாகி பதினேழு வயதில் கணவன் இறக்கப் பிறந்தவீடு வருகிறாள். உற்றார் உறவினர் என அனைவரும் மூடநம்பிக்கையில் மூழ்கிப் பேசும் பேச்சுக்களால் வெறுப்புற்று இருக்கும் போது செய்தித்தாளில் காந்தியடிகள் நாகப்பட்டினம் போன்ற ஊர்களுக்கு வரப்போகிறார் என்பதறிந்தவுடன் மணி கதராடை அணிந்து கொண்டு அவரைத் தஞ்சாவூரில் சந்திக்கிறாள். அவளிடம் ‘‘கதர்ப்பிரசாரமும், தீண்டாமை பிரச்சாரமும் உங்களுக்கு ஏற்றது. பெண்கள் விரும்பி அணியும் கதரை நம்மால் உற்பத்தி செய்ய முடியும்; பெண்கள் நிறையப்பேர் இந்தத் தேசிய இயக்கத்தில் சேரவரும் போது நாம் சுயச்சார்பு உள்ளவர்களாக ஆவோம்’’[82] என்று காந்தியடிகள் கூறுகிறார். இதனைக் கேட்ட மணி காந்தியடிகளின் கொள்கையை ஊர் ஊராகச் சென்று எடுத்துரைக்கிறாள். தேசவிடுதலைக்கு அங்கத்தினர்களைச் சேர்ப்பதும் கடை வீதிகளில் உண்டியல் குலுக்கி நிதி சேர்ப்பதும் இவள் வழக்கமாகிறது.

மணி மாகாண காங்கிரஸ் வரையிலும் தன் செயலால் உயர்கிறாள். வேதாரண்யம் உப்பு சத்தியாக்கிரகத்திலும் பங்கு பெறுகிறாள். சேரிக் குழந்தைகளுக்கு கல்வி கற்றுக் கொடுக்கிறாள். இதனால் கேலிப் பேச்சிற்கு ஆளாகிறாள். தனது உடையை ஆண்கள் உடை போல் மாற்றி அணிந்துகொள்கிறாள். தன்னைக் காணவந்த ஆச்சியிடம் ‘‘ஆச்சி ஒரு சென்மத்துக்கு தலை முழுகியாச்சு, இப்ப வேறஜென்மம் எடுக்கப்போறேன்’’[83]

என்கிறாள். சேரி குழந்தைகளைக் கொண்டு கள்ளுக் கலயங்களை உடைத் தெறிகிறாள். தன் எதிரிகளைத்தாக்க தனக்கு ஒரு கவசம் தேவை என்பதை உணர்ந்து அடுத்த ஊர் சேரிக்குச் சென்று சிலம்பம் கற்றுக்கொள்கிறாள். ஊரார் இவளைப்பற்றி தவறாக எழுதியதை நம்பிய இவள் தம்பி, வீடு உள்பட அனைத்தையும் குத்தகைக்கு விட்டுவிட்டேன் நீ என்னுடன் பட்டணத்திற்கு வா என்கிறான். அவள் முடியாது என்றவுடன் “நீ ஸ்திரி, புருஷன், புத்திரர் இல்லாதவள் சார்ந்து பணிந்து வாழவேண்டும் தனித்து நிற்கமுடியாது என்கிறான். அதற்குமணி நான் ஏண்டா தெருவில் நிற்கணும் என் துணிவு, தைரியம், நியாயம், சத்தியம் இதெல்லாம் என்னை ஒரு நாளும் அநீதிக்கு அடிபணிய விட்டுவிடாது என்கிறாள்”[84]

மணி அந்த ஊரிலேயே வீடும், நிலமும் வாங்கித் தனியாக வாழ ஆரம்பிக்கிறாள். ஊரிலுள்ள பட்டாமணியம் இவள்மீது பொய் கேஸ் போட்டு நாகப்பட்டினத்திற்கும், திருவாரூருக்கும் மாறிமாறி அலையவைக்கிறான். இச்சூழலில் ஜில்லா போர்டு தேர்தலில் அவள் நிற்கமுடியாது என்றும், உறுப்பினர் நிலையிலிருந்தும் விலகவேண்டும் என்றும், அதற்கு அவளுடைய நிலத்தில் கள்ளுக்கலயம் கட்டியிருப்பதுதான் காரணம் என்கிறார் சென்னை காங்கிரஸ் கமிட்டிதலைவர். இதற்குக் காரணம் பட்டாமணியன், மணியின் தம்பியின் தோப்பில் கள் இறக்கியதே. மக்களுக்குத் தொண்டு செய்யவேண்டும் என்ற உணர்வுடன் மணி நாகை தாலுக்கா கிசான் கமிட்டி என்ற ஓர் அமைப்பை உருவாக்கிக் கூட்டம் போடுகிறாள். ஆங்கில அரசாங்கம் போருக்கு ஒத்துழைப்பு நல்கும்படி அறிவித்தபோது மணி ஒரு தகரடப்பியை இடுப்பில் கட்டிக்கொண்டு பட்டாளத்திலே சேராதே: பணஉதவி செய்யாதே; பட்டாளத்திலே சேராதே; பணஉதவி செய்யாதே; என்று டம, டம வென்று தகரத்தை தட்டிக்கொண்டு ஒவ்வொரு சேரியாக நடக்கிறாள்.

வெள்ளை அரசாங்கம் கூறும் செய்திகள் நம்மை ஏமாற்றுவது ஆகும். அவன் நாட்டு யுத்தத்திலே காவுகொடுக்க நம்மைகொண்டு போக வரான் அதனால் சேராதே என்கிறாள்.

தனிநபர் சத்தியாக்கிரகத்தை ஒட்டி இளைஞர்களைத் தேர்ந்தெடுத்து வகுப்புகளும், பயிற்சிப் பாசறைகளும் நடத்துகிறாள். 1942-இல் வெள்ளையனே வெளியேறு இயக்கம் தொடங்குகிறது. காந்தியடிகள் உட்பட பல பெருந்தலைவர்கள் கைது செய்யப்படுகின்றனர். 'செய் அல்லது செத்து மடி' என்ற முழக்கம் நாடு முழுவதும் ஒலிக்கிறது. கலவரங்களை ஒடுக்கப் பிரிட்டிஷ் அரசு பல அடக்கு முறைச்சட்டங்களைப் பிறப்பிக்கின்றது. மணியம்மை நாகப்பட்டினத்தில் தொழிலாளர்களை இணைத்து குறைகளை மகஜராக எழுதி அனைவரிடமும் கையெழுத்துவாங்கி மக்களுக்கு அத்தியாவசியப் பொருள்கள் கிடைக்க வழிசெய்கிறாள். மாயவரத்தில் துப்புரவுத் தொழிலாளர்களை இணைத்துச் சங்கமாக்கி குரல் கொடுத்து ஊர் வலம் சென்று பஞ்சப்படி, பிரசவ லீவு, கிராச்சுவிட்டி முதலியன அளிக்க வழி செய்கிறாள்.

1944-இல் மே மாதம் மன்னார்குடியில் விவசாய சங்க மாநாடும், தொழிலாளர் சங்க மாநாடும் நடத்துகிறாள். உறுப்பினர்களுக்கு பயிற்சி முகாம் நடத்தி உடற்பயிற்சி, சிலம்பம் போன்ற தற்காப்புக் கலைகளைக் கற்றுத் தருகிறாள். 1945-ல் பெரம்பூரில் நடைபெறும் தொழிற் சங்கமாநாட்டில் பங்கு கொள்கிறாள். எங்கெங்கெல்லாம் அக்கிரமம் நடக்கிறதோ அங்கெல்லாம் சென்று அதனை நீக்குகிறாள். தொழிலாளர்களுக்கும் கீழ் ஜாதியினருக்கும் உதவிட உழைத்துக் கொண்டிருக்கிறாள். 1947 ஆகஸ்ட் 15-இல் இந்தியாவிற்குச் சுதந்திரம் கிடைக்கிறது. மணிவிவசாயத் தொழிலாளர் சங்கங்களில் கொடி ஏற்றச் செல்கிறாள். சுதந்திரம் கிடைத்தாலும் நாடெங்கும்

ஏற்பட்ட பிரிவினைகள், விலைவாசி ஏற்றம் முதலியன மணியை வருத்துகின்றது ஆட்சி மேலிடம் இவளை ஒதுக்குகின்றது. மணியம்மை கவலைப் படவில்லை. தன்வாழ்க்கை முழுக்க ஒற்றுமைக்காகப் போராடிய மணி இறுதியில் எதிரிகளால் ஏவப்பட்ட கலைமான் குத்தியதால் உயிரைத் துறக்கிறார். என்பதாகக் கதை நிறைவுறுகிறது.

## 31. மணிக் கொடி

ஜோதிர்லதாகிரிஜா எழுதிய மணிக் கொடி என்ற புதினம் தொள்ளாயிரத்து முப்பத்து மூன்று பக்கங்களையும், அறுபத்தெட்டு அத்தியாயங்களையும் உடையது. இப்புதினம் கதாநயகனையும் இக்கதை தோன்றுவதற்குக் காரணமானவரையும் அறிமுகப்படுத்தும் விதமாகத் தொடங்குகிறது. கதாநாயகன் கங்காதரன் என்பவர் இறக்கும் தருவாயில் தன் தம்பியின் மகன் கிருஷ்ணனைக் கூப்பிட்டு தன்னுடைய டயரிகள் பரணில் உள்ளதாகவும் அவற்றைப் படித்துப்பார்த்து ஒரு புதினமாக எழுதவேண்டும் என்று கூறுகிறார். கங்காதரன் தந்தை இராமசாமிக்கும், தாய் குஞ்சம்மாளுக்கும் ஆறு குழந்தைகள் பிறந்து இறந்து விடுகின்றன. ஏழாவதாகக் கங்காதரன் பிறக்கிறான். இராமசாமி காங்கிரசில் சேர்ந்து தேசத் தொண்டாற்றுவதுடன் பள்ளியிலும் வேலை பார்க்கிறார். அவரது இயக்கத்தில் அஞ்சனா என்ற பெண்ணும் இருக்கிறாள். அவளது தந்தை இராஜாராமன். அவர் வழக்கறிஞர், சகோதரன் அருண், சகோதரி அமராவதி. அருண் பாரட்லா படிப்பதற்காக இங்கிலாந்து சென்று அங்கு சுதந்திரப்போராட்ட இயக்கத்தில் சேர்ந்து போராடியதால் துப்பாக்கியால் சுடப்பட்டு இறந்து இருக்கலாம் அல்லது நாடு கடத்தப்பட்டிருக்கலாம் என்ற செய்தியை நரேந்திரநாத் பானர்ஜி என்ற கல்கத்தா பையன் மூலம் அறிகிறார் இராஜாராமன். மேலும் நரேந்திரன் இரண்டு ஆங்கிலேயர்களைக் கொன்ற

குற்றத்திற்காக மறைந்து வாழ இராஜாராமன் அவனுக்குத் தன் வீட்டில் இடம் அளிக்கிறார். இதன் இடையில் இராமசாமியை இராஜாராமனின் மகள் அஞ்சனா விரும்புகிறாள், அமராவதி நரேந்திரனை விரும்புகிறாள். நரேந்திரனும் அமராவதியும் உணர்ச்சியின் மேம்பாட்டால் தவறிழைக்கின்றனர். அதன் விளைவால் அவள் தாய்மை அடைகிறாள்.

இராஜாராமனுக்கு அவர் நண்பர் லண்டனிலிருந்து கொண்டு வந்து அளித்த பிஸ்கட்டை சுற்றியிருந்த பேப்பரில் அருண் சுடப்பட்டுக் கொல்லப்பட்ட செய்தியை படித்த இராஜாராமன் இடிந்து போகிறார். தன் மக்களிடம் அதனைக் காண்பித்து விட்டு அலமாரியில் வைத்துப் பூட்டிவிட்டுச் செல்கிறார். அவர் மனைவி பத்மா அந்த பேப்பரைத் தற்செயலாகப் படித்தவுடன் மனநோயாளி ஆகிறாள். அவள் மருத்துவமனையில் சேர்க்கப்படுகிறாள். அமராவதிக்கு ஒரு பெண் குழந்தை பிறக்கிறது. அதற்குப் பவித்ரா என்று பெயரிடுகின்றனர். நரேந்திரன் ஹார்ட்டிஞ் குண்டெறி வழக்கிற்காக ஏழு ஆண்டுகள் அலிப்பூர் சிறையில் இருந்தான். அதிலிருந்து தப்பி காகோரி ரயில் கொள்ளையில் பங்கு பெற்றதால் அந்தமானுக்கு நாடு கடத்தப்பட்டு செல்லும் வழியில் சென்னைக்கு வருகிறான். அக்கப்பலைப் பார்வையிட வந்த மாணவர்களில் பவித்ராவும் இருக்கிறாள். பவித்ரா நரேந்திரனைப் பார்த்து உங்கள் பெயர் நரேந்திரநாத் பானர்ஜியா என்று கேட்கிறாள். உடன் தன் தாய், பெரியம்மா, தாத்தா என அனைவரையும் புறப்பட்டு வரும்படி செய்து அவர்கள் நரேந்திரனைப் பார்க்கவும் ஏற்பாடு செய்கிறாள்.

இராமசாமி அவர் மகன்கள் கங்காதரன், ரமணி மூவரும் பேசிக் கொண்டிருக்கும் போது 1918, 19-இல் நடந்த சட்டமறுப்பு இயக்கம், ரௌலட் சட்ட எதிர்ப்பு, ஜாலியன்வாலாபாக்படுகொலை பற்றி உரையாடுகின்றனர்.

உரையாடலின் நடுவே ராமசாமி, வாஞ்சிநாதன் பற்றிய குறிப்புகள் தன் வீட்டிலிருந்ததால் தன்னைப் பிடித்து இரண்டு வருடம் சிறையில் வைத்ததாக கூறுகிறார். அண்ணன் தம்பி இருவரும் சிட்டகாங் சென்று தீவிரவாத இயக்கத்தில் சேர விரும்பம் எனத் தந்தையிடம் கூறுகின்றனர். அதன் இடையில் இராஜாராமன் வீட்டிற்கு வந்த கங்காதரன் தானும் பவித்ராவும் வடநாடு சென்று தீவிரவாத சங்கத்தில் சேர்ந்து நாட்டிற்குத் தொண்டாற்றப் போவதாகக் கூறியவுடன் இராஜாராமன் “பயங்காரவாதத்தால் எதையும் சாதிக்க முடியாது அப்படி சாதிக்க முடிந்தாலும் அந்த வெற்றி எல்லாம் தாற்காலிகமாகத்தான் இருக்கும். நிரந்தரமான வெற்றி வேண்டும் என்றால் அதற்கு காந்தி வழிதான் நல்லது”[85] என்கிறார். அவர்களது உரையாடலின் இறுதியில் தான் பவித்ராவை மணக்க முடியாது என்றும் தான் தீவிரவாத இயக்கத்தில் சேர்வது உறுதி என்றும் இனி அந்த வீட்டிற்கு வரப்போவதில்லை என்றும் கூறிச் சென்று விடுகிறான்.

1928 பிப்ரவரி மூன்றாம் நாள் சைமன் குழுவை எதிர்த்து கடை அடைப்பு நடந்தது. இரண்டாம் முறையாக சைமன் கமிஷன் வந்த போது எதிர்த்து ஊர்வலம் நடத்தியவர் லாலாலஜபதிராய். அவரை அடித்ததன் விளைவால் சில நாட்களில் உயிர் இழந்தார் என்ற செய்தி அனைவரையும் வேதனைக்கு உள்ளாக்குகிறது. உப்புசத்தியாக்கிரத்தன்று சிட்டகாங் ஆயுதக்கிடங்குகள் கொள்ளையடிக்கப்பட்டன, துப்பாக்கிச் சூடும் நடைபெற்றது. நாடு முழுவதும் கலவரங்கள் ஏற்பட்டன. இந்தநிகழ்வு இராஜாராமன் குடும்பத்தைப் பாதித்தது. காந்தியடிகள் ‘யங் இந்தியா’ என்ற செய்தித்தாளில் பெண்களுக்கு விடுத்த அறைகூவலால் ஆயிரக்கணக்கான பெண்கள் நூல் நூற்பிலும், மறியலிலும் ஈடுப்பட்டனர். “நாடு தழுவியபோராட்டத்தின் விளைவாகக் கோபம் கொண்ட ஆங்கிலேயர்கள்

சிறையில் இருந்தவர்களுக்கு அடி, மிதி, காயப்படுத்துதல், அங்கங்களை அகற்றுதல், மருத்துவ வசதிகள் தராமை போன்றவைகளைச் செய்தனர்.”[86]

இராஜாஜி தலைமையில் நடந்த உப்பு சத்தியாக்கிரகத்தில் இராஜாராமன் பங்கு கொண்டு சிறைக்குச் சென்று விடுதலை அடைகிறார். நரேந்திரன் அந்தமானிலிருந்து கல்கத்தா கொண்டுவரப்பட்டு டம்டம் சிறையில் அடைக்கப்பட்டான். தங்கம் நரேந்திரன் வந்ததை அறிந்து அவனுக்குப் பவித்ரா இறந்த செய்தியைக் குறிப்பிட்டு கடிதம் எழுதுகிறாள். நரேந்திரன் இச்செய்தியை பவித்ரா வீட்டிற்கு தெரியப்படுத்த வேண்டாம் என்று பதில் எழுதி அனுப்புகிறான். நரேந்திரன் இருந்த சிறையில் மகாத்மா காந்தியடிகள் வந்து பேசுகிறார். அவர் பேச்சாலும் பவித்ராவின் இழப்பாலும் தீவிரவாதத்தைவிட காந்தீய வழியே சிறந்தது. என்று உணர்கிறான். இரண்டாம் உலகப்போரின் போது இந்தியாவின் நல்லெண்ணத்தைப் பெறுவதற்காகப் பிரிட்டன் இந்தியச் சிறைகளில் இருந்த ஆயிரக்கணக்கான சத்தியாக்கிரகிகளை விடுதலை செய்தது. அச்சமயத்தில் நரேந்திரனும் விடுதலைச் செய்யப்பட்டான்.

வெள்ளையனே வெளியேறு இயக்கத்திற்காக இராஜாராமனும், நரேந்திரனும் கைது செய்யப்படுகின்றனர். சிறைக்கொடுமைகள் தாங்காது இறந்து போன இராஜாராமன் உடலை அடக்கம் செய்ய நரேந்திரனைப் பரோலில் போலீஸ்காரர்கள் கூட்டிவருகிறார்கள். பிரிட்டனில் பிடிபட்ட ஷநவாஸ், தில்லான், செய்கான் ஆகிய மூவரையும் தூக்கில் இட்டதைக் கண்டித்து சென்னையில் நடந்த ஊர்வலத்தில் கங்காதரன், ரமணி இருவரும் பங்கு கொள்கின்றனர். அவர்களைக் கைது செய்து வேலூர்ச் சிறையில் நரேந்திரன் இருந்த அறையில் அடைத்தனர். தண்டனைக் காலம் முடிந்து மூவரும் சிறையிலிருந்து விடுதலையாகி வருகின்றனர். இதே நேரத்தில் தங்கமும் விடுதலையாகி வருகிறாள். அவள் மூலம் பவித்ரா இறந்த

செய்தியை அஞ்சனாவும், அமராவதியும் அறிகின்றனர். இந்தியாவின் சுதந்திர தினவிழாவைக்கான நரேந்திரன், கங்காதரன், ரமணி மூவரும் டெல்லி செல்கின்றனர். அவர்கள் பேச்சின் இடையில் எப்படியோ ஒரு வழியாக சுதந்திரம் கிடைத்துவிட்டது ஆனால் அதற்கு நாம் கொடுத்த விலைதான் அதிகம் என்று கூறுவதாகக் கதை முடிவடைகிறது.

## 32. வந்தேமாதரம்

நா.ரா.பண்டரிநாதன் எழுதிய வந்தேமாதரம் என்ற புதினம் இருநூற்றுத் தொன்னுற்றாறு பக்கங்களையும், இருபத்தைந்து அத்தியாயங்களையும் கொண்டது. கதைத்தலைவனின் தந்தை சுந்தரத்தை அறிமுகப்படுத்தும் விதமாகக் கதை தொடங்குகிறது. சுந்தரம் வீரராகவாச்சாரி, சுப்ரமணியன் என்ற மூன்று நண்பர்களும் ‘மெட்ராஸ் டைம்ஸ்’ என்ற ஆங்கிலப்பத்திரிகைக்கு எதிராகப் பத்திரிகை தொடங்குவதுப் பற்றி பேசி முடிவெடுக்கின்றனர். சுந்தரம் பூமா என்ற பெண்ணைக் காதலிக்கிறான். அவன் பெற்றோர் வேறொரு பெண்ணைப் பார்க்கின்றனர். சுந்தரம் தன் காதலையும் தான் பத்திரிகை ஆரம்பிக்க நினைப்பதையும் தன் தந்தையிடம் கூறுகிறான் முடிவில் அவன் காதல் திருமணத்தில் முடிகிறது.

சுந்தரமும் அவன் நண்பர்களும் ஆரம்பித்த ஹிந்து என்ற ஆங்கில வாரப் பத்திரிக்கை வளர்ந்து வருகிறது. அதற்காகச் செய்தி சேகரிக்கும் நிருபராகச் செயல்படுகிறான். சுப்ரமணியன் சுதேசமித்திரன் என்ற தமிழ்ப் பத்திரிகையை ஆரம்பிக்கிறான். மேலும் ஹிந்து என்ற ஆங்கில வாரப் பத்திரிகையை திங்கள், புதன், வெள்ளி என்ற மூன்று நாட்களில் வரும் பத்திரிகையாக மாற்றுகின்றனர். புதியதாக ஒரு பிரஸ் ஆரம்பிக்கவும் முடிவுசெய்கின்றனர்.ஆண்டு தோறும் காங்கிரஸ் மாகாஜனசபா ஒவ்வொரு மாகானத் தலைநகரில் நடைபெற்றது.செய்தி சேகரிக்க நிருபராகச் சுந்தரம்

செல்கிறான். இதனால் அவன் ஊரில் தங்குவது குறைகிறது. அவனுக்கு ஒரு மகன் பிறக்கிறான், அக்குழந்தைக்கு வாசுதேவன் என்று பெயரிடுகின்றனர். ஹிந்து வளர்ச்சி அடைந்து மாலை தினசரியாக வெளியானதை அறிந்து சுந்தரம் மகிழ்கிறான். 1896-இல் சுந்தரத்தின் தாய் இறந்து விடுகிறாள். 1897-இல் சுப்பிரமணியபாரதியின் தந்தை ஆரம்பிக்கும் ஜின்னிங்பாக்டரி பற்றி பேட்டி கண்டு வர சுந்தரம் எட்டயபுரத்திற்கு தன் மகன் வாசுதேவனையும் அழைத்துச் செல்கிறார். அங்கு பாரதியும், வாசுதேவனும் நண்பர்கள் ஆகின்றனர்.

அடுத்தடுத்து வரும் மாநாடுகளுக்கு சுந்தரம் செல்லவில்லை.பத்திரிகை சம்பந்தமான காரியங்களையும் செய்யவில்லை. வாசுதேவன் கல்கத்தாவில் நடைபெறும் மாநாட்டிற்குச் செல்ல அனுமதி கேட்டதுடன்,‘‘கல்லூரியை முடித்துவிட்டதால் ஏதாவது ஒரு தொழிலில் ஈடுபட விரும்புவதாகவும் அந்த விருப்பம் பத்திரிகையுடன் சம்பந்தப்பட்டது. என்பதையும் வெளியிட அவன் தயங்கவில்லை.’’[87] கல்கத்தாவிற்கு பத்திரிக்கை நிருபராகச் செல்லத்தயார் என்று சுப்பிரமணியத்திற்குத் தகவல் கொடுக்கிறான். கல்கத்தா மாநாட்டின் போது திலகரைச் சந்திக்க அறிமுகக்கடிதம் பெற்றுச் செல்கிறான். வாசுதேவன் மாநாநாடு முடிந்தபின் திலகரைச் சந்திக்கிறான். அவர் அவனை மறுநாள் ஒரு தபஸ்வினியைக் காண அழைத்துச் செல்கிறார். அவர் பெயர் சுனந்தாதேவி. அவர் ஜான்ஸிராணியுடன் இணைந்து 1857-இல் போரிட்டவர். அப்போரில் கைது செய்யப்பட்டு திருச்சி சிறையில் அடைக்கப்பெறுகிறார். பின் விடுதலையாகி நேபாளம் சென்று சமஸ்கிருதப்பள்ளி நடத்தி வருகிறாள் என்று தான் சந்தித்த தபஸ்வினி பற்றிப் பாரதிக்குக் கடிதம் எழுதுகிறார் வாசு.

ஹிந்துவின் நிர்வாகத்தை வீரராகவாச்சாரி ஏற்றிருப்பதாகவும், சுதேசமித்திரனை தான் நடத்துவதாகவும் வாசுதேவன் ஹிந்துவிற்கு எழுதுவதில் தனக்குத் தடையில்லை ஆனால் வீரராகவாச்சாரியாருக்கு எழுதி அனுமதி வாங்கிக் கொள் என சுப்பிரமணியத்திடம் இருந்து கடிதம் வருகிறது. சுந்தரம் இதற்கு இசைவும் தருகிறார். சகோதரி நிவேதிதா சென்னை வந்து ஆற்றும் உரையைக் கேட்க வாசு சென்னை செல்கிறான். பாரதி படிப்பு முடிந்து காசியிலிருந்து மதுரை வருகிறார். வாசுவும், பாரதியும் நல்ல நண்பர்கள் ஆகின்றனர். வாசுதேவன் உதவியுடன் பாரதியாருக்கு சுதேசமித்திரன் பத்திரிகையில் உதவியாசிரியர் பதவி கிடைக்கிறது. பின் பாரதி மனைவியுடன் திருவல்லிக்கேணியில் குடியேறுகிறார். வாசுதேவன் ஒரு பெண்ணைக் காதலிக்கிறான். வாசுவின் தந்தை அதனை ஏற்காததால் பாரதி தானே முன்னின்று அத்திருமணத்தை நடத்தி முடிக்கிறார். வேறு வழியின்றி அதனைத் தந்தை ஏற்கிறார்.

இதனிடையில் பாரதி சுதேசமித்திரனை விட்டு விலகி இந்தியா என்ற வார இதழை ஆரம்பிக்கிறார். அதற்காகவாசு சென்னை செல்கிறார். அவரிடம் பாரதி தனக்கு உதவி செய்யவேண்டும் எனக் கூறிப் பல பொறுப்புகளைக் கொடுக்கிறார். வாசுவை வ.உ.சியை பார்க்க அனுப்புகிறார். இந்நிலையில் பூமாவின் பெற்றோரும் சுந்தரத்தின் சித்தப்பா, சித்தியும் இறந்த செய்தி வருகிறது. அது குடும்பத்தை மிகவும் தாக்கிவிடுகிறது. மதுரையில் ஒரு காலும் தூத்துக்குடியில் ஒரு காலும் ஆக நாட்கள் ஓடின. இடை இடையே சென்னையும் சென்று வருகிறார். வ.உ.சி தான் திலகரைச் சந்திக்கப் பூனாவிற்குச் செல்ல இருப்பதாகவும் கப்பல் வாங்க வேண்டுமென்றும் அதற்குத் தன்னுடன் வாசு வரவேண்டும் என விரும்பி அவன் பெற்றோரிடம் அனுமதி வாங்க மதுரை வருகிறார். சுந்தரம் சிதம்பரம்பிள்ளையிடம் ‘‘மூர்த்தி சிறிதானாலும் உங்கள் கீர்த்தி பெரியது பிள்ளைவாள் ஆங்கிலேயனை

எதிர்க்க நாங்கள் பேனாவைத்தான் எடுத்தோம். ஆனால் நீங்களோ அவன் கதிகலங்கும் விதத்தில் கப்பல் ஓட்டுவதற்கு துணிந்துவிட்டீர்கள் உங்கள் கப்பல் ஓடும்''[88]என்கிறார்.

பூமா கப்பல் வாங்குவதற்கு தன் மாமியார் தந்த பத்துப் பவுன் சங்கிலியை மூலதனமாகக் கொடுத்தார். சுதேசி கப்பல் கம்பெனிக்கு பணத்தை அள்ளிக்கொடுக்கும் படி பாரதியின் இந்தியா வாரம் தோறும் குரல் எழுப்பியது. வாசுதேவனும் பம்பரமாய்ச் சுழன்றார். வெள்ளையனுக்கு எதிராகச் சுதேசிக் கப்பல் இயங்கியது. வெள்ளை அரசாங்கம் சிதம்பரம்பிள்ளையிடமும், சுப்பிரமணிய சிவாவிடமும் சுதேசிக் கப்பல் கம்பெனியைக் கலைக்கவேண்டும் என்றும்,பொதுக்கூட்டங்கள் நடத்தக்கூடாது என்றும், இந்திய மக்களின் தாரக மந்திரமான வந்தேமாதரம் கோஷத்தை எழுப்பக்கூடாது என்றும் கூறுகின்றனர். அவர்கள் மறுக்கவே அவர்களைச் சிறையில் அடைக்கின்றனர். ஆஷ் துரை அப்போது துப்பாக்கியால் சுட்டதில் நான்கு பேர் இறக்கின்றனர். சிவாவிற்குப் பத்து ஆண்டுகளும், வ.உ.சிக்கு இரண்டு ஆயுள் தண்டனைகளையும் ஆங்கில அரசு வழங்கியது. பாரதியைச் சிறை செய்ய முயன்ற போது அவர் புதுச்சேரி சென்று விடுகிறார். ஒருமாதம் கழித்து பாரதியிடமிருந்து புதுவை வரும்படி வாசுவிற்குக் கடிதம் வருகிறது.

அவரைக் காணச்சென்ற வாசுவிடம் அரவிந்தர் விடுதலையாகி உள்ளார். நீ வீரராகவாச்சாரியாரிடம் கடிதம் வாங்கிச் சென்று கல்தத்தாவில் பத்திரிகை வேலை பார்ப்பது போல் அவரைப் புதுவை அழைத்து வரவேண்டும் என்று கூறுகிறார். அரவிந்த் புதுவை சென்றதை அறிந்து வெள்ளை அரசாங்கம் இந்தியா பத்திரிகைக்குத் தடைவிதிக்கிறது. ஆறுமாதம் கழித்து வ.வே.சு.அய்யரும் புதுவை வருகிறார். அவரைப் பார்க்கப் போன வாசுவிடம் ஆஷ் துரையைக் கொன்று தற்கொலை செய்து கொள்ளும் துணிவு உள்ள ஒரு பையன் தேவை என்கிறார். ஒருவாரத்தில் வாஞ்சிநாதன் என்பவரை

வ.வே.சு.அய்யர் முன் நிறுத்துகிறார். 1908-ஆம் ஆண்டு ஜீன் 17-ஆம் தேதி மணியாச்சி சந்திப்பில் வாஞ்சிநாதன் ஆஷ் துரையைக் கொன்று தன்னையும் சுட்டுக் கொண்டான். வாஞ்சிநாதனுக்கு அடைக்கலம் கொடுததற்கும், ஆஷ்துரை கொலைக்குக்காரணம் என்றும் கூறி வாசுதேவனை கைது செய்து மூன்று ஆண்டுகள் சிறை தண்டனை அளிக்கிறது ஆங்கில அரசு. வாசுவைச்சிறை வாசலில் சந்தித்த சுந்தரம் அவனுக்குப் பையன் பிறந்துள்ளான் என்றும் சுப்பிரமணியன் என்று பெயரிட்டு இருப்பதாகவும் கூறுகிறார். சில மாதங்களில் அவன் தந்தை இறந்துவிடுகிறார். மூன்றுஆண்டுகள் கழித்து வீட்டிற்கு வந்தவுடன் வாசுவிற்கு மீண்டும் சென்னை வரும்படி ஐயங்காரிடமிருந்து கடிதம் வருகிறது. மீண்டும் நிருபராகச் செல்லவேண்டும் என்ற நிலையில் கதைநிறைவடைகிறது.

## தொகுப்புரை

- தமிழ்ப் புதினங்களில் இந்திய விடுதலைக்காக நிகழ்த்தப்பட்ட அனைத்து விடுதலைப் போராட்ட நிகழ்வுகளும் ஆய்விற்குரிய புதினங்களில் இடம்பெற்றுள்ளமை குறிப்பிடத்தக்கது.
- விடுதலைப் போரின் தொடக்கமாகிய வேலூர்க்கலகம் முதல் வெள்ளையனே வெளியேறு (அ) ஆகஸ்ட்டு புரட்சி வரை நடந்த விடுதலைப் போராட்ட நிகழ்வுகள் அனைத்தும் கால அடிப்படையில் விளக்கப்பட்டுள்ளன.
- ஒரே புதினத்தில் எல்லா நிகழ்வுகளும் சுட்டப்பெறவில்லை எனினும் ஒரு சில நிகழ்வுகள் மட்டும் இடம்பெற்ற புதினங்களும் ஆய்வுக்கு எடுத்துக் கொள்ளப்பட்டன.
- கல்கியின் அலை ஓசை, நா.பார்த்தசாரதியின் ஆத்மாவின் ராகங்கள், ஜோதிர்லதாகிரிஜாவின் மணிக்கொடி, என்.ஏ.வேலாயுதத்தின் இருவிழிகள் போன்ற நான்கு புதினங்களில் விடுதலைப் போராட்டம் தொடங்கியது முதல் இந்தியா விடுதலை பெறுவது வரை உள்ள அனைத்துச் செய்திகளும் இடம் பெற்றுள்ளமை சுட்டத்தக்கது. விடுதலைப் போராட்ட நிகழ்வுகளை கூறுவதற்காவே இப்புதினங்கள் எழுதப்பட்டது போல் காட்சியளிக்கின்றன.
- விடுதலைப் போராட்ட நிகழ்வுகளில் முதலாவதாகச் சுட்டப்படும் வேலூர் கலகம் மணிக்கொடி என்ற ஒரு புதினத்தில் மட்டும் இடம்பெற்றுள்ளது. வடமாநிலங்களில் பெருமளவு நிகழ்ந்த சிப்பாய்க்கலக நிகழ்வு அணையாச்சுடர், இரத்தம் ஒரே நிறம், வந்தேமாதரம் ஆகிய மூன்று புதினங்களில் இடம்பெற்றுள்ளது.
- அந்நியத் துணி எரிப்புப் போராட்டம் என்ற நிகழ்வு தியாகத்தழும்பு, இருவிழிகள் என்ற இரு புதினங்களில் இடம்பெற்றுள்ளமை குறிப்பிடத்தக்கது.

- ❖ கதர் இயக்கம் பற்றிய செய்திகள் மணிவாசகன், தியாகபூமி, அன்புநிலையம் (அ) வாழும் வகை, தேசபக்தன் கந்தன், சர்க்கா, ஆத்மாவின் ராகங்கள், மண்ணில் தெரியுது வானம், பாதையில் பதிந்த அடிகள் என்பன போன்ற எட்டுப்புதினங்களில் சுட்டப்பட்டுள்ளன.
- ❖ ரௌலட் சட்ட எதிர்ப்பு மற்றும் ஜாலியன் வாலாபாக் படுகொலை என்ற நிகழ்வுகள் கண்திறக்குமா, மணிக்கொடி,இருவிழிகள், என்ற மூன்று புதினங்களில் உரைக்கப் பெற்றுள்ளன.
- ❖ ஒத்துழையாமை இயக்கம் குறித்த நிகழ்வுகள் தேசபக்தன் கந்தன், பெண், சர்க்கா, இருபது வருஷங்கள், பாதையில் பதிந்த அடிகள், இருவிழிகள் என்ற ஆறு புதினங்களில் சுட்டப்பட்டுள்ளன.
- ❖ சட்டமறுப்பு இயக்கம் குறித்த நிகழ்வுகள் மணிக்கொடி, இருவிழிகள் என்ற இரு புதினங்களில் பேசப்பெற்றுள்ளன.
- ❖ உப்புசத்தியாக்கிரகம் என்ற நிகழ்வு சர்க்கா, கண்திறக்குமா, தியாகத்தழும்பு, ஆத்மாவின் ராகங்கள், வானவீதி, மணிக்கொடி, இருவிழிகள் என்ற ஏழு புதினங்களில் சுட்டப்பட்டுள்ளன.
- ❖ கள்ளுக்கடை மறியல், மதுவிலக்கு போன்ற நிகழ்வுகள் தியாகபூமி, அன்பு நிலையம்(அ) வாழும் வகை, தேசபக்தன் கந்தன், பெண், இருபது வருஷங்கள், தியாகத்தழும்பு, ஆத்மாவின்ராகங்கள், கல்லுக்குள் ஈரம், மண்ணில் தெரியுது வானம், பாதையில் பதிந்த அடிகள், மகுடபதி, மணிக்கொடி,இருவிழிகள் என்பன போன்ற பதின்மூன்று புதினங்களில் இடம்பெற்றுள்ளன.
- ❖ தனிநபர் சத்தியாக்கிரகம் என்ற நிகழ்வு தியாகபூமி, தியாகத்தழும்பு, ஆத்மாவின் ராகங்கள்,வானவீதி, மணிக்கொடி, இருவிழிகள் போன்ற ஆறு புதினங்களில் சுட்டப்பட்டுள்ளன.

❖ வெள்ளையனே வெளியேறு அல்லது ஆகஸ்ட் புரட்சி என்ற நிகழ்வு மண்ணின் புதல்வர்கள், நெஞ்சின் அலைகள், அலை ஓசை, தியாகத்தழும்பு, புதுவெள்ளம், சோலைமலை இளவரசி, ஆத்மாவின் ராகங்கள், கல்லுக்குள் ஈரம், வானவீதி,மணிக்கொடி, இருவிழிகள் என்ற பதினொரு புதினங்களில் இடம்பெற்றுள்ளன.

❖ மணிவாசகன் என்ற புதினத்தில் கதர் இயக்கம் பற்றிய நிகழ்வு மட்டுமே கூறப்பெற்றுள்ளது. காரணம் இந்நூல் எழுந்த காலத்தில் கதர் இயக்கப்போராட்டம் அதிகம் நடைபெற்றதால்புதினம் முழுக்க இந்நிகழ்வே இடம் பெற்றுள்ளது.

❖ பெண், இருபது வருஷங்கள் என்ற புதினங்களில் ஒத்துழையாமை இயக்கம் என்ற ஒரு நிகழ்வு மற்றும் சுட்டப்பட்டுள்ளது.

❖ அணையாச்சுடர், இரத்தம் ஒரே நிறம் ஆகிய புதினங்களில் சிப்பாய்க்கலகம் மட்டும் இடம்பெற்றுள்ளது.

❖ மண்ணின் புதல்வர்கள், நெஞ்சின் அலைகள், புதுவெள்ளம், சோலைமலை இளவரசி என்ற நான்கு புதினங்களில் வெள்ளையனே வெளியேறு இயக்க நிகழ்வுகள் உரைக்கப் பெற்றுள.

❖ மகுடபதி என்ற புதினத்தில் கள்ளுக்கடை மறியல் என்னும் நிகழ்வுமட்டும் இடம் பெற்றுள்ளது.

❖ கள்ளுக்கடை மறியல் என்ற விடுதலைப் போராட்ட நிகழ்வு பதின்மூன்று புதினங்களில் சுட்டப்படுள்ளது. கள் மக்களின் வாழ்வை நேரடியாகப் பாதித்ததால் புதின ஆசிரியர்கள் இதனை அதிகம் சுட்டியுள்ளனார். இதனால் மக்களை நேரடியாகப் பாதிக்கும் காரணிகளுக்கு படைப்பாளர்கள் அதிக முக்கியத்துவம் கொடுத்தமை புலனாகும்.

❖ மணிவாசன் என்ற புதினம் கதர் இயக்கம் பற்றிச் சுட்டுகிறது. தியாகபூமி மதுவிலக்கு, கதர் அணிதல், அந்நியதுணி மறுப்பு பற்றிச் சுட்டுகிறது. அன்பு நிலையம் (அ) வாழும் வகை என்ற புதினம் மதுவிலக்கு, கதர் ஆடை அணிதல், அந்நிய துணி மறுப்பு, சுதேசி இயக்கம் பற்றிச் சுட்டுகிறது. புரட்சிப் பெண்ணில் உப்பு சத்தியாக்கிரகம் பற்றிய நிகழ்வு இடம்பெற்றுள்ளது. மண்ணின் புதல்வர்கள், வெள்ளையேனே வெளியேறு போராட்டம் நடைபெற்ற காலத்தில் தோன்றியதால் அதனைப் பற்றிச் சுட்டுகிறது. தேசபக்தன்கந்தன் ஒத்துழையாமை இயக்கம் நடந்த காலத்தில் தோன்றியதால் அவ்வியக்கம் பற்றி விரிவாகச் சுட்டிச்செல்கிறது. பெண் என்ற புதினம் சட்ட மறுப்பு இயக்கம், ஒத்துழையாமை இயக்கம் பற்றிய கருத்துகளைச் சுட்டியுள்ளது.

## சான்றெண் விளக்கம்

1. அரங்க சுப்பையா, இலக்கியத் திறனாய்வு கொள்கைகளும் இசங்களும், ப.224.
2. Michel Zeraffa, fictions the novel and social realty, P. 11.
   (The Novels is the first art to represent man explicity as defined historically and socially)
3. Ibid, P. 14.

   (The sociability of the novel served to endovil with size all cultural political and ideological functions even more than poetry for example fiction comes to express ideas of nation food and national renaissance in colonies are countries which have recently gained Independence)
4. Alan Swinge wood, the novel and revolution, P. 7.
   (The novel he (taine) rote was a portable mirror which can be conveyed every where and is most convenient for refelcting all aspects of life and nature)
5. பனையப்ப செட்டியார், மணிவாசகன், ப.13.
6. மேலது, ப.80.
7. மேலது, ப.234.
8. கல்கி, தியாகபூமி, ப.391.
9. மேலது, ப.318.
10. மேலது, ப.494.
11. சாண்டில்யன், புரட்சிப் பெண், ப.55.
12. சுத்தானந்த பாரதியார், அன்பு நிலையம்(அ) வாழும் வகை, ப.229.
13. நா.ரா.பண்டரிநாதன், மண்ணின் புதல்வர்கள், பக்.43-44.

14. மேலது. ப.47.

15. மேலது, ப.114.

16. கா.சி.வேங்கடரமணி,தேசபக்தன் கந்தன், ப.95.

17. மேலது, ப.174.

18. மேலது, ப.180.

19. மேலது, ப.243.

20. அகிலன், பெண், ப.57.

21. மேலது, ப.81.

22. மேலது, ப.85.

23. மேலது, ப.127.

24. கல்கி, அபலையின் கண்ணீர், ப.174.

25. மேலது, ப.228.

26. பி.எம்.ராஜகோபாலன், சர்க்கா, ப.10.

27. மேலது, ப.31.

28. மேலது, ப.71.

29. மேலது, ப.159.

30. அகிலன், இன்பநினைவு, ப.08.

31. மேலது, ப.35.

32. மேலது, ப.65.

33. மேலது, ப.72.

34. அகிலன், நெஞ்சின் அலைகள், ப.19.

35. மேலது, ப.43.

36. மேலது, ப.134.

37. மேலது, ப.194.

38. மேலது, ப.268.

39. கல்கி, அலை ஓசை, ப.226.

40. மேலது, ப.393.

41. மேலது, ப.455.

42. மேலது, ப.561.

43. விந்தன்,கண்திறக்குமா, ப.20.

44. நா.பார்த்தசாரதி,கோபுரதீபம், ப.58.

45. மேலது, ப.180.

46. மேலது, ப.211.

47. நாரண.துரைக்கண்ணன், தியாகத்தழும்பு, ப.70.

48. மேலது, ப.99.

49. மேலது, ப.219.

50. மேலது, ப.252.

51. அகிலன், புதுவெள்ளம், ப.39.

52. மேலது, ப.106.

53. மேலது, ப.323.

54. கல்கி, சோலைமலை இளவரசி, பக்.18-19.

55. மேலது,பக். 121-122.

56. மேலது, ப.173

57. எம்.எஸ்.கல்யாணசுந்தரம், இருபது வருஷங்கள், ப.255.

58. எம்.எஸ்.வெங்கட்ராமன்,அணையாச்சுடர், ப.2.

59. மேலது, ப.68.

60. மேலது, பக்.83-84.

61. நா.பார்த்தசாரதி, ஆத்மாவின் ராகங்கள், ப.86.

62. மேலது, ப.124.

63. மேலது, ப.158.∴

64. ர.சு.நல்லபெருமாள், கல்லுக்குள் ஈரம், ப.459.

65. மேலது, ப.517.

66. ராஜம்கிருஷ்ணன், வளைக்கரம், ப.152.

67. .மேலது, ப.291

68. சிதம்பரசுப்பிரமணியன், மண்ணில் தெரியுதுவானம், ப.11.

69. மேலது, ப.45.

70. மேலது, ப.284.

71. அகிலன்,எங்கேபோகிறோம், ப.31.

72. மேலது, ப.83.

73. மேலது, ப.312.

74. என்.ஏ.வேலாயுதம், இருவிழிகள், ப.82.

75. மேலது, ப.242.

76. மேலது, ப.276.

77. மேலது, ப.283.

78. கு.ராஜவேலு, வானவீதி, ப.112.

79. மேலது, ப.145.

80. கல்கி, மகுடபதி, ப.112.

81. சுஜாதா, இரத்தம் ஒரே நிறம், ப.322.

82. ராஜம்கிருஷ்ணன்,பாதையில் பதிந்தஅடிகள், ப.35.

83. மேலது, ப.61.

84. மேலது, ப.76.

85. ஜோதிர்லதாகிரிஜா,மணிக்கொடி, ப.158.

86. மேலது, ப.264.

87. நா.ரா.பண்டரிநாதன்,வந்தேமாதரம், ப.87.

88. மேலது, ப.161.

## விடுதலைப் போராட்ட நிகழ்வுகள்

இலக்கியப் படைப்புகள் ஒவ்வொன்றும் அவை தோன்றிய காலத்தைப் பிரதிபலிப்பன. அவ்வகையில் இருபதாம் நூற்றாண்டில் தோன்றிய புதினங்களும் தம் காலச்சூழலைப் பெரிதும் வெளிப்படுத்தியுள்ளன எனக் கருத இடமுண்டு. ஏனெனில் புதினங்கள் சமுதாயத்தைக் கருப்பொருளாகக் கொண்டு படைக்கப்படுவதால் அவற்றில் கூறப்படும் கருத்துக்கள் சமுதாயத்தோடு நெருங்கியத் தொடர்பு உடையனவாய்த் திகழ்கின்றன. இதனை ‘‘தமிழ்ப் புதினங்கள் ஒரு கால கட்டத்தில் தேசிய உணர்வையும், விடுதலைப்போராட்ட வேட்கையையும் வெளிப்படுத்தின. அந்நியரிடமிருந்து விடுதலை பெறவேண்டும் என்ற எண்ணத்திற்குக் காந்தியின் வருகை புதினத்திற்கு ஏற்ற களனாக விளங்கியது. பலபுதினங்கள் தேசியத் தொண்டர்களுக்கு அன்புக் காணிக்கை ஆயின’’[1] எனும்ஜெ.ஆர்.லெட்சுமியின் கூற்று நன்கு விளக்கும். விடுதலைப் போராட்டத்தைக் களனாகக் கொண்டு தோன்றிய புதினங்களில் விடுதலைப் போராட்ட வரலாற்று நிகழ்வுகள் இடம் பெற்றிருக்கும் முறை குறித்துக் காண்பது இவ்வியலின் நோக்கமாகும்.

### விடுதலைப் போராட்ட நிகழ்வுகள்

விடுதலைப் போராட்ட காலத்தில் மக்களிடையே நாம் அனைவரும் பாரத தேசத்தைச் சார்ந்தவர்கள் என்ற உணர்ச்சி உருவாகி வளர்ச்சி பெற்றது. அது தீவிரவாதம், மிதவாதம் என்ற இரு கிளைகளாகக் கிளர்ந்தெழுந்தது. மிதவாத இயக்கத்தின் தலைவர் அண்ணல் காந்தியடிகள் ஆவார். தீவிரவாத இயக்கத்தினர் நேதாஜி சுபாஸ்சந்திர போஸைத் தங்களது தலைவராகக் கொண்டனர். இவ்விருவர் தமது தலைமையில் நடைபெற்ற விடுதலைப் போராட்ட நிகழ்வுகளை அன்றைய புதினங்கள் தமது கதைக்

கருவாக்கிக் கொண்டன. 1806-ஆம் ஆண்டு முதல் விடுதலைப் போராட்டம் பல நிலைகளில் உருவெடுத்தது. அவை பின்வரும் நிலைகளில் அமைந்தன.

| **வ. எண்** | **ஆண்டு** | **நிகழ்வுகள்** |
|---|---|---|
| 1. | 1806 | வேலூர்க் கலகம் |
| 2. | 1857 | சிப்பாய்க் கலகம் |
| 3. | 1906 | அந்நியத் துணி எரிப்பு (அல்லது) சுதேசி இயக்கம் |
| 4. | 1919 | ரௌலட் சட்ட எதிர்ப்பு<br>ஜாலியன் வாலாபாக் படுகொலை |
| 5. | 1920 | ஒத்துழையாமை இயக்கம் |
| 6. | 1929 | சட்ட மறுப்பு இயக்கம் |
| 7. | 1930 | உப்பு சத்தியாக்கிரகம் |
| 8. | 1932 | கள்ளுக்கடை மறியல் |
| 9. | 1940 | தனிநபர் சத்தியாக்கிரகம் |
| 10. | 1942 | வெள்ளையனே வெளியேறு |

மேற்சுட்டிய விடுதலைப் போராட்ட நிகழ்வுகள் புதினங்களில் இடம் பெற்றுள்ளமை பின்வரும் பகுதியில் விளக்கப்பட்டுள்ளன.

## 1. வேலூர்க் கலகம்

ஆங்கிலேய ஆட்சிக்கு எதிராகத் தோன்றிய முதல்போராட்டமாக வேலூர்க் கலகம் சுட்டப்பெறுகிறது. இது 1806-இல் நிகழ்ந்தது ஆங்கிலேயர்கள் இராணுவத்தில் புகுத்திய சில கட்டுப்பாடுகள் வேலூர் கலகத்திற்கு வழிவகுத்தது. இக்கலகம் பற்றி ‘‘இராணுவத்தில் பணிபுரியும் இந்து வீரர்கள் தங்கள் நெற்றியில் சமயக் குறிகளை இடக்கூடாது; முஸ்லீம் வீரர்கள் தங்கள் தாடி,மீசைகளை வெட்டிச் சுத்தமாக வைத்துக்கொள்ள வேண்டும்,சிப்பாய்கள் தங்கள் காதணியைக் கழற்றி விடவேண்டும் என்று ஆணை பிறப்பிக்கப்

பெற்றது. அதிகாரிகள் திணித்த இந்த மாறுதல்கள் சிப்பாய்களைக் கலகம் செய்யத் தூண்டியது”[2] என்பர், ம.பொ.சிவஞானம். திப்புவின் பிள்ளைகள் இவ்வீரர்களை ஆங்கிலேயர்களுக்கு எதிராகக் கிளர்ச்சியில் ஈடுபடத்தூண்டினர்.

1806-ஆம் ஆண்டு சூலை மாதம் ஒன்பதாம் நாள் வேலூர்க் கோட்டையில் திப்புவின் மகன் திருமணம் நடைப்பெற்றது. இத்திருமணத்தில் கலந்து கொள்வதற்காக வீரர்கள் வேலூர்க் கோட்டையில் கூடினர். நள்ளிரவில் அங்கு கூடியிருந்த வீரர்கள் கிளர்ச்சியில் ஈடுபட்டு ஆங்கிலேயர்களைத் தாக்கி, சூலை பத்தாம் நாள் கோட்டையைக் கைப்பற்றினர். திப்புவின் கொடி வேலூர்க் கோட்டையில் ஏற்றப்பட்டது. திப்புவின் இராண்டாவது மகன் பதேக்ஹைதர் அரசராக அறிவிக்கப்பட்டார். இருப்பினும் இக்கிளர்ச்சி ஆங்கிலேயர்களால் அடக்கப்பட்டது,இதனை,‘‘புரட்சி ஒடுக்கப்பட்டது எனினும் 1857-இல் தொடங்கிய சிப்பாய்க் கலகத்திற்கு இது ஒத்திகையாக அமைந்தது. இந்த வேலூாச் சிப்பாய் புரட்சியில் இந்துக்கள் இரத்தமும் முஸ்லீம்கள் இரத்தமும் ஒன்றாய் கலந்து ஆறாய் ஓடியது. இந்த எழுச்சி பிரிட்டிஷ் நாடாளுமன்றத்தை மூன்றுமாதம் குலுக்கியது”[3] என்பார் சு.பொ.அகத்தியலிங்கம். இந்நிகழ்வு மணிக்கொடி என்னும் புதினத்தில் சுட்டப்பட்டுள்ளது.

## மணிக்கொடி காட்டும் வேலூர்க் கலகம்

இப்புதினத்தில் ராஜாகோபாலன் என்ற பாத்திரம், மக்கள் ஆங்கிலேயரை எதிர்த்துப் போராட ஆரம்பித்து 120 வருடங்கள் ஆகிவிட்டன. விரைவில் விடுதலை கிடைக்கும். அந்தநாள் தான் எது என்று தெரியவில்லை என்றுரைக்கும் சூழலில்‘‘ஆங்கிலேயர்கள் பாரதத்தைக் கைப்பற்றப் பல்வேறு சூழ்ச்சிகள் செய்தனர். அதில் ஒன்று ஆட்சியில் இருக்கும் இந்திய மன்னர்களுக்கு வாரிசு இல்லை என்றால் அவர் தத்து எடுக்கக்கூடாது,

ஆட்சியைத் தங்களிடம் ஒப்படைத்துவிடவேண்டும் என்பதாகும். இச்சட்டத்தை ஹைதர்அலியும், திப்புசுல்தானும் எதிர்த்துப் போரிட்டனர் ஆனால் ஆங்கில அரசாங்கம் போரில் வென்று அவர்களை வேலூர்க் கோட்டையில் அடைத்தது. இரண்டாவதாக இந்தியர்களை இராணுவத்தில் சேர்த்து அவர்களிடம் கிறித்தவ மதப்பிரச்சாரம் செய்தனர். மேலும் இந்து முசுலிம் மதங்களைப் பழித்துப் பேசினர். சுதேசிச் சிப்பாய்களுக்கு ஆங்கிலச் சிப்பாய்களைவிடக் குறைந்த சம்பளம் அளித்தனர். பதவி உயர்வையும் ஆங்கிலேயர்களுக்கே அளித்தனர் இதனால் கோபம் அடைந்த சிப்பாய்களிடம் சிறையில் இருந்த திப்புவின் உறவினர்கள் கிழக்கிந்தியக் கம்பெனிகளுக்கு எதிராகப் போரிடத்தூண்டினர். இதன் விளைவாக 1806-ஆம் ஆண்டு சூலை ஒன்பதாம் நாள் சிப்பாய்கள் கிளர்ந்தெழுந்து பிரிட்டிஷ் அதிகாரிகளைத் தாக்கிக் கொன்றதுடன், பிரிட்டிஷ் கொடியை எடுத்துவிட்டு திப்புவின் கொடியைப் பறக்கவிட்டனர். செய்தி அறிந்து சென்னையில் இருந்து வந்த படையினர் போராட்டத்தில் ஈடுபட்ட சிப்பாய்களைக் கல்கத்தா ஜெயிலுக்கு மாற்றினர்”[4] என்று வேலூர்க் கலகம் பற்றிய செய்தி மணிக்கொடியில் சுட்டப்பெற்றுள்ளது.

## 2. சிப்பாய்க்கலகம்

இது 1857-இல் நிகழ்ந்தது. இக்கலகம் தோன்றுவதற்குச் சட்டங்களில் செய்யப் பெற்ற சீர்திருத்தங்கள்,கிறித்தவ மதப்பிரச்சாரம் மதமாற்றம் முதலியவை காரணங்களாக அமைந்தன.

சிப்பாய்க்கலகம் தோன்றியதற்குரிய காரணங்களாக,

1. “ஆங்கில ஆட்சியானது இந்தியாவின் வாணிபம் மற்றும் தொழில்வளர்ச்சியை அழித்தது
2. நிலச்சுவான்தார்களின் சொத்துக்களை அபகரித்தது, மற்றும் அரசர்களின் பதவியையும் புகழையும் குறைத்தது.

3. உயர் பதவிகளை இந்தியர்களுக்கு அளிக்க மறுத்தது
4. பாரம்பரியமாக உள்ள இந்தியர்களின் பழக்கவழக்கத்தை மாற்றி அமைக்க நினைத்தது
5. மதமாற்றத்தின் மூலம் கிறித்தவமதத்தைப் பரப்பியது
6. இந்துக்களையும், முசுலீம்களையும் பல விதத்திலும் துன்புறுத்தியதால் அவர்கள் ஆங்கிலேயர்களை எதிர்த்துப் புரட்சி செய்தனர்
7. இந்திய சிப்பாய்களுக்கு குறைவான சம்பளம், தரமற்ற உணவு, மற்றும் இருப்பிடமும் அளித்ததுடன் கடினமான வேலையும் கொடுக்கப்பட்டது''[5]

என்பனவற்றைக் குறிப்பிடுவர் எ.பி.சீனிவாசமூர்த்தி. இதனால் நாடு முழுவதும் புரட்சிதோன்றியது. இதன் விளைவாக வணிகராட்சி ஓய்ந்து இங்கிலாந்து மகாராணியின் நேரடியாட்சி ஏற்பட்டது. பாரதத்தில் சிப்பாய்கள் செய்த புரட்சி அணையாச்சுடர், இரத்தம் ஒரே நிறம், வந்தேமாதரம் ஆகிய மூன்று புதினங்களில் இடம் பெற்றுள்ளன.

**அணையாச் சுடர் காட்டும் சிப்பாய்க் கலகம்**

அணையாச்சுடர் என்ற புதினத்தில், மங்கள்பாண்டே என்ற இந்திய இராணுவவீரன் இருக்கும் 34-வது பட்டாளத்தில் சிப்பாய்கள் துப்பாக்கிக் குண்டுகளை வாயினால் கடித்து எடுத்த பிறகு வீசவேண்டும் எனச் சொல்லப்பட்டது.இதைக் கேட்ட வீரர்கள் கோபம் அடைகின்றனர். வீரர்கள் அனைவரும் ஒன்று சேர்ந்து கம்பெனியாரின் படையை அழிக்க முற்பட்டனர் என்றுசிப்பாய்க்கலகம் சுட்டப்பெறுகிறது.

**இரத்தம் ஒரே நிறம் காட்டும் சிப்பாய்க்கலகம்**

ஜேம்ஸ் என்பவருக்கு கானிங் பிரபு என்பவர் எழுதிய கடிதத்தில் ‘‘ஏதோ ஒரு புழுக்கம், ஏதோ ஒரு மனக் குறை வடக்கே எங்கிலும் பரவிக் கொண்டிருக்கிறது. கங்கை நதியின் கடைவாயிலில் இருந்து இமாலயத்து மடி,

பஞ்சாப் பிரதேசம் வரை கிராண்டிரங் சாலையின் கிராமங்களில் எல்லாம் இரவில் முரசங்கள் ஒலிக்கின்றன என்ற வதந்தி பரவிக்கொண்டிருக்கிறது. இந்திய இராணுவத்தின் சாதிப்பிரிவை நாம் ஒழித்துக்கட்ட முயற்சி செய்துகொண்டிருக்கிறோமாம், என்.ஃ.பீல்டு ரைபில்களில் பன்றிக் கொழுப்பை கலந்திருக்கிறோமாம் என இருதரப்பினரும் கோபித்திருப்பதாகத் தெரிகிறது”[6]என்று சிப்பாய்க்கலகம் சுட்டப்படுள்ளது. மேலும் கதைத்தலைவன் முத்துக்குமரன் மக்கின்சியைப் பழிவாங்க வடக்கே செல்லும் போது கண்ட “மீரட், கான்பூர் போன்ற இடங்களில் பாரதச் சிப்பாய்கள் ஆங்கிலப் படைவீரர்களைத் தாக்கிக் கொன்று பிணங்களை கிணற்றில் போட்டனர்”[7] என்ற காட்சியின் மூலமும் சிப்பாய்க் கலகத்தைப் பற்றியுரைப்பார்

**வந்தேமாதரம் காட்டும் சிப்பாய்க் கலகம்**

இப்புதினத்தில் “இந்தியாவை ஆண்டு கொண்டிருக்கும் ஆங்லேயர்களை விரட்ட 1857-ஆம் வருடத்தில் வடஇந்தியாவில் பெரிய கிளர்ச்சி நடந்ததுஎன்று சிப்பாய்க் கலக நிகழ்வு சுட்டப்பட்டுள்ளது. அப்பொழுது சிப்பாய்கள் மட்டும் கிளர்ச்சி செய்யவில்லை. வடக்கே உள்ள மன்னர்களும், மக்களும் கிளர்ச்சி செய்தனர். எனினும் இந்நிகழ்வு வெற்றி பெறாததற்குக் காரணம் மக்களிடம் ஓற்றுமையில்லை, போதிய ஆயுதங்கள் இல்லை. எனினும் 1857-இல் நடைபெற்ற இந்த சிப்பாய் கலகம் இந்தியாவின் முதல் விடுதலைப் போராட்டம் எனலாம்”[8]என்னும் பகுதி சிப்பாய்க்கலகம் பற்றியுரைக்கும்.

## 3. அந்நியத்துணி எரிப்புப் போராட்டம் அல்லது சுதேசி இயக்கம்

இப்போராட்டம் நிகழ்ந்த காலத்தில் ஆங்கில அரசப்பிரதிநிதியாக விளங்கியவர் கர்சன்பிரபு ஆவார். இவர் மேற்கொண்ட வங்காளப்

பிரிவினையால், பொருளாதாரப் புறக்கணிப்பு என்னும் சுதேசி இயக்கம் தோன்றியது. ‘‘சுதேசி என்பதன் பொருள் சொந்தநாடு என்பதாகும். அவ்வியக்கம் சொந்தநாட்டின் தொழில்களை மேம்படுத்துவதை நோக்கமாகக் கொண்டிருந்தது’’[9] அதனால் அந்நியத்துணிகளை எரிப்பது; உள்நாட்டில் துணிகள் உற்பத்தியைப் பெருக்குவது என்பது சுதேசி இயக்கத்தின் குறிக்கோளாக விளங்கியது. இச்சுதேசி இயக்கத்தில் மக்கள் தீவிரமாக ஈடுப்பட்டதைத் தியாகத்தழும்பு, இருவிழிகள் போன்ற புதினங்கள் வெளிப்படுத்தியுள்ளன.

### தியாகத்தழும்பு

இப்புதினத்தில் கதைத்தலைவனும் தொண்டர்படையினரும் இணைந்து அந்நியத்துணி எதிர்ப்பு மறியலிலும்மதுபானக் கடை மறியலிலும் ஈடுபட்ட நிகழ்வு சுட்டப்பட்டுள்ளது.

### இருவிழிகள்

இப்புதினத்தில்‘‘இஸ்மாயில் மகன்ரஹீம் என்பவன் உப்பு சத்தியாக்கிரகத்துடன், அந்நியத் துணி எரிப்புப் போராட்டமும் சேர்ந்து கொண்டதை அறிந்து தன் கடையில் இருந்த அந்நியத் துணிகளை நடுவீதியில் தீயிட்டுக் கொளுத்தியமை’’[10] குறித்த செய்தி இடம்பெற்றுள்ளது.

### கதர் இயக்கம்

‘‘நமது நாட்டில் விளைந்த பஞ்சினைக் கொண்டு நூற்ற நூலால் கைத்தறியில் நெய்த ஆடையே கதர் எனப்படும்’’[11] என்பர் பனையப்பசெட்டியார். ‘‘அந்நியப் பொருட்களை இந்தியர்கள் ஒழிக்கவேண்டும் என்பதற்காகவே காந்தியடிகள் இராட்டை நூற்பையும், கதர்த் தொழிலையும் அறிமுகப்படுத்தினார்’’[12] என்பர் சி.எஸ்.தேவ்நாத். அந்நியத் துணியை

எதிர்த்துக் கதரால் ஆகிய ஆடையை அணியும்படிக் கூறும் நிலை, மணிவாசகன், தியாகபூமி, அன்பு நிலையம் (அ) வாழும் வகை, தேசபக்தன் கந்தன், சர்க்கா, ஆத்மாவின் ராகங்கள், மண்ணில் தெரியுது வானம், பாதையில் பதிந்த அடிகள் என்பன போன்ற புதினங்களில் சுட்டப்பட்டுள்ளது.

**மணிவாசகன்**

இப்புதினத்தில்,"நாம் உடுத்துகின்ற துணியை நம்முடைய வீடுகளில் நாமே உண்டாக்கிக் கொள்வதால் நாடு வறுமை நீங்கி வளமை பெறும்; நம் நாட்டு மக்கள் அனைவரும் தினந்தோறும் ஒன்று அல்லது இரண்டு மணிநேரம் நூற்பதால் அவரவர்க்கு வேண்டிய ஆடைகளை அவர்களே தயாரிப்பதுடன் நம்முடைய பொருளாதாரமும் மேன்மை அடையும் என்று கூறுமிடத்து"[13] கதர்பற்றிய செய்தி சுட்டப்பட்டுள்ளது

**தியாகபூமி**

இப்புதினத்தில் சம்புசாஸ்திரி என்பவர் "ஊர் ஊராகச் சென்று கதர் பற்றியும், கதர் ஆடையின் சிறப்புக் குறித்தும் மக்களுக்குக் கூறும் நிலையில்"[14] அந்நிய துணி மறுப்பு குறித்த நிகழ்வு சுட்டப்பெற்றுள்ளது.

**அன்பு நிலையம் (அ) வாழும் வகை**

இப்புதினத்தில்ம காத்மா காந்தி நேரடியாக மக்களிடம் சுதேசி இயக்கம் குறித்துப் பேசுவது போல் இடம்பெற்றுள்ளது. மகாத்மா, மக்களிடம் ஒரு பொதுக்கூட்டத்தில் "வீடுதோறும் இராட்டினம் சுழலவேண்டும், இருபது இராட்டினங்களுக்கு ஒரு தறி வேலை செய்யவேண்டும். உங்கள் ஆடையை நீங்களே நூற்று நெய்து உடுத்தவேண்டும். அந்நிய ஆடையை எக்காரணத்தாலும் வாங்கக்கூடாது. முதலில் எல்லோரும் இந்தக் கதர் விரதத்தை மேற்கொள்ளுங்கள் என்கிறார். அக்கூட்டத்தில் காந்தியடிகளுக்குக் கதர் மாலை அணிவிக்கப்படுகிறது. காந்தியடிகள் மக்கள் இவ்வேலையை

மேற்கொள்வதற்காகக் காங்கிரஸ் நிதியிலிருந்து ரூபாய் ஆயிரத்தைநூறு அளிக்கிறார்.''[15] என்பன போன்ற செய்திகள் விடுதலைப் போராட்ட நிகழ்வுகளாகச்சுட்டப்பெற்றுள.

**தேசபக்தன் கந்தன்**

இப்புதினத்தின் கதைத்தலைவன் கந்தன் கதர் ஆடைபற்றி மக்களிடம் எடுத்துக் கூறுவதுடன் சொந்தச் செலவில் மக்களுக்கு சர்க்கா, பஞ்சு முதலியவற்றை அளித்து நூல் நூற்க உதவுவது போன்ற நிகழ்வுகள் இதில் இடம் பெற்றுள்ளன.

**சர்க்கா**

இப்புதினத்தில் கதர்பிரச்சாரம் ஒரு சொற்பொழிவின் வழி புனையப்பட்டுள்ளது. சொற்பொழிவின் தலைப்பு 'இராட்டையின் மூலம் சுயராஜ்யம்'என்பதாகும். இதில் பேசியவர் இராட்டையின் முக்கியத்துவம் பற்றிக் கூறியதுடன் ''இராட்டை நாட்டின் சுயராஜ்யத்திற்கு இன்றியமையாத கருவி, தேசத்தில் பிறந்த ஒவ்வொருவரும் நூல் நூற்கவேண்டும். இராட்டை தர்மத்தின் சின்னம் அகிம்சையின் சாதனம்''[16] என்று கூறுவதும், சுந்தரராஜன் என்பவர் தனது ஆசிரமத்தில் இராட்டையில் நூல் நூற்கவும், தறியில் ஆடை நெய்யவும் ஏற்பாடு செய்தார் அது அந்நியத் துணிஎதிர்ப்பு இயக்கமாக மாற ஆரம்பித்தது என்றுபேச்சின் மூலமும், செயலின் மூலமும் கதர் பிரச்சாரநிகழ்வு சுட்டப்பெற்றுள்ளது.

**ஆத்மாவின் ராகங்கள்**

இப்புதினத்தில் மக்கள் அந்நியத் துணிக்கடை மறியல்நடத்துதல், அதற்காகக் கைது செய்யப்படுதல், சிறையில் இருந்து வெளியில் வந்தவுடன் போராடியவர்கள் சேர்ந்து ''கதர் துணிகளைத் தெருத் தெருவாகச் சுமந்து

சென்று விற்றல் போன்ற செய்தியும்”[17]மக்கள் தினமும்இராட்டையில் நூற்கும் செய்தியும் சுட்டப்பெற்றுள்ளது.

### மண்ணில் தெரியுது வானம்

இப்புதினத்தில் 1930-ஆம் ஆண்டு அரசால் 144 தடை உத்தரவு பிறப்பிக்கப்பட்டநிலையில் “அதை மீறிமீனாட்சி சுந்தரம் என்பவர் பொதுக்கூட்டம் நடத்தியதும், அந்நியத் துணிக்கடை மறியலில் ஈடுபட்டதும் சுட்டப்படுகிறது”[18]

### பாதையில் பதிந்த அடிகள்

இப்புதினத்தில் கதைத்தலைவி மணியிடம் காந்தியடிகளே,“கதர் பிரச்சாரமும் தீண்டாமைப் பிரச்சாரமும் உங்களுக்கு ஏற்றது. பெண்கள் விரும்பி அணியும் கதரை நம்மால் உற்பத்தி செய்ய முடியும். பெண்கள் நிறையப் பேர் இந்த தேச இயக்கத்தில் சேரவரும் போது நாம் சுயச்சார்பு உள்ளவர்களாக ஆவோம்”[19] என்று கூறுவது விடுதலைப் போராட்ட நிகழ்வில் குறிக்கத்தக்கதாகும். விடுதலைப் போராட்ட உணர்வு பெண்களிடம் பரவியதையும் பெண்களும் அந்நியத் துணி எதிர்ப்பில் ஈடுபட்டதையும் இப்புதினம் குறிப்பிடுகின்றது.

## 4. ரௌலட் சட்டஎதிர்ப்பு, ஜாலியன் வாலாபாக் படுகொலை,ரௌலட் சட்டம்

ஆங்கில அரசு இந்திய மக்களின் விடுதலைப் போராட்டத்தைத் தீவிரமாக எதிர்கொள்ள 1919-ஆம் ஆண்டு ரௌலட் சட்டத்தைக் கொண்டுவந்தது. இச்சட்டத்தின் படி சந்தேகத்தின் பேரில் எவரையும் கைது செய்யலாம். இத்தகைய கைதினை எதிர்த்து விண்ணப்பமோ, அல்லது மேல் முறையீடோ செய்ய முடியாது. இச்சட்டம் கருப்புச் சட்டம் என்று கருதப்பட்டது. இதனை “இச்சட்டம் தேவையற்றது, மானம் உள்ள

இந்தியர்களால் இதனை ஏற்க முடியாது; ஆத்மாவை அடகுவைத்த கொத்தடிமைகளாக இந்திய மக்களை மாற்றிவிடும் இந்த ரௌலட் சட்டம்''[20]என்று காந்தியடிகள் இச்சட்டத்திற்குஎதிர்ப்புக் குரல் கொடுத்ததை அடிப்படையாகக் கொண்டுஇச்சட்டத்திற்குப் பலத்த எதிர்ப்புகள் தோன்றின. நாடு முழுவதிலும் கடையடைப்பு, மறியல் போராட்டங்கள், நடத்தப்பட்டன இது நடைபெற்றது. 1919-ஆம் ஆண்டு ஏப்ரல் 6-ஆம் நாள் ஆகும்.

**ஜாலியன் வாலபாக் படுகொலை**

**"**ரௌலட் சட்டத்தை எதிர்த்து 1919-ஆம் ஆண்டு ஏப்ரல் 13-ஆம் நாள் ஜாலியன் வாலாபாக் என்னும் இடத்தில் ஓர் எதிர்ப்புக் கூட்டம் நடந்தது. அக்கூட்டத்தில் பேசும் தலைவர்களின் உரைகளைக்கேட்பதற்காகஆண்களும், பெண்களும், குழந்தைகளும் திரளாகக் கூடியிருந்தனர். அப்பொழுது பொதுக்கூட்டங்கள் கூட்டுவதற்குத் தடைவிதிக்கப்பட்டிருந்தது. ஜெனரல் டயர் என்பவன் தடையை மீறிக்கூடிய இந்தியர்களுக்குப் பாடம் புகட்ட நினைத்தான்.ஆயுதம் ஏந்திய சிப்பாய்கள் 150 பேருடன் கூட்டம் நடக்கும் இடத்திற்கு வந்துதமது துப்பாக்கிகளில் உள்ள குண்டுகள் தீரும் வரை சுட்டு விட்டுத் தன் படையுடன் திரும்பிச் சென்றான்''[21] இந்நிகழ்வே ஜாலியன் வாலாபாக் படுகொலை எனப்பட்டது. இவ்வரலாற்று நிகழ்வு கண்திறக்குமா, மணிக்கொடி, இருவிழிகள் போன்ற புதினங்களில் சுட்டப்பட்டுள்ளன.

**கண்திறக்குமா**

இப்புதினத்தில ̇ ''காந்தியடிகள் ரௌலட் சட்டத்தை எதிர்த்துப் போராட்டம் நடத்தியதால் அவர் கைதாகி சிறையில் அடைக்கப்பட்டமையும்.''[22]கதைத் தலைவன் செல்வம் ரௌலட் சட்ட எதிர்ப்பு ஊர்வலத்தில் பங்கு பெற்றதால் கைதாகிய செய்தியும் சுட்டப்பட்டுள்ளது.

**மணிக்கொடி**

இப்புதினத்தில் ராமசாமி தனது மகன் கங்காதரனிடம், காந்தியடிகள் ரௌலட் சட்டத்தை எதிர்க்கமக்கள் நாடு முழுவதும் கடையடைப்பு மேற்கொள்ள வேண்டும் என்று கேட்டுக் கொண்டதற்கிணங்கச் செயல்பட்டனர் என்று கூறுமிடத்து ரௌலட் சட்ட எதிர்ப்பு சுட்டப்பட்டுள்ளது. ‘‘இறந்தவர்களுக்காக இரங்கற்கூட்டம் ஜாலியன்வாலாபாக் என்ற இடத்தில் நடந்தபோது ஜெனரல் டயர் அங்கு சென்று எவ்வித எச்சரிக்கையும் செய்யாமல் ஜனங்களைச் சுடத் தொடங்கினான் என்று ராமசாமி கங்காதரனிடம் கூறுமிடத்து’’[23] பஞ்சாப் படுகொலை பற்றியுரைக்கப் பெற்றுள்ளது.

**இருவிழிகள்**

இப்புதினத்தில் ரௌலட் சட்டத்தை எதிர்த்துப் பெரியவர்கள் மட்டுமின்றிச் சிறுவர்களும் நடத்திய போராட்டம் குறிப்பிடப் பெற்றுள்ளது .மாணவர்கள்போராட்டம் நடத்தும்போது திறந்திருந்த கடைகளின் மீது கற்களை விட்டெறிந்தும், விடுமுறை விடாத பாடசாலைகளை மூடும்படி செய்தும் போராடியது பற்றி இப்புதினம் உரைக்கின்றது.

**5. ஒத்துழையாமை இயக்கம்**

1920-ஆம் ஆண்டு காங்கிரஸ் கட்சி ஒத்துழையாமை இயக்கத்தைக் கடைப்பிடித்தது. அவ்வியக்கத்தின் முக்கிய நோக்கம் அகிம்சை, அமைதி வழிகளில் சுயராஜ்யம் பெறுவதாகும். இவ்வொத்துழையாமை இயக்கம் குறித்து ‘‘ஆங்கில அரசுடன் ஒத்துழையாமல் இந்தியர் இந்தியர்களாகச் செயற்படவேண்டுமென்ற நோக்குடன் காந்தியடிகளால் உருவாக்கப்பட்ட இயக்கம் ஒத்துழையாமை இயக்கம் எனப்படும்’’[24] இந்தியரின் ஒத்துழைப்பு இல்லாவிட்டால் ஆங்கிலேயர்கள் விடுதலையை நல்குவர் என்பது

காந்தியடிகளின் எண்ணம் ஆகும். இவ்ஒத்துழையாமைப் போராட்டத்தில் மக்கள் ஈடுபட்டது குறித்து “இந்தியாவில் முதற் பொதுமக்கள் போராட்டம் ஒத்துழையாமை இயக்கம் ஆகும். இத்துடன் வீரத்தையும், தியாகத்தையும், துணிகரதீரத்தையும், வெறியார்ந்த நாட்டுப்பற்றையும் நோக்கினால் அதுவே இந்தியாவின் முதன்மை வாய்ந்த போராட்டமும் ஆகும். பிற்காலப் போராட்டங்களில் பொது மக்கள் பின்னும் பெரிய அளவில் திரண்டதுண்டு. ஆனால் ஒத்துழையாமைக் காலத்தில் மக்களிடம் கோரப்பட்ட தியாகங்கள் பின்னும் என்றும் அவர்களிடம் கோரப்பட்டதில்லை. உயிரை வெறுத்து இளைஞர்கள் பேரவை இயக்கத்திற்கு உள்ளேயும், புறம்பேயும் போராடியதுண்டு. ஆனால் உயிரைத் துறப்பதைவிட வாழ்வைத்துறப்பது, நல்வாழ்வையும், உயர்பதவிகளையும் துறப்பது மனிதஇயல்புக்கு அருமையானது.”[25] என்பர் கா.அப்பாதுரை.

**ஒத்துழையாமை இயக்கத்தின் கொள்கைகள்**

அரசுக்கு ஒத்துழைக்க மறுத்தல் அரசு அளித்த கௌரவப் பட்டங்களைத் துறத்தல் அரசு அலுவல்களில், அலுவலகங்களில் பங்கு கொள்ளாமை நீதிமன்றங்களைப் புறக்கணித்தல், வழக்கறிஞர் பணியைத் துறத்தல், அரசின் ஆதரவு பெற்ற ஆங்கிலப் பள்ளிகளைப் புறக்கணித்தல், இராணுவம் முதலியவற்றில் சேர மறுத்தல், அரசு நடத்தும் தேர்தலைப் புறக்கணித்தல், அந்நியப் பொருட்களைப் பயன்பாடுத்தாதிருத்தல், தேசியப் பள்ளிகள், கல்லூரிகள், தனியார்ப்பஞ்சாயத்து, நீதிமன்றங்கள் போன்றவற்றை நிறுவுதல். சுதேசிப் பொருட்களையும், கதர்த்துணிகளையும் மக்களிடையே பிரபலப்படுத்துதல் போன்றவை ஒத்துழையாமை இயக்கத்தின் கொள்கைகளாக விளங்கின.

செல்வச்சீமான்கள், வழக்கறிஞர்கள், எழுத்தாளர்கள், குடியானவர்கள், தொழிலாளர்கள், மாணவர்கள், ஆசிரியர்கள், பெண்கள், அலுவலர்கள் போன்ற சமுதாயத்தின் அனைத்துப் பிரிவினரும் பங்கேற்ற முதலாவது மக்கள் இயக்கமாக இது விளங்கியது. இந்தியாவின் மூலைமுடுக்குகளில் எல்லாம் தேசியம் பரவ இந்த ஒத்துழையாமை இயக்கம் வழிவகுத்தது. இதனை ‘‘முதன் முறையாகக் காங்கிரஸ் காந்தியின் தலைமையில் இந்திய சுதந்திரத்திற்காக நாடு தழுவிய தீவிரப் போராட்டத்தில் ஈடுபட்டது. நாட்டின் எட்டு திக்குகளும் ஒரே குறிக்கோளை, ஒரே கோஷத்தைஎதிரொலித்தது. சட்டமன்ற, நீதிமன்ற, கல்விக்கூட, விதேசிப் பொருள் புறக்கணிப்பு, சுதேசி நிர்மாணத்திட்டம் போன்ற தெளிவான திட்டங்களின் அடிப்படையில் போராட்டம் நடத்தப்பெற்றது.’’[26]என்னும் கூற்று நன்கு விளக்கும்

இவ் ஒத்துழையாமை நிகழ்வு தேசபக்தன் கந்தன், பெண், சர்க்கா, இருபது வருஷங்கள், பாதையில் பதிந்த அடிகள், இருவிழிகள் போன்ற ஆறு புதினங்களில் நேரிடையாகவும், மறைமுகமாகவும் சுட்டப்பட்டுள்ளன.

**தேசபக்தன் கந்தன்**

ஒத்துழையாமை இயக்கத்தை மையமாகக் கொண்ட இப்புதினத்தில் கந்தன்,ராஜேஸ்வரி, ரங்கன் மூவரும் லண்டன்சென்று பயின்று பெற்ற ஐ.சி.எஸ் பட்டத்தைத் துறந்து தாய் நாட்டிற்கு வந்து விடுதலைப் போராட்டத்தில் ஈடுபடுகின்றனர். கந்தன் நல்லானிடம் ‘‘பாரதநாட்டில் நவீனக் கிளர்ச்சியின் ஓசைஎங்கும் நிரம்பி இருக்கின்றது. அது உன் காதுக்கு இன்னமும் எட்டவில்லையா’’[27] என்று கூறுவது ஒத்துழையாமை இயக்கத்தில் மக்கள் ஈடுபட்டமைப்பற்றி அறிய உதவும். சொக்கலிங்கமுதலியார் தரங்கம்பாடியில் நடைபெறும் ஒத்துழையாமை இயக்கக்கூட்டத்தை அரசின் தடை உத்தரவையும் மீறி நடத்தவேண்டும் என்கிறார். ரங்கனும்,ராஜேஸ்வரியும்

தஞ்சை ஜில்லா முழுவதும் ஒத்துழையாமை இயக்கம் பற்றிப் பிரச்சாரம் செய்கின்றனர். இதனால் ஒத்துழையாமை இயக்கம் காட்டுத்தீபோல் பரவலாயிற்று மேலும் எளிய மக்களையும் படிப்பறிவற்ற பாமரர்களையும் ஒத்துழையாமை இயக்கம் பற்றி அறியச் செய்தது என்னும் கூற்று தேசபக்தன் கந்தனில் இடம்பெற்றுள்ள ஒத்துழையாமை இயக்கம் குறித்த செய்தியாக உள்ளது.

**பெண்**

இப்புதினத்தில் கதைத் தலைவன் சந்தானம் தான் பெற்ற ஐ.ஏ.எஸ் பட்டத்தைத் துறந்து,ஒத்துழையாமை இயக்கப் போராடத்தில் பங்கு பெறுதல், ஊர் ஊராகச் சென்று மக்களை விடுதலைப் போராட்டத்தில் ஈடுபடுத்த முற்படுதல், அதற்காகப் பெற்ற தண்டனைகள் போன்ற ஒத்துழையாமை நிகழ்வுகள் சுட்டப்பட்டுள்ளன.

**சர்க்கா**

இப்புதினத்தில் நாட்டில் ஒத்துழையாமை இயக்கம் பரவிய நிலையில் வழக்கறிஞராகத் தொழில் புரியும் சுந்தரராஜன் என்பவர் தமது தொழிலை விடுத்து தமது கிராமத்திற்குச் சென்று அதை முன்னேற்றப் பாதைக்குக் கொண்டு செல்லும் இடத்து ஒத்துழையாமை இயக்கம் பற்றிய செய்தி சுட்டப்பட்டுள்ளது.

**இருபது வருஷங்கள்**

இதில் கதைத்தலைவன் கேசவராவ் தாம் பெற்ற பதவிகளைத் துறந்தமை, மற்றும் அவர் ஊரைச்சுற்றியுள்ள கிராமமக்கள் ஒத்துழையாமை இயக்கத்தில் பங்கெடுத்தமை, அதற்காகச் சிறை சென்றமை போன்ற விடுதலைப் போராட்ட நிகழ்வுகள் சுட்டப்பெற்றுள்ளன.

**பாதையில் பதிந்த அடிகள்**

இப்புதினத்தில் கதைத்தலைவி மணியின் உறவுக்காரர் விஸ்வநாதன் என்பவர் ஒத்துழையாமை இயக்கத்தில் பங்குகொண்டு சிறைசென்றமை இடம் பெற்றுள்ளது.

**இருவிழிகள்**

இப்புதினத்தில் கதைத்தலைவன் சிவஞானம் பள்ளியில் படித்துக் கொண்டிருக்கும் போதே ஒத்துழையாமைப் போராட்டத்தில் ஈடுபட்டு அதன் காரணமாகச் சிறைப்படும் நிகழ்வு சுட்டப்பட்டுள்ளது. பெரியவர்கள், இளைஞர்கள் மட்டுமின்றிச் சிறுவர்களும் ஒத்துழையாமைப் போராட்டத்தில் பங்கு பெற்றனர்என்ற செய்தியை இப்புதினம் குறிப்பிடுகிறது.

**6. சட்டமறுப்பு இயக்கம்**

1929-இல் லாகூர் காங்கிரஸ் மாநாடு பூரண சுயராஜ்யம் அல்லது முழு சுதந்திரம் குறித்த தீர்மானத்தை நிறைவேற்றியது. அரசு இதை ஏற்கமறுத்தது. சைமன் குழுவின் அறிக்கையில் இந்தியர் எவரும் இடம் பெறவில்லை டொமினியன் (தன்னாட்சி) அந்தஸ்து பற்றி எந்தக் குறிப்பும் இல்லாததால் சட்டமறுப்பு இயக்கம் நடத்த முடிவாயிற்று. 1930-ஆம் ஆண்டு ஜனவரி 26-ஆம் நாள் இந்திய சுதந்திர தினமாக விடுதலைப் போராட்ட வீரர்களால் அனுசரிக்கப்பட்டது.

சட்டமறுப்பு இயக்கத்தின் கொள்கைகளாக “உப்புச் சட்டத்தை மீறல், அரசாங்கப்பணிகளில் இருந்து விலகல்,கல்விக் கூடங்களில் இருந்து விலகல், மதுக்கடை மறியல், விதேசி துணிப் புறக்கணிப்பு, கதர்பிரச்சாரம், வரி கொடாமை போன்றவை அமைந்தன.”[28]

1929-ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் 6-ஆம் நாள் உப்புச் சட்டத்தை மீறியதன் மூலம் சட்டமறுப்பு இயக்கத்தை முறைப்படி துவங்கிவைத்தார்

காந்தியடிகள். சத்தியாக்கிரகம் என்பதற்கு உண்மையைக் கடைப்பிடி என்பது பொருளாகும். இதனை ஆன்மசக்தி என்று கூறலாம். அகிம்சையை அடிப்படையாகக் கொண்டு சத்தியத்தைக் காப்பாற்றஅதிகாரக் கொடுமைகளை எதிர்த்து நிற்கும் போராட்ட நெறிமுறையாகிய இச்சத்தியாக்கிரகம் மணிக்கொடி, இருவிழிகள் என்னும் இரு புதினங்களில் சுட்டப்பட்டுள்ளன.

**மணிக்கொடி**

1928-ஆம் ஆண்டு பிப்ரவரி 3-ஆம் நாள் காந்தியடிகளின் ஆணைப்படி சைமன் கமிசனை எதிர்த்து நாடு தழுவிய கடையடைப்பு நடந்தது. மார்ச் இறுதியில் திரும்பிப்போன சைமன் கமிசன் மீண்டும் அக்டோபர் மாதத்தில் திரும்பி வந்தது. “அப்பொழுது கடையடைப்பு, வேலை நிறுத்தம், கருப்புக்கொடி காட்டல் ஆகியவை சென்றதடவையை விடவும் மும்முரமாக நடந்தது”[29]

இதில் ஈடுபட்ட லாலாலசபதிராய் போலீஸ்காரர்களின் மிருகத்தனமான அடியினால் இறந்துவிட்டார் என்பன போன்ற நிகழ்வுகள் இப்புதினத்தில் இடம்பெற்றுள்ளன.

**இருவிழிகள்**

இப்புதினத்தில் சைமன் கமிஷனை எதிர்த்து நிகழ்த்திய போராட்டத்தில் பலர் கைது செய்யப்பட்டு சிறை சென்ற நிகழ்வு சுட்டப்பட்டுள்ளது.

**7. உப்புசத்தியாக்கிரகம்**

1930-இல் ஆங்கில அரசாங்கம் உப்பின் மீது வரி விதித்தது இதனால் உப்பின் விலை அதிகமாக இருந்தது. உப்பு விற்பனை பிரிட்டிஷ்காரரிடம் இருந்தது. இதனை எதிர்த்து எழுந்ததே உப்புசத்தியாக்கிரகம் ஆகும். இதனைப் பற்றி“ஏழை, பணக்காரர் என்ற வேறுபாடின்றி எல்லா மக்களும் பயன்படுத்தும் ஒரு பொருள் உப்பு அதன் மீதும் அரசாங்கம் வரி விதித்து

ஏழை மக்களைச் சுரண்டியது. உப்பு வரியை நீக்குவதைக் குறிக்கோளாகக் கொண்ட உப்புசத்தியாக் கிரகத்தைப் பற்றி காந்தியடிகள் வைஸ்ராய்க்கு விரிவாகக் கடிதம் எழுதினார். இது உலகம் கண்டிராத உண்மைக்காட்சிச் சரித்திரம். இதுவரை சந்தித்திராத சத்தியப் புறப்பாடு"[31] என்பர் தங்கையா."ஏழை மக்களை அதிகம் பாதித்த உப்பு வரியை எதிர்ப்பதற்காக உப்பு சத்தியாக்கிரகத்தைக் காந்தியடிகள் ஏற்படுத்தினார். மார்ச் மாதம் காந்தியடிகள் ஆரம்பித்த தண்டியாத்திரையானது நாடுமுழுவதும் உப்பு வரியை எதிர்க்கும் எண்ணத்தை ஏற்படுத்தியது. காந்தி ஆரம்பித்த தண்டியாத்திரை நாடுமுழுவதும் அரசை எதிர்க்கும் மக்கள் இயக்கமாக மாறியது"[31] என்னும் கூற்று இங்கு சுட்டத்தக்கது.

**தண்டியாத்திரை**

அறப்போராட்டங்கள் வெற்றி அளிப்பது போல் வன்முறைகள் பயனளிக்கா என்பது காந்தியடிகளின் தீர்க்கமான முடிவு ஆகும். அதனால் தான் உப்பு சத்தியாக்கிரகத்தை மிகவும் வலிமை வாய்ந்த அறப்போர் ஆயுதமாகக் கருதினார். 1930-ஆம் ஆண்டு மார்ச்சு மாதம் 12-ஆம் நாள் தேர்ந்தெடுக்கப்பட்ட ஆசிரமச் சீடர்களுடன் சபர்மதிலிருந்து 385 கி.மீ தண்டிக்குப் பாதயாத்திரையாகப் புறப்பட்டார். "சபர்மதி ஆசிரமத்திலிருந்து வெளியே கால் வைத்ததும் மகாத்மா காந்தி வெற்றியின்றித் திரும்பமாட்டேன் இல்லையேல் என் சவம் கடலில் மிதக்கும் என உணர்ச்சி மயமாகப் பேசினார். கூட்டம் பாபுஜீக்கு ஜெயம் ஹோகயா (காந்திஜீக்குவெற்றி உண்டாவதாக)"[32] எனக் கோசமிட்டது என்று விடுதலைத் தழும்புகள் தண்டியாத்திரை பற்றிச் சுட்டுகிறது. 24 நாட்கள் நடைப்பயணத்திற்குப் பின்னர் ஏப்ரல் 5-ஆம் நாள் காலை தண்டிக்கரையை காந்தியடிகள் அடைந்தார். காலை பிரார்த்தனைக்குப் பிறகு உப்பு அள்ளி உப்புச் சட்டத்தை மீறி

சத்தியாக்கிரகத்தைத் துவங்கினார். மேலும் “காந்தியடிகள் விடுத்த அறிக்கையில் 1930 ஏப்ரல் 6 முதல் 13 நாள் வரையுள்ள காலத்தை தேசிய வாரமாகக் கொண்டாடவேண்டும் என்றும், அப்போது உப்பு சத்தியாக்கிரகத்தை நாடுமுழுவதும் தீவிரமாக மேற்கொள்ளவேண்டும் என்றும் அறிவித்தார்.”[33]

**வேதாரண்ய உப்புசத்தியாக்கிரகம்**

தமிழ்நாட்டில் 1930-ஆம் ஆண்டு ஏப்ரல் 30-இல் இராஜாஜி தலைமையில் வேதாரண்யம் என்னும் இடத்தில் உப்புசத்தியாக்கிரகம் நடைபெற்றது. இராஜாஜி திருச்சியிலிருந்து பதினாறு நாட்கள் நடந்து ஏப்ரல் இருபத்தொன்பதாம் நாள் வேதாரண்யம் அடைந்து உப்பு காய்ச்சும் செயலை மேற்கொண்டார். இதனால் அவர் கைது செய்யப்பட்டு ஒன்பது மாதச் சிறைத் தண்டனை பெற்றார். இந்நிகழ்வு சர்க்கா, கண்திறக்குமா, தியாகத்தழும்பு, ஆத்மாவின் ராகங்கள், வானவீதி, மகுடபதி, மணிக்கொடி, இருவிழிகள் என்ற எட்டு புதினங்களில் இடம்பெற்றுள்ளன.

**சர்க்கா**

இப்புதினத்தில் சர்க்கா எனும் பத்திரிகையில் உப்புசத்தியாக்கிரகம் பற்றி மக்களுக்குத் தெரியப்படுத்துவதற்காக மேற்கொள்ளப்பட்ட முயற்சி சுட்டப் பெற்றுள்ளது. “போராட்டத்தை ஒவ்வொருவரும் மேற்கொள்ளவேண்டும் என்று வெற்றிமுரசு கொட்டியது சர்க்கா”[34] என்னும்பகுதி இதனை நன்கு விளக்கும். மேலும் “ஆவேசம் மிகுந்த தலையங்கங்களும், அதில் நிரம்பியிருந்த தேசிய உணர்ச்சியும், தேசபக்தியும்,தேசசேவையும், புரட்சிகரமான மனப்போக்கும் அரசாங்கத்தாரை கதிகலங்கவைத்தன”[35] மக்களை உப்புசத்யாக்கிரகப் போராட்டத்தில் ஈடுபடுத்திய இராமமூர்த்தியை

ஆங்கில அரசு கைது செய்தது என்பது போன்ற செய்திகள் இப்புதினத்தில் இடம்பெற்றுள்ளன.

**கண்திறக்குமா**

இப்புதினத்தில் கதாநாயகன் செல்வன் உப்புசத்தியாக்கிரகத்தில் பங்குகொண்டு கைது செய்யப்பெற்று வேலூர் சிறையில் வைக்கப்பட்ட செய்தி சுட்டப்பட்டுள்ளது.

**தியாகத்தழும்பு**

இப்புதினத்தில் அரசின் தடை உத்தரவை மீறிச் சென்னையில் உப்புசத்தியாக்கிரகப் போராட்டம் நடந்த போது துர்க்காபாய் என்ற இளம் பெண் அடிபட்டு தரையில் விழும் வரை மூவர்ணக் கொடியைப் பிடித்துக்கொண்டிருந்த செயல் சுட்டப்பட்டுள்ளது.

**ஆத்மாவின் ராகங்கள்**

இப்புதினத்தில்கல்லூரியில் பயிலும் மாணவர்கள் காந்தியடிகளின் அறைகூவலை ஏற்று கல்லூரியிலிருந்து வெளியேறி உப்புசத்தியாக்கிரகத்தில் ஈடுபட்டுச் சிறை சென்ற நிகழ்வு இடம் பெற்றுள்ளது.

**வானவீதி**

மக்கள் உப்புசத்தியாக்கிரகத்தில் ஈடுபட்டு சென்னைக் கடற்கரையில் உப்பு காய்ச்சியதற்காக கடுங்காவல் தண்டனை பெற்ற செய்தி இப்புதினத்தில் சுட்டப் பெற்றுள்ளது.

**மகுடபதி**

இப்புதினத்தின் கதாநாயகன் மகுடபதி உப்புசத்தியாக்கிரகம் ஆரம்பித்தவுடன் கல்லூரிப் படிப்பை விட்டு விட்டு வந்து போராட்டத்தில் ஈடுபட்டதற்காக ஆறு மாத கடுங்காவல் தண்டனை பெறுகிறான் என்பதும் மீண்டும் விடுதலை ஆனதும் சுதந்திர போராட்டத்தில் ஈடுபட விரும்பினான் என்றும் உப்பு சத்தியாக்கிரகம் குறித்த நிகழ்வு சுட்டப்பட்டுள்ளது.

**மணிக்கொடி**

நாடெங்கும் கடலோரப்பகுதிகளில் உப்பெடுக்கவேண்டும் என்றும், அது வெள்ளை அரசின் உப்பு வரிக்கு எதிரான அறப்போர் ஆகும்என்ற காந்தியின் கூற்றை ஏற்ற மக்கள் ‘‘நம் நாட்டுக் கடற்கரையிலிருந்து உப்பு எடுக்கும் உரிமை நமக்கு உண்டு, அதற்கு நாமெதற்கு வெள்ளைக்காரனுக்கு வரி செலுத்தவேண்டும் என்னும் எளிமையான வாதம் பாமர மக்கள் வாயிலிருந்தும் வந்தது.’’[36] என்று காந்தியடிகள் முதல் கடைத் தொண்டன் வரை அனைவரும் உப்பு சத்தியாக்கிரகப் போராட்டத்தில் ஈடுபட்ட செய்தி சுட்டப் பெற்றுள்ளது.

**இருவிழிகள்**

இப்புதினத்தில் மக்கள் இராஜாஜியின் தலைமையில் வேதாரண்யம் சென்று உப்பெடுக்க முயலும் போது போலீஸாரால் தாக்கப்பட்டு சிறைப்படும்செய்தி இடம் பெற்றுள்ளது.

**8. கள்ளுக்கடை மறியல் (அல்லது) மதுவிலக்கு**

**தியாகபூமி**

இப்புதினத்தில் சம்புசாஸ்திரி என்பவர் ஊர் ஊராகச் சென்று மதுபானத்தினால் ஏற்படும் கெடுதிகளை விவரித்து மதுவிலக்குப் பிரச்சாரம் செய்தார் என்ற கள்ளுக்கடை மறியல் குறித்த நிகழ்வு சுட்டப்பட்டுள்ளது.

**அன்பு நிலையம் (அ) வாழும் வகை**

இப்புதினத்தில் காந்தியடிகளே நேரிடையாக ‘‘கள்குடிப்பதை விடுங்கள் அது உங்களது அறிவைக்கெடுக்கும், வீட்டைப் பாழாக்கும்; கள் உண்பதை நிறுத்தினால் வீட்டில் யாருக்கும் கஞ்சிக்குப் பஞ்சமில்லை’’[37] என்று கூறுவது போன்று மதுவிலக்கு குறித்த செய்தி அமைந்துள்ளது. கதைத் தலைவன் சிங்காரம் என்பவன்மக்களிடம் பேசும் போது கள்குடியை நிறுத்தவேண்டும்

என்றும் கள் இறக்குவோர் அதை விடுத்துப் பிற தொழில்கள் செய்ய வேண்டும் என்று கூறிய செய்தி சுட்டப்பட்டுள்ளது.

**தேசபக்தன் கந்தன்**

இப்புதினத்தில் கதைத் தலைவன் கள்குடிக்காதீர்கள் என்று மதுவிலக்குப் பிரச்சாரம் செய்கிறான். இதனை“இந்தக் கள்ளுக்குடியை ஒழித்துப் பாவத்தைப் போக்கி ஒழுங்காக வேலை செய்து காலங்கழிக்கச் சொல்கிறார்கந்தன்.”[37]என்று கோவிந்தன் நல்லானிடம் கூறுவதன் வழ அறிய இயலும்.

**பெண்**

இப்புதினத்தில் சுப்புரத்தினம் என்பவன் மதுவிலக்குப் பிரச்சாரம் செய்யும் போது அவனது தோள் வெட்டப்படும் செய்தியும்,சில நாட்கள் கழித்து அந்த ஊரில் உள்ள கள்ளுக்கடைகளை பகிஷ்கரிப்பது தான் தங்கள் நோக்கம் என்று இராமசாமி மீண்டும் கள்குடியை எதிர்த்துப் பிரச்சாரம் செய்யும் போது, அவன் கல்லடி பெறுகிறான் என்னும் செய்தியும் சுட்டப்பட்டுள்ளது. கல்லடிபட்டும், கைகளை இழந்த போதும் தாம் கொண்ட கொள்கையிலிருந்து மாறாதவர்களாக மக்கள் நாட்டு விடுதலையில் ஈடுபட்டதை இப்புதினம் எடுத்துரைக்கின்றது.

**இருபது வருஷங்கள்**

ஓத்துழையாமை இயக்கத்தை ஒட்டிக் கள்ளுக்கடை மறியலைத் தொண்டர்கள் செய்கின்றபோது தன்னை “அடிக்க வந்தவர்களை நோக்கி ஒரு தொண்டன் அண்ணே! நீ மனசார என்னை அடிப்பாயா ? மாட்டவே மாட்டே, உன் வயித்திலே இருக்கிற கள்ளுதான் அடிக்குது நீ இல்லை; கள்ளு இருக்குதே அது ரொம்பப் பொல்லாதது. இனிமேல் குடிக்காதே என்றேன். அப்போது தான் தொடையில் இந்த அடி படார் என்று விழுந்தது.”[39] என்று

உரைப்பதன் மூலம் கள்ளுக்கடை மறியல் பற்றிய செய்தி இப்புதினத்தில் சுட்டப்பட்டுள்ளது.

**தியாகத்தழும்பு**

இதில் கதைத்தலைவன் தியாகராஜன் வெளியில் தலை காட்டாமல் பதுங்கியிருந்த தேசத் தொண்டர்களை வலுவில் சென்று அழைத்துக் கள்ளுக்கடை மறியலில் ஈடுபடச் செய்தான், தேசத் தலைவர்களோடு சேர்ந்து கொண்டு நகரெங்கும் மதுவிலக்குப் பிரச்சாரம் செய்தான் என்பன போன்றவை விடுதலைப் போராட்ட நிகழ்வுகளாக இடம் பெற்றுள்ளன.

**ஆத்மாவின் ராகங்கள்**

செல்லூரில் முத்திருளப்பனும், குருசாமியும் கள்ளுக்கடை மறியல் செய்ததால் கைதாகின்றனர் என்ற செய்தி இப்புதினத்தில் சுட்டப்பட்டுள்ளது.

**கல்லுக்குள் ஈரம்**

இதில் பெண் மாந்தர்கள் கள்ளுக்கடை மறியலில் ஈடுபட்ட செய்தி பதிவு செய்யப்பட்டுள்ளது.கூட்டத்தையும ஊர்வலத்தையும் போலீஸ் தடியடியால் கலைக்க முயன்றது. மக்கள் போலீஸார் மீது கற்களை வீசுகின்றனர். கள்ளுக்கடை கூரையெல்லாம் பஞ்சாகப் பறந்தது. போலீஸ் கண்மண் தெரியாமல் அடித்ததால் திரிவேணிக்கு தலையில் அடிபடுகிறது என்ற செய்தி சுட்டப்பட்டுள்ளது.

**மண்ணில் தெரியுது வானம்**

இப்புதினத்தில் சங்கரி அம்மாள் என்பவர் அரசாங்கம் இட்ட 144 தடை உத்தரவை மீறி ஊர்வலம் வந்து கள்ளுக்கடை மறியல் செய்கின்றார். போலீஸ் குண்டாந்தடியால் தாக்கிச்சங்கரியம்மாளை கைது செய்கிறது. இதனைப் பார்க்க வந்த கதைத் தலைவன் நடராஜனுக்கும் அடி கிட்டுகிறது.சுதந்திரப் போராட்டத்தில் இனி ஈடுபடமாட்டேன் என்று கடிதம்

தந்தால் நடராஜனைக் கைது செய்யாமல் விட்டு விடுவதாகப் போலீசார் கூற அதை நடராஜன் மறுக்கும் நிகழ்வு இப்புதினத்தில் சுட்டப்பட்டுள்ளது.

**பாதையில் பதிந்த அடிகள்**

காந்தியடிகளைச் சந்தித்த பின் கதாநாயகி மணி தெருதோறும், ஊர்தோறும் சென்று மதுவிலக்கு குறித்தும், மதுவினால் ஏற்படும் விளைவுகள் பற்றியும் எடுத்துக்கூறி பிரச்சாரம் செய்வது இப்புதினத்தில் இடம் பெற்றுள்ள விடுதலைப் போராட்ட நிகழ்வாகும்.

**மகுடபதி**

இப்புதினத்தில் கோயம்புத்தூரில் நடைபெற்ற மதுவிலக்குப் போராட்டம் பற்றியும்,போலீஸ் அதிகாரிகள் அடக்குமுறையைக் கையாண்டதுடன் வேறுபாடு இன்றி அனைவரையும் அடித்து நொறுக்கியமையும்,மகுடபதி தன் சொந்த ஊரில் மதுவிலக்குப் பிரச்சாரம் செய்யத் தொடங்கியமையும் விடுதலைப் போராட்ட நிகழ்வாகச் சுட்டப்பட்டுள்ளது.

**மணிக்கொடி**

இப்புதினத்தில் 1929 ஏப்ரல் 6 முதல் 13-ஆம் நாள் வரை தேசிய வாரமாகக் கொண்டாட வேண்டும். அப்பொழுது கள்ளுகடை முன்பு மறியல் செய்ய வேண்டும். என்ற காந்தியின் கூற்று சுட்டப்பட்டுள்ளது. லாகூர் மாநாட்டுப் பந்தலிலேயே மதுவிக்கு மாநாடும் நடத்தப்பட்டது என்ற அறிய செய்தியும் இடம்பெற்றுள்ளது.

**இருவிழிகள்**

இப்புதினத்தில் சிவஞானம், இஸ்மாயில் என்ற இருவர் கள்ளுக்கடை முன்பு மறியல் செய்து கைதாகின்றனர். போலீஸார் கொடுத்த அடியால் இஸ்மாயில் இறக்கிறார் என்ற செய்தி சுட்டப்பட்டுள்ளது.

## 9. தனிநபர் சத்தியாக்கிரகம்

இரண்டாம் உலகப் போரின் போது இந்தியர்களின் ஆதரவைப் பெறுவதற்காக பிரட்டிஷ் அரசாங்கம் 1940-ஆம் ஆண்டு ஆகஸ்ட் 8-ஆம் நாள் ஆகஸ்ட் சலுகையை அறிவித்தது. போருக்குப் பின் புதிய அரசியல் அமைப்பைப் பெறுவதற்காக இந்தியப் பிரதிநிதிகளைக் கொண்ட ஒரு அமைப்பு ஏற்படுத்தப்படும், என்று அறிவிக்கப்பட்டது. காந்தியடிகள் இதனை ஏற்க மறுத்துத் தனிநபர் சத்தியாக்கிரகத்தைத் தொடங்க முடிவு செய்தார். “இந்தியரின் சம்மதம் பெறாமல் இந்தியாவைப் போரில் ஈடுபடுத்தியதைக் கண்டிப்பதற்காக காந்தி துவக்கிய அடையாளப் போராட்டமே தனிநபர் சத்தியாக்கிரகம் ஆகும். தனிநபர் சத்தியாக் கிரகம் மக்களின் மனதை இறுகச் செய்தது அதே சமயம் அரசாங்கத்தின் மனதை இளகச் செய்தது”[340]என்பார் வெங்கடேசன்.

இந்தியர்களின் விடுதலை உணர்வை உலகுக்குக்காட்டவும், பேச்சுரிமையை நிலைநாட்டவும் தனிநபர்களைச் சத்தியாக்கிரகத்தில் ஈடுபடுத்துவதே தனிநபர் சத்தியாக்கிரகம் ஆகும். வன்முறையற்ற குறைந்த அளவில் ஒரு அடையாளமாக நடத்தப்பட்ட இயக்கம் தனிநபர் சத்தியாக்கிரகம் ஆகும். இது 15 மாதங்கள் நடந்தது சத்தியாக்கிரகத்தில் ஈடுபடுபவரை காந்தியடிகளே தேர்வு செய்வார். முதலில் வினோபாபாவே சத்தியாக்கிரகத்தைத் தொடங்கினார். அவர் கைது செய்யப்பட்டு மூன்று மாத சிறைத் தண்டனை பெற்றார். அடுத்த தனிநபர் சத்தியாக்கிரகி ஜவஹர்லால் நேரு ஆவார். அவர் நான்கு ஆண்டுகள் சிறைத் தண்டனை பெற்றார். வேறு எந்த சத்தியாக்கிரகிக்கும் இவ்வளவு நீண்டகால சிறைத் தண்டனை கொடுக்கப்படவில்லை. பின்னர் வல்லபாய் படேலும்,சுபாஷ் சந்திர போசும் கைதானார்கள். 1941-ஆம் ஆண்டு இறுதிவரை நடைபெற்ற இந்த

சத்தியாக்கிரகத்தில் கலந்து கொண்ட முப்பதாயிரம் பேர் கைது செய்யப்பட்டனர். ‘‘தலைவர்கள் கைது செய்யப்பட்டால் கடை அடைப்போ, வேலை நிறுத்தமோ,வேறுவகையான ஆர்பாட்டங்களோ செய்யக்கூடாது என்று காந்தியடிகள் கட்டளையிட்டிருந்தார். இது நாட்டு மக்களால்கண்டிப்பாகக் கடைப்பிடிக்கப்பட்டது. அரசு தனிநபர் சத்தியாக்கிரகச் செய்திகளைப் பிரசுரிக்கக்கூடாது என்று தடைவிதித்தது மிக்க கொடுமையாகும்’’[41] என்று தனிநபர் சத்தியாக்கிரகம் பற்றி ம.பொ.சிவஞானம் உரைப்பர். இச்சத்தியாக்கிரகம் பற்றிய செய்தி பல்வேறு புதினங்களில் இடம் பெற்றுள்ளது.

**தியாகபூமி**

சாவித்திரி என்ற உமாதேவியும், அவள் கணவன் ஸ்ரீதரனும் தனிநபர் சத்தியாக்கிரகத்தில் பங்குகொண்டு சிறை சென்றமை தியாகபூமியில் இடம் பெறும் விடுதலைப் போராட்ட நிகழ்வாகும்.

**தியாகத்தழும்பு**

இப்புதினத்தின் கதைத்தலைவன் தியாகராஜன் அண்ணல் காந்தியடிகளின் ஆணைப்படி தனிநபர் சத்தியாக்கிரகத்தில் ஈடுபட்டு உரையாற்றிக் கொண்டிருக்கும் போது கைது செய்யப்பட்டு ஒரு வருட கடுங்காவல் தண்டனை பெற்றான் என்பது தனிநபர் சத்தியாக்கிரகம் குறித்த நிகழ்வாக அமைந்துள்ளது.

**ஆத்மாவின் ராகங்கள்**

குருசாமி தனிநபர் சத்தியாகிரகத்தில் பங்கு பெற்று கோர்ட்டுக்கு முன் மறியல்செய்து கைதாகி சிறை செல்கிறார். மறுநாள் இராஜாராமனும், முத்திருளப்பனும் மறியல் செய்து கைதாகின்றனர் என்ற செய்தி இப்புதினத்தில் பதிவு செய்யப்பட்டுள்ளது.

சத்தியாக்கிரகத்தில் ஈடுபட்ட பண்ணனைப் போலீசார் கைது செய்து ஆறு மாத தண்டனை அளித்துத் திருச்சி சிறையில் வைத்தனர் என்பது இப் புதினம் காட்டும் நிகழ்வாகும். மணிக்கொடி, இருவிழி ஆகிய புதினங்களில் சத்தியாக்கிரகம் பற்றிய செய்தி குறிப்பாகச் சுட்டப்பட்டுள்ளது.

### 10. வெள்ளையனே வெளியேறு இயக்கம் அல்லது ஆகஸ்ட் புரட்சி

1942-ஆம் ஆண்டு ஆகஸ்ட் மாதம் 8-ஆம் நாள் அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி கூடியது பண்டித ஜவஹர்லால் நேரு அக்கூட்டத்தில் ‘‘வெள்ளையனே வெளியேறு’’ என்ற தீர்மானத்தை முன்மொழிந்தார். அதன் பின் காந்தியடிகள் ஆற்றிய நான் உங்களுக்குக் கொடுக்கும் தாரகமந்திரம் ‘‘செய் அல்லது செத்து மடி’’ ‘**(Do or Die)**’ என்பதாகும்.அதாவது ஒன்று நாம் இந்தியாவை விடுவிக்க வேண்டும்; அல்லது அந்த முயற்சியில் உயிர் துறக்க வேண்டும் மீண்டும் அடிமைநிலை நீட்டிப்பதைப் பார்ப்பதற்கு நாம் உயிர் வாழக்கூடாது என்பதே இதன் பொருளாகும். இதைப் பொருளாகக் கொண்டு ‘‘அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி ஆங்கிலேயர்கள் உடனே இந்தியாவிற்கு சுதந்திரத்தை அளித்துவிட்டு இந்தியாவைவிட்டு வெளியேற வேண்டும், என்ற கருத்துடைய வெள்ளையனே வெளியேறு என்ற தீர்மானத்தை நிறைவேற்றியது இதனால் 1942 ஆகஸ்ட் ஒன்பதில் காங்கிரஸின் முக்கிய தலைவர்களை ஆங்கில அரசாங்கம் கைது செய்தது.’’[42] அரசின் இந்த திட்டமிட்ட நடவடிக்கையால் இந்திய மக்கள் இயக்கத்தை வழி நடத்தத் தலைவர்களின்றி விடப்பட்டனர். மகாத்மா காந்தி பூனா சிறையில் அடைக்கப்பட்டார். நேரு, அபுல்கலாம் ஆசாத் போன்றவர்கள் அகமது நகர் கோட்டையில் சிறை வைக்கப்பட்டனர் இந்த இயக்கத்தில் ஜெயப்பிரகாஷ் நாராயணன் ஆற்றிய பங்கு சிறப்பானது ஆகும். ‘‘வெள்ளையனே வெளியேறு

இயக்கம் நாடுமுழுவதும் கொந்தளிப்பை உண்டாக்கியது. தெற்கே குமரி தொட்டு வடக்கே இமயம் வரையிலும் மேற்கே குஜராத் தொட்டு கிழக்கே அசாம் வரையிலும் விரிந்து பரந்த தேசத்தில் இவ்வியக்கத்தின் இரத்தம் பீச்சப்படாத இடமில்லை என்று சொல்லும் அளவுக்கு மக்கள் பங்கேற்பு இருந்தது மொத்தத்தில் பால்மணம் மாறாக் குழந்தை முதல் சாவின் விளிம்பில் நிற்கும் கிழம்வரை எல்லோரும் பிரிட்டிஷ் ஆதிக்கத் தாக்குதலை எதிர்கொண்டனர் என்பர்''[43] சு.பொ அகத்தியலிங்கம்.

பெரும் எண்ணிக்கையிலான மாணவர்கள் பள்ளிகளையும், கல்லூரிகளையும் விட்டு வெளியேறி இந்த இயக்கத்தில் பங்கேற்றனர். இளைஞர்கள் பலர் நாட்டுப்பற்றுடன் இதில் பங்கெடுத்துக் கொண்டனர். நகரங்களில் வேலை நிறுத்தங்கள், போராட்டங்கள், பொதுக்கூட்டங்கள் நிகழ்ந்தன. கிராமங்களுக்கும் இந்த இயக்கம் மெல்லப் பரவத்தொடங்கியது அரசாங்கம் அடக்குமுறையை ஈவிரக்கமின்றி அதிகரித்த போது மக்கள் வன்முறைச் செயல்களில் ஈடுபடலாயினர். இந்தியா முழுவதும் வன்முறை கட்டவிழ்த்து விடப்பட்டது. இந்த இயக்கம் இந்திய விடுதலைக்கு நேரடியாக இட்டுச்சென்றது. இந்தியர்களிடையே ஒட்டுமொத்த தியாக மனப்பான்மையையும், வீரத்தையும், உற்சாகத்தையும் தோற்றுவித்தது. ''இது இந்திய விடுதலைக்காக மேற்கொள்ளப்பட்ட இறுதிப் போராட்டமாகும், இது வெகுஜன எழுச்சியாகும், பகிரங்கக்கிளர்ச்சியாகும், அரசாங்கத்தை வன்முறையால் கவிழ்க்கும் முயற்சியாகும். இதில் சமுதாயத்தின் அனைத்துப் பகுதியினரும் கலந்து கொண்டனர். 1857 கிளர்ச்சிக்குப் பின்னர் மேற்கொள்ளப்பட்ட மாபெரும் கொந்தளிப்பே 1942 ஆகஸ்ட் போராட்டமாகும். மக்களிடையே தன்னியல்பாக எழுந்த இக்கிளர்ச்சியின் மூலம் இந்தியாவிடுதலை அடைய தங்களது உயிரையும் அர்ப்பணிக்கத் தாங்கள்

தயார் என்பதை இந்தியர் நிருபித்தனர்”[44] என்று இந்திய விடுதலைப் போராட்ட வரலாறு குறித்துரைப்பர் க.வெங்கடேசன் இந்நிகழ்வை பல புதினங்கள் மிகச் சிறப்பாக வெளிப்படுத்தியுள்ளன.

**மண்ணின் புதல்வர்கள்**

இப்புதினம் ‘வெள்ளையனே வெளியேறு’ இயக்கக் கொள்கையை அடிப்படையாகக் கொண்டு எழுதப்பட்டுள்ளது. மணி, முரளி, பிரபாகர் என்ற மூன்று நண்பர்கள் இணைந்து ‘வெள்ளையனே வெளியேறு’ போராட்டம் நிகழ்த்த முற்படும் போது போலீஸ் அவர்களைக் கைது செய்து கரூருக்கு அழைத்துச் சென்றது என்பது இப்புதினம் காட்டும் நிகழ்வாகும்.

**நெஞ்சின் அலைகள்**

இரங்கூனில் இருக்கும் வாசு என்னும் பாத்திரம், தமிழகத்தில் ஆகஸ்ட் புரட்சியில் ஈடுபட்ட மாணவர்களைஆங்கில அரசு கண்டபடி தாக்குகின்றது என்ற செய்தியைக் கேள்விப்படுவது போன்று ஆகஸ்ட் புரட்சி பற்றிக் குறிப்பிடப்படுகிறது.

**அலை ஓசை**

இதில் வெள்ளையனே வெளியேறு போராட்டம் நடத்தியவர்கள் சிறைப்பட்டமை மற்றும் காந்தியடிகளைச் சிறை செய்ததை பற்றிக் கூட்டத்தில் பேசியதற்காக பட்டாபிராமன் என்பவர் சிறை செய்யப்பட்டமை சுட்டப்பெற்றுள்ளது. மற்றும்“1942-ஆம்வருடத்தில் இருந்து ஆகஸ்ட் 15-ஆம் நாள் இந்திய தேசத்திற்கு முக்கியமான நாளாயிற்று”[45]என்னும் ஆசிரியர் கூற்றும் இப்புதினத்தில் இடம்பெற்றுள்ள விடுதலை போராட்ட நிகழ்வாகும்.

**தியாகத்தழும்பு**

இப்புதினத்தின் கதைத்தலைவன் தியாகராஜன், காங்கிரஸ் தலைவர்களுக்கு வந்த கட்டளைகளை அராசங்கத்திற்குத் தெரியாமல்

இரகசியமாகக் கொண்டு போய் மற்ற பகுதிகளில் உள்ள காங்கிரஸ் பிரமுகர்களுக்குக்கொடுத்து வருகிறான்.இதனை அறிந்த ஒருவன் காட்டிக் கொடுக்க போலீஸ் தியாகராஜனைக் கைது செய்கிறது. மக்கள் பலர் ஒன்று சேர்ந்து அவர் இருந்த சிறையை உடைத்து கொண்டு தியாகராஜனைத் தங்களுடன் வருமாறு கூற தியாகராஜன் அதனை மறுக்கிறான் என்பதன் வழி தலைவர்களின் கருத்துக்களை மக்களிடம் கொண்டு சேர்க்கும் பணி செய்ததும், அதற்காகத் தண்டனை பெற்றதும் இப்புதினத்தில் இடம் பெற்றுள்ள நிகழ்வாகும்.

**புதுவெள்ளம்**

இப்புதினத்தில் ‘‘மகாத்மாவின் கடைசிப் போராட்டம் இது. கல்லூரிகளை விட்டு விட்டு நாமும் இப்போராட்டத்தில் குதிப்போம், வெள்ளையரை வெளியேற்றுவோம், அதைச் செய்து முடிப்போம் அல்லது செத்து மடிவோம்’’[46] என்ற மாணவர்களின் கூற்றின்வழி விடுதலைப் போராட்ட உணர்வு வெளிப்படுத்தப்பட்டுள்ளது.

**சோலைமலை இளவரசி**

ஆகஸ்ட் புரட்சிக்காக அச்சடித்த துண்டுப் பிரசுரங்களை விநியோகித்தமை; 144 தடை உத்தரவை மீறிக் கூட்டம் போட்டுப் பேசியமை ஆகிய இரு செய்திகள் இப்புதினத்தில் சுட்டப்பட்டுள்ளன.

**ஆத்மாவின் ராகங்கள்**

இப்புதினத்தின் கதாநாயகன் ஆகஸ்டுப் புரட்சியை நடத்த திட்டங்களைத் தீட்ட, அதனை அறிந்த போலீசார் எந்தவித அறிவிப்பும் இன்றி அவனைச் சிறையில் அடைக்கின்றனர். இதனால் மக்கள் கொதித்து பல வன்முறைகளில் ஈடுபடுகின்றனர்என்று ஆகஸ்டுப் புரட்சி குறிப்பிடப்பட்டுள்ளது.

**கல்லுக்குள் ஈரம்**

இதில் பெண்கள் மூவர்ணக்கொடியைத் தாங்கி முழக்கமிட்டுப் போராட்டம் நிகழ்த்தியமை, துப்பாக்கிச் சூட்டில் இறந்தமை போன்ற செய்திகள் சுட்டப்பட்டுள்ளன.

**வானவீதி**

1942-இல் வெள்ளையனே வெளியேறு இயக்கம் திருவையாற்றில் தீவிரமாக நடைபெறுகிறது. திருவையாற்றில் கலகக்காரர்கள் போலீஸ் நிலையத்தைத் தாக்கித் துப்பாக்கிகளை எல்லாம் எடுத்துக் கொண்டார்கள். தேசத் தொண்டர்கள் கடல் போல் திரண்டனர். போலீஸ் அவர்களைக் குண்டாந்தடியால் தாக்கியது என்பன போன்ற செய்திகள் குறிப்பிடப்பட்டுள்ளன.

**மணிக்கொடி**

‘‘நாடுமுழுவதும் கடையடைப்புகள், ஊர்வலங்கள், பொதுக்கூட்டங்கள், மறியல்கள் போன்றவை நடைபெற்றன. அமைதியான முறையில் நடைபெற்ற போராட்டங்கள் அரசின் அளவற்ற தாக்குதல்களாலும்,துப்பாக்கிச் சூட்டினாலும் கோபமுற்ற மக்களை வன்முறையில் ஈடுபடச் செய்தது. காஷ்மீரிலிருந்து கன்னியாகுமரிவரை நடைபெற்ற இவ்வியக்கம் அரசை அயரவைத்தது’’[47] என்று ஆகஸ்டுப் போராட்டம் அதன் விளைவு போன்றவை மணிக்கொடி புதினத்தில் இடம் பெற்றுள்ள விடுதலைப் போராட்ட நிகழ்வுகளாகும்.

**இருவிழிகள்**

இப்புதினத்தின் கதைத்தலைவன் சிவஞானமும், அவன் மனைவியும், குழந்தையுடன் போராட்டத்தில் பங்குபெறுகின்றனர். ஊர்வலமாகக் கலெக்டர் அலுவலகம் நோக்கிச் செல்கின்றனர். இருவரும் அடிபட்டு மருத்துவமனையில் சேர்க்கப் படுகின்றனர் என்றுகுடும்பம் குடும்பமாக வெள்ளையனே வெளியேறு

இயக்கத்தில் ஈடுபட்டு அதற்காகத் தம் உயிரையே கொடுக்க துணிந்தமை இருவிழிகள் காட்டும் விடுதலைப் போராட்ட நிகழ்வாக அமைந்துள்ளது.

## தொகுப்புரை

- ❖ விடுதலைப் போரின் தொடக்கமாகிய வேலூர்க்கலகம் முதல் இறுதிப் போராட்டமாகிய வெள்ளையனே வெளியேறு வரை நடந்த விடுதலைப் போராட்ட நிகழ்வுகள் கால அடிப்படையில் விளக்கப்பட்டுள்ளன.
- ❖ ஒரே புதினத்தில் எல்லா நிகழ்வுகளும் சுட்டப்பெறவில்லை எனினும் ஒரு சில நிகழ்வுகள் மட்டும் இடம்பெற்ற புதினங்களும் ஆய்வுக்கு எடுத்துக் கொள்ளப்பட்டன.
- ❖ கல்கியின் அலை ஓசை, நா.பார்த்தசாரதியின் ஆத்மாவின் ராகங்கள், ஜோதிர்லதாகிரிஜாவின் மணிக்கொடி, என்.ஏ.வேலாயுதத்தின் இருவிழிகள் போன்ற நான்கு புதினங்களில் விடுதலைப் போராட்டம் தொடங்கியது முதல் இந்தியா விடுதலை பெறுவது வரை உள்ள அனைத்துச் செய்திகளும் இடம் பெற்றுள்ளமை சுட்டத்தக்கது. விடுதலைப் போராட்ட நிகழ்வுகளை கூறுவதற்காவே இப்புதினங்கள் எழுதப்பட்டது போல் காட்சியளிக்கின்றன.
- ❖ விடுதலைப் போராட்ட நிகழ்வுகளில் முதலாவதாகச் சுட்டப்படும் வேலூர்க் கலகம் மணிக்கொடி என்ற ஒரு புதினத்தில் மட்டும் இடம் பெற்றுள்ளது வடமாநிலங்களில் பெருமளவு நிகழ்ந்த சிப்பாய்க்கலக நிகழ்வு அணையாச்சுடர், இரத்தம்ஒரேநிறம், வந்தேமாதரம் ஆகிய மூன்று புதினங்களில் இடம்பெற்றுள்ளன.
- ❖ அந்நியத் துணி எரிப்புப் போராட்டம் என்ற நிகழ்வு தியாகத்தழும்பு, இருவிழிகள் என்ற இரு புதினங்களில் இடம்பெற்றுள்ளமை குறிப்பிடத்தக்கது.
- ❖ கதர் இயக்கம் பற்றிய செய்திகள் மணிவாசகன், தியாகபூமி, அன்புநிலையம் (அ) வாழும் வகை, தேசபக்தன் கந்தன், சர்க்கா, ஆத்மாவின் ராகங்கள்,

மண்ணில் தெரியுது வானம், பாதையில் பதிந்த அடிகள் என்பன போன்ற எட்டுப்புதினங்களில் சுட்டப்பட்டுள்ளன.

- ❖ ரௌலட் சட்ட எதிர்ப்பு மற்றும் ஜாலியன் வாலாபாக் படுகொலை என்ற நிகழ்வுகள் கண்திறக்குமா, மணிக்கொடி, இருவிழிகள், என்ற மூன்று புதினங்களில் உரைக்கப் பெற்றுள்ளன.
- ❖ ஒத்துழையாமை இயக்கம் குறித்த நிகழ்வுகள் தேசபக்தன் கந்தன், பெண், சர்க்கா, இருபது வருஷங்கள், பாதையில் பதிந்த அடிகள், இருவிழிகள் என்ற ஆறு புதினங்களில் சுட்டப்பட்டுள்ளன.
- ❖ சட்டமறுப்பு இயக்கம் குறித்த நிகழ்வுகள் மணிக்கொடி, இருவிழிகள் என்ற இருபுதினங்களில் பேசப்பெற்றுள்ளன.
- ❖ உப்பு சத்தியாக்கிரகம் என்ற நிகழ்வு சர்க்கா, கண்திறக்குமா, தியாகத்தழும்பு, ஆத்மாவின் ராகங்கள், வானவீதி, மணிக்கொடி, இருவிழிகள் என்ற ஏழு புதினங்களில் சுட்டப்பட்டுள்ளன.
- ❖ கள்ளுக்கடை மறியல் மதுவிலக்கு போன்ற நிகழ்வுகள் தியாகபூமி, அன்பு நிலையம் (அ) வாழும் வகை, தேசபக்தன் கந்தன், பெண், இருபது வருஷங்கள், தியாகத்தழும்பு, ஆத்மாவின் ராகங்கள், கல்லுக்குள் ஈரம், மண்ணில் தெரியுது வானம், பாதையில் பதிந்த அடிகள், மகுடபதி, மணிக்கொடி, இருவிழிகள் என்பன போன்ற பதின்மூன்று புதினங்களில் இடம்பெற்றுள்ளன.
- ❖ தனிநபர் சத்தியாக்கிரகம் என்ற நிகழ்வு தியாகபூமி, தியாகத்தழும்பு, ஆத்மாவின் ராகங்கள், வானவீதி, மணிக்கொடி, இருவிழிகள் போன்ற ஆறு புதினங்களில் சுட்டப்பட்டுள்ளன.
- ❖ வெள்ளையனே வெளியேறு அல்லது ஆகஸ்ட் புரட்சி என்ற நிகழ்வு மண்ணின் புதல்வர்கள், நெஞ்சின் அலைகள், அலை ஓசை, தியாகத்தழும்பு,

புதுவெள்ளம், சோலைமலை இளவரசி, ஆத்மாவின் ராகங்கள், கல்லுக்குள் ஈரம், வானவீதி, மணிக்கொடி, இருவிழிகள் என்ற பதினொரு புதினங்களில் இடம்பெற்றுள்ளன.

- மணிவாசகன் என்ற புதினத்தில் கதர் இயக்கம் பற்றிய நிகழ்வு மட்டுமே இடம்பெற்றுள்ளது. இப்புதினம் தோன்றிய காலத்தில் கதர் இயக்கப்போராட்டம் பெருமளவு நடைபெற்றமை இதற்குக் காரணமாகக் கருத இடமுண்டு.
- பெண், இருபது வருஷங்கள் என்ற புதினங்களில் ஒத்துழையாமை இயக்க நிகழ்வுகளும் அணையாச்சுடர், இரத்தம்ஒரேநிறம் ஆகிய புதினங்களில் சிப்பாய்க்கலகமும் இடம்பெற்றுள்ளன.
- மண்ணின் புதல்வர்கள், நெஞ்சின் அலைகள், புதுவெள்ளம், சோலைமலை இளவரசி என்ற நான்கு புதினங்களில் வெள்ளையனே வெளியேறு இயக்க நிகழ்வுகள் உரைக்கப் பெற்றுள.
- கள்ளுக்கடை மறியல் என்ற விடுதலைப் போராட்ட நிகழ்வு பதின்மூன்று புதினங்களில் சுட்டப்படுள்ளது. இந்நிகழ்வை மட்டுமே களனாகக் கொண்டு மகுடபதி புதினம் படைக்கப்பட்டுள்ளது. கள் மக்களின் வாழ்வை நேரடியாகப் பாதித்ததால் மக்களை நேரடியாகப் பாதிக்கும் காரணிகளுக்கு படைப்பாளர்கள் முக்கியத்துவம் கொடுத்துள்ளமை புலனாகும்.
- தியாகபூமி, மதுவிலக்கு, கதர் அணிதல், அந்நியத்துணி மறுப்பு பற்றிய நிகழ்வுகளைக் குறிப்பிடுறது. அன்பு நிலையம் (அ) வாழும் வகை என்ற புதினம் மதுவிலக்கு, கதராடை அணிதல், அந்நியத்துணி மறுப்பு, சுதேசி இயக்கம் பற்றிச் சுட்டுகிறது. புரட்சிப் பெண்ணில் உப்பு சத்தியாக்கிரகம் பற்றிய நிகழ்வு இடம்பெற்றுள்ளது. மண்ணின் புதல்வர்கள், வெள்ளையனே வெளியேறு போராட்டம் நடைபெற்ற காலத்தில் எழுதப்பட்டதால் அந்நிகழ்வை விரிவாக எடுத்துரைக்கிறது. தேசபக்தன் கந்தன் ஒத்துழையாமை இயக்கம்

நாடு முழுவதும் நடந்த காலத்தில் தோன்றியதால் அவ்வியக்கம் பற்றி விரிவாக உரைக்கிறது. பெண் என்ற புதினம் சட்ட மறுப்பு இயக்கம், ஒத்துழையாமை இயக்கம் பற்றிய கருத்துகளைச் சுட்டியுள்ளது.

## சான்றெண் விளக்கம்

1. ஜே.ஆர்.லெட்சுமி, அகிலன், ரசு. நல்ல பெருமாள் புதினங்களில் காந்தீயத்தாக்கம் - ப.42.
2.ம.பொ. சிவஞானம், விடுதலைப் போரில் தமிழகம், ப.71.
3.சு.பொ. அகத்தியலிங்கம், விடுதலைத் தழும்புகள், ப.61.
4.. ஜோதிர்லதா கிரிஜா, மணிக்கொடி, இரண்டாம் தொகுதி, ப.31.
5. A.P. Srinivasa Moorthy, History of Indian Freedom, Movement – 1857 – 1947, PP. 6-7.

(For various reasons., several classes of people in the contry resented the british rule. To put these reasons in brief the british rule had (1) ruined Indian industry and trade (2) deprived the estate owners of the property and reduced the power and presdige of the princes (3) Discriminated against Indian in appointing them to higher posts (4) attempted to reform indias social customs and introduce Engilsh hapits (5) tried to spread Christianity by conversions (6) had degraded the exruling Musilm community in everyway so both Hindus and Musilms were natuluring grievance agianist the british (7) Indian troops

were paid less and given in fevour food, lodging and other facilities and were given harder jobs)

6..சுஜாதா, இரத்தம் ஒரே நிறம், ப.131.

7. மேலது, ப.261.

8.நா.ரா. பண்டரிநாதன், வந்தேமாதரம், ப.46.

9.திருமதி என்.வசந்தா மற்றும் குழுவினர்தமிழ்நாட்டுப்பாடநூல் கழகம், சமூகவியல், பத்தாம் வகுப்பு, ப.79.

10.என்.ஏ.வேலாயுதம், இருவிழிகள், ப.261.

11.பனையப்ப செட்டியார், மணிவாசகன், ப.5.

12.சி.எஸ்.தேவ்நாத், இந்தியாவின் எழுச்சியும், வீழ்ச்சியும், ப.189.

13. பனையப்ப செட்டியார், மணிவாசகன், பக்.5-6.

14. கல்கி, தியாகபூமி, ப.329.

15. சுத்தானந்த பாரதியார், அன்பு நிலையம் (அ) வாழும் வகை, ப.201.

16. பி.எம்.ராஜகோபாலன், சர்க்கா, ப.47.

17. நா. பார்த்தசாரதி, ஆத்மாவின் இராகங்கள், ப.52.

18. சிதம்பர சுப்பிரமணியன், மண்ணில் தெரியுது வானம், ப.61.

19. இராஜம்கிருஷ்ணன், பாதையில் பதிந்த அடிகள், ப.35.

20. சு.பொ. அகத்தியலிங்கம், விடுதலைத் தழும்புகள், ப.181.

21. சி.எஸ்.தேவ்நாத், இந்தியாவின் எழுச்சியும்,வீழ்ச்சியும், பக்.203-204.

22. விந்தன், கண்திறக்குமா, ப.20.

23. ஜோதிர்லதா கிரிஜா, மணிக்கொடி, ப.55.

24. வாழ்வியற் களஞ்சியம், தொகுதி,6 பக்.210-211.

25. கா.அப்பாத்துரை, இந்திய மக்கள் விடுதலை இயக்கவரலாறு, ப.172.

26. க.வெங்கடேசன்,பி.என். சந்திரபிரபு, இந்திய விடுதலைப் போராட்ட வரலாறு, ப.154.

27. கா.சீ. வேங்கடரமணி, தேசபக்தன் கந்தன், ப.34.

28. க. வெங்கடேசன், பி.என். சந்திரபிரபு, இந்திய விடுதலைப் போராட்ட வரலாறு, பக்.170-171.

29. ஜோதிர்லதா கிரிஜா, மணிக்கொடி தொகுதி-2, ப.244.

30.தங்கையா,தமிழ்நாட்டின் விடுதலைப் போர், பக்.74-75.

31.Encyclopaedia of the Indian biography, P.96.

(Gandhi chose the unpopoular salt law which pressed hard on the poorest sections as the first object of defiance. His famous march to Dandi in March 1930 started a country – wide movement to violate the salt law. It was soon enlarged in to a mass movement of open defiance of the government)

32. சு.பொ.அகத்தியலிங்கம், விடுதலைத்தழும்புகள், P.301.

33. A.Srinivasamoorthy, History of freedom movemed 1857-1947, ப.110.

(6th April 1930 to 13th April 1930 was declared by Gandhiji as the national week. During which violating the salt law should be vigorously carried out all over the country)

34. பி.எம். ராஜகோபாலன், சர்க்கா, ப.215.

35. மேலது, ப.215.

36. ஜோதிர்லதாகிரிஜா, மணிக்கொடி தொகுதி-2, ப.253.

37. சுத்தானந்த பாரதியார், அன்புநிலையம் (அ) வாழும்வகை, ப.102.

38. கா.சீ.வேங்கடரமணி, தேசபக்தன் கந்தன், ப.15.

39. எம்.எஸ். கல்யாணசுந்தரம், இருபது வருஷங்கள், ப.21.

40. க.வெங்கடேசன், பி.என். சந்திரபிரபு, இந்திய விடுதலைப் போராட்ட வரலாறு, ப.199.

41. ம.பொ. சிவஞானம், விடுதலைப் போரில் தமிழகம் தொகுதி-2, ப.1070.

42. Encyclopaedia of the Indian biography, பக்.97-98.

( It would be better for india to Do or Die than for her to success to passivits and oral degra dation. The working committee and the A.I.C.C adopted the famous ouit india resolution demanding immediate independence and british with drawad from india. Immediately after all the congress leaders were clapped into prison 9th august 1942.)

43. சு.பொ.அகத்தியலிங்கம், விடுதலைத்தழும்புகள், ப.530.

44. க.வெங்கடேசன், பி.என். சந்திரபிரபு, இந்திய விடுதலைப் போராட்ட வரலாறு, ப.129.

45. கல்கி, அலை ஓசை, ப.735.

46. நா.பார்த்தசாரதி, புதுவெள்ளம், ப.29.

47. ஜோதிர்லதாகிரிஜா, மணிக்கொடி, தொகுதி-2, ப.1070.

## விடுதலை உணர்வூட்டும் பாத்திரங்கள்

ஆண், பெண் மாந்தர்தம் வாழ்க்கையின் உணர்ச்சி நிறைந்த நிகழ்ச்சிகளைச் சித்திரித்துக் காட்டுவது புதினமாகும். இப்புதினத்தில் இடம் பெறும் மாந்தர்கள் பாத்திரங்கள் எனக் குறிக்கப் பெறுகின்றனர். சிறந்த புதின ஆசிரியர் படைத்த பாத்திரங்கள் உயிருள்ளவை போல இயங்கும் தன்மையன. இப்பாத்திரங்கள் உயிருள்ள மக்களைப் போல படிப்பவர் உள்ளத்திலே நிலைபெறக் கூடியவர்கள். இப்பாத்திரங்களால் தான் புதினம் மக்களிடம் சிறப்புப்பெறுகின்றது எனவே விடுதலைப் போராட்டத்தைக் கதைக்களமாகக் கொண்டு படைக்கப்பட்ட புதினங்களில் விடுதலை உணர்வை ஊட்டுவதற்குப் பயன்பட்ட பாத்திரங்கள் குறித்து விளக்குவது இவ்வியலின் நோக்கமாகும்.

**பாத்திரம் விளக்கம்**

‘‘கதைக்குப் பொருளையும் சிறப்பையும் உயிரோட்டத்தையும் கொடுக்கிற ஒன்றுதான் பாத்திரம்’’[1] என்பர் மேரன்எல்பூடு. பாத்திரம் என்பது குறித்து ‘‘பாத்திரங்கள் நாம் வாழும் உலகில் நம்மைப் போல் தலை நிமிர்ந்து நடப்பவர்களாய் இருத்தல் வேண்டும். மேலும் நம்மைப் போல் எலும்பும், தோலும், இரத்தமும் கொண்டு இவ்வுலகில் உலாவும் மக்களாக அமைதல் வேண்டும்’’[2]என்பர் அ.ச.ஞானசம்பந்தன். ‘‘தலை சிறந்த உலகத்துப் பெரும் புதினங்களை எல்லாம் நினைக்கிற போதுமுதலில் நம் நினைவுக்கு வருவது அந்தப் புதினத்தின் கருவோ, கதைப் பின்னலோ, பிறவோ அல்ல கதை மாந்தர்களே’’[3] என்பார் மா.இராமலிங்கம். கரு கதையின் எலும்பு என்றால் பாத்திரமானது எலும்போடு பின்னிப் பிணைந்துள்ள சதையைப் போன்றதாகும். வெறும் எலும்பானது அழகினைத்தராது. அதுபோலப் பாத்திரம் அற்ற கதை

சுவையைத்தராது எனவே கருவைவிடச் சிறப்பும், முக்கியத்துவமும் உடையது பாத்திரம் என்பது புலனாகும்.

**புதினங்களில் பாத்திரங்களின் இன்றியமையாமை**

புதினக்கூறுகளில் இன்றியமையாதது பாத்திரம் ஆகும். ஒரு கதைக்கு கரு எவ்வளவு இன்றியமையாததோ அதே போல் புதினத்திற்குப் பாத்திரப் படைப்பு இன்றியமையாததாகும். “பாத்திரங்கள் உணர்கின்றன, உணர்ச்சி செயலாகிறது, செயல்களே பின்னிப் பிணைந்துபிளாட் ஆகிறது. இரண்டையும் சேர்ந்தே தான் பார்க்கமுடியும்.உண்மையில் இரண்டுமே அர்த்த நாரீஸ்வரர் வடிவம் கொண்டுள்ளன”[4]என்பார் ம.இராமலிங்கம்.

**பாத்திர வகைகள்**

பாத்திரங்களை முதன்மைப் பாத்திரம், துணைமைப் பாத்திரம், சிறுபாத்திரம், எதிர்நிலைப்பாத்திரம், என நான்காகப் பாகுபடுத்த இயலும்.(1) கதை முழுவதும் இடம் பெறும் பாத்திரம் முதன்மைப் பாத்திரம் ஆகும். (2) இடையில் தோன்றினாலும் செம்மையுறத் திகழ்வது துணைமைப்பாத்திரம் ஆகும். (3) கதை வளர்ச்சிக்கு உற்ற துணையாக இருப்பது சிறு பாத்திரம் ஆகும். (4) முதன்மைப் பாத்திரத்திற்கு முரணாக அமைவது எதிர்நிலைப் பாத்திரம் ஆகும். விடுதலைப் போராட்டப் புதினங்களில் எதிர்நிலைப் பாத்திரமாக விளங்குபவை பெரும்பாலும் ஆங்கில அரசும் அதன் அதிகாரிகளான காவலர்களும் ஆவர்.

## விடுதலை உணர்வூட்டும் பாத்திரங்கள்

| புதினத்தின் பெயர் | முதன்மைப் பாத்திரம் | துணைமைப் பாத்திரங்கள் |
|---|---|---|
| மணிவாசகன் | மணிவாசகன் | - |
| தியாகபூமி | சம்புசாஸ்திரி | சாவித்திரி (எ) உமா ராணி, ஸ்ரீதரன், சாருமதி |
| புரட்சிப்பெண் | பலராமய்யர், ஜெயலெட்சுமி | சரப சாஸ்திரி, கோபாலன்,வாசு தேவன், குப்புசாமிராஜா |
| அன்பு நிலையம் (அ) வாழும் வகை | சிங்காரம் | கோபாலன் |
| மண்ணின் புதல்வர்கள் | மணி | பிரபாகரன், ரவி, முரளி, சுலோசனா |
| தேசபக்தன் கந்தன் | கந்தன் | ரங்கன், ராஜேஸ்வரி,சுந்தரம்,சரஸ்வதி, பொன்னன், சொக்கலிங்கம் |
| பெண் | சந்தானம் | சுப்புரத்தினம், சுபத்திரா, வத்சலா |
| அபலையின் கண்ணீர் | சிவராஜன் | தன்ராஜ் |
| சர்க்கா | ராமமூர்த்தி | கல்யாணி, சுந்தரராஜன் |
| இன்ப நினைவு | இராமநாதன் | சுப்பையா |
| நெஞ்சில் அலைகள் | வாசுதேவன் | சங்கரன் |
| அலை ஓசை | சூர்யா | தாரணி |
| கண்திறக்குமா | செல்வம் | பரந்தாமன் |
| கோபுர தீபம் | சுந்தரம் | வேங்கட கிருஷ்ணன், நம்பிராஜன் கோமதிநாயகம் |
| தியாகத்தழும்பு | தியாகராஜன் | சிவப்பிரகாசம், துர்க்காபாய் |
| புதுவெள்ளம் | முருகையன் | பெருமாள் சாமி |
| சோலைமலை இளவரசி | குமாரலிங்கம் | பொன்னம்மா |
| இருபது வருஷங்கள் | கேசவராவ் | சாவித்திரி |
| அணையாச் சுடர் | கௌதம் | மங்கள் தேஷ்பாண்டே, ருத்ரதத்தர், கல்யாணி, திரியம்பகன் |
| காலவெள்ளம் | இராஜாராமன் | கோபாலன்,தேஷ்பாண்டே |

| | | |
|---|---|---|
| ஆத்மாவின் ராகங்கள் | இராஜாராமன், | குருசாமி, முத்திருளப்பன்,பத்தர், மதுரம் பிரகதீஸ்வரன் |
| கல்லுக்குள் ஈரம் | ருச இரங்கமணி, திரிவேணி | சங்கரராமதீக்ஷிதர்,சொக்கலிங் கம் |
| வளைக்கரம் | இராதாநாத்,மாத வன் | சுஜாதை,ஈசான், லூசியா |
| மண்ணில் தெரியுது வானம் | நடராஜன் | சரோஜா |
| எங்கே போகிறோம் | சிதம்பரம் | கோபாலகிருஷ்ணன்,இராமலிங் கம் |
| இருவிழிகள் | சிவஞானம், | ஜான்சி, ரஹிம்,இஸ்மாயில் |
| வானவீதி | பண்ணன் | எழில், கமல்கோஷ் |
| மகுடபதி | மகுடபதி | பெரியண்ணக் கவுண்டர் |
| இரத்தம் ஒரே நிறம் | முத்துக்குமரன் | பூஞ்சோலை, பைராகி |
| பாதையில்பதிந்த அடிகள் | மணி | விசுவநாதன் |
| மணிக்கொடி | கங்காதரன் | நரேந்திரநாத் பானர்ஜி, இராஜாராமன், இராமசுவாமி,அஞ்சனா, பவித்ரா |
| வந்தேமாதரம் | சுந்தரம், சுப்பிரமணியன், வீரராகவாச்சாரி | வாசுதேவன், பாரதியார், சுனந்தாதேவி |

## 1. மணிவாசகன்

இப்புதினத்தில் மணிவாசகன் என்ற பாத்திரம் விடுதலை உணர்வூட்டும் பாத்திரம் ஆகும்.நாட்டில் விடுதலைக்காகப் பல்வேறு போராட்டங்கள் நிகழ்ந்து கொண்டிருந்த போது மணிவாசகன் அதில் ஈடுபடுவது போல் அவனுடைய பாத்திரம் படைக்கப்பட்டுள்ளது. மணிவாசகன் தன் நண்பனிடம் "அந்நிய நாட்டுப் பொருள்களில் மயங்காமல் கதர் ஆடை அணிவதால் அறுபது கோடி ரூபாய்கள் எஞ்சலாகும்,அதனால் ஏழை வாழ்தல் கூடும். அந்நியப்

பொருள்களைச் சிறிது சிறிதாக நீக்கமுயலவேண்டும்''[5]என்றும்''காந்தியடிகள் கூறியபடி ஒவ்வொருவரும் தினந்தோறும் இரண்டு மணிநேரம் நூற்கவேண்டும் அதனால் தங்களுக்கு வேண்டிய ஆடையைத் தாமே நூற்றுக் கொள்ளலாம்''[6] என்று கூறும் இடங்களில் விடுதலைப் போராட்டத்தில் ஈடுபடும் பாத்திரமாக மணிவாசகன் படைக்கப்பட்டுள்ளமை புலனாகும்.

## 2. தியாகபூமி

இப்புதினத்தில் சம்புசாஸ்திரி என்பவர் விடுதலை உணர்வூட்டும் முதன்மைப் பாத்திரம் ஆவார். ஸ்ரீதரன், சாவித்திரி என்ற உமாராணி துணைமைப் பாத்திரங்கள் ஆவர்.

### சம்புசாஸ்திரி

இவர் சென்னையில் உள்ள சாவடிக் குப்பம் என்னும் பகுதியில் வாழும் மக்களிடம் நாடு குறித்த விழிப்புணர்ச்சியை ஊட்டுகிறார். குப்பத்தில் உள்ள மக்களிடம் தூய்மை, தொண்டு, நாட்டுப்பற்று, தீண்டாமை ஆகியவற்றை எடுத்துக் கூறுவதன் மூலம் காந்தியடிகளின் தொண்டன் ஆகிறார். ஒவ்வொரு ஊராகச் சென்று கள்ளை ஒழியுங்கள், கதரை உடுத்துங்கள், சுத்தமாய் இருங்கள், என் சாதி பெரிது, உன் சாதி பெரிது என்றெல்லாம் சண்டை போடாதீர்கள் என்று போதிக்கின்றார். மேலும் நாடு அடிமைப்பட்ட விதத்தையும், அதனை மீட்கப் போராடவேண்டும் என்பதையும் கதராடையின் சிறப்புக் குறித்தும் எடுத்துக் கூறுவதுடன் கதர் அணியவேண்டும் என்றும் எடுத்துரைத்து மக்கள் மத்தியில் விடுதலை குறித்த விழிப்புணர்வை ஊட்டுகிறார். இங்ஙனம் புதினம் முழுவதும் விடுதலைக்காக உழைக்கும் பாத்திரமாகச் சம்புசாஸ்திரி படைக்கப்பட்டுள்ளார். புதினத்தின் இறுதியில் துணைப்பாத்திரங்களாகிய ஸ்ரீதரன், சாவித்திரி என்ற உமாராணி ஆகிய இருவரும் நாட்டு விடுதலைக்காகத் தனிநபர் சத்தியாக்கிரகத்தில் ஈடுபட்டுச்

சிறை செல்வதாகப்படைக்கப்பட்டுள்ளனர். சம்புசாஸ்திரியின் பெயர்த்தியாகிய சாருமதி என்னும் எட்டு வயதுக் குழந்தை தன் தாத்தாவுடன் ஊர் ஊராகச் சென்று விடுதலை வேள்வியில் பங்கெடுத்துக் கொண்டதை கல்கி, தியாகபூமியில் உரைப்பர்.

### 3. புரட்சிப்பெண்

இப்புதினத்தில் பலராமய்யர், ஜெயலெட்சுமி ஆகிய இருவரும் விடுதலை உணர்வூட்டும் பாத்திரங்களாவர். குப்புசாமிராஜா, சரபசாஸ்திரி, வாசுதேவன், கோபாலன் போன்றவர்கள் இவர்கட்குத் துணைநிற்கும் பாத்திரங்கள் ஆவர்.

**பலராமய்யர்**

இவர் உப்பு சத்தியாக்கிரகப் போராட்டத்தில் ஈடுபட்டு அதன் காரணமாகச் சிறை செல்கிறார். வன்முறை போராட்டத் தலைவன் சரபசாஸ்திரியால் பலராமய்யரின் தங்கை இறக்கிறாள். அதனால் நாடுவிடுதலை பெற வன்முறை சரியான பாதையல்ல. அறவழிப் போராட்டமே சிறந்தது என்பதை விளக்கும் பாத்திரமாக இவர் படைக்கப்பட்டுள்ளார்.

**ஜெயலெட்சுமி**

இவள் காந்தியின் மிதவாதக் கொள்கையைப் பின்பற்றும் பாத்திரமாவாள். ‘‘காந்தி இருக்கும் வரையில் ஜனங்களை அகிம்சா மார்க்கத்தை விட்டுத் திருப்பமுடியாது. அகிம்சைக்கு முன் பலாத்காரம் நிற்காது’’[7] என்று ஜெயலெட்சுமி கூறுமிடத்து அவளது கொள்கை வெளிப்படுகிறது. மேலும் வன்முறையில் ஈடுபட்ட சரபசாஸ்திரியையும் அவனது கூட்டத்தையும் பிடித்துக்கொடுக்கும் நிலையில் அவளது தேசப்பற்று வெளிப்படுகிறது. காந்திய வழியில் நாட்டு விடுதலைக்காகப் போராடிய ஒரு சிறந்த பெண் பாத்திரமாக ஜெயலெட்சுமி படைக்கப்பட்டுள்ளாள்.

## 4. அன்பு நிலையம் (அ) வாழும் வகை

இப்புதினத்தில் சிங்காரம், கோபாலன் என்ற இருவரும் விடுதலை உணர்வூட்டும் பாத்திரங்கள் ஆவர்.

**சிங்காரம்**

இவன் நகரசபைத் தேர்தலுக்கு நிற்கும் போது மக்களிடம் விடுதலை உணர்வை ஊட்ட வேண்டுமென்பதற்காக ஜவஹர்லால் நேரு, மகாத்மா காந்தி ஆகிய இருவரையும் அழைத்து வந்து, மக்களிடம் பேசவைக்கிறான். அதன் மூலம் மக்கள் விடுதலை உணர்வு பெறவேண்டும், கதர் உடுத்தவேண்டும், மதுவை ஒழிக்கவேண்டும் என்ற எண்ணம் உடையவர்களாய் மாறுகின்றனர். இங்ஙனம் தான் மட்டுமன்றி தனது ஊர் மக்கள் அனைவரும் விடுதலை வேள்வியில் பங்கெடுக்க வேண்டுமென்ற எண்ணத்துடன்தான் உருவாக்கிய கிராமத்தில் தறி, இராட்டினம் ஆகியவற்றை வாங்கிக் கொடுத்து கதர் ஆடையைத் தயார் செய்ய வழிவகுக்கிறார். மக்களிடம் பேசும்போது கள்குடி கூடாது, கள் இறக்குவோர் தேங்காய் வியாபாரமும், நார்த்தொழிலும் செய்து பிழைக்கவேண்டும்; பெண்கள் தினந்தோறும் நூல்நூற்கவேண்டும், நூற்றநூலைத் தறிபோட்டு அந்தக் கதராடையையே அணியவேண்டும். பட்டாடைகள், அந்நியத்துணி அணியக்கூடாது என்ற அவர்தம் கருத்துக்கள் அவரது விடுதலைப் போராட்ட உணர்வினை வெளிப்படுத்துகிறது. இப்புதினம் முழுவதும் சிங்காரம் என்னும் பாத்திரத்தின் வழி அக்கால மக்கள்தம் விடுதலை உணர்வு பெரிதும் வெளிப்படுகின்றது.

**கோபாலன்**

மக்களுக்கு விடுதலை உணர்வை ஊட்டவேண்டும் என்பதற்காக 'மஹாத்மா' என்ற பெயரில் பத்திரிக்கை நடத்துபவன். சத்தியாக்கிரகக்

கொள்கைகள் அடங்கிய துண்டுப் பிரசுரங்களை அச்சடித்து இலவசமாக மக்களிடம் வழங்கும் செயலை மேற்கொண்டவன். அந்நியத்துணி மறியல்,கள்ளுக்கடை மறியல் முதலியவற்றில் பங்கு பெற்று, தடியடிபட்டுச் சிறை சென்றமை கோபாலனின் விடுதலைப் போராட்ட உணர்வினைநன்கு வெளிப்படுத்தும்.

### 5. மண்ணின் புதல்வர்கள்

இப்புதினத்தில் மணி என்பவர் முதன்மைப் பாத்திரம் ஆவார். பிரபாகரன், ரவி, முரளி, சுலோசனா போன்றவர் துணைமைப் பாத்திரங்கள் ஆவர்.

**மணி**

இவன் அரசியல் வாரப்பத்திரிக்கையில் உதவி ஆசிரியராகப் பணிபுரிபவன். தனது பத்திரிகையில் வெள்ளையனே வெளியேறு போராட்டம் பற்றி எழுதி விடுதலை உணர்வை மக்களிடம் ஊட்டுகிறான் அதற்காகப் பிரிட்டிஷ் அரசாங்கம் அவனது பத்திரிகைக்குத் தடைவிதித்து அவனைக் கைது செய்தது.

**மணியின் நண்பர்கள்**

மணியைத் தப்புவிக்க அவன் நண்பர்கள் பிரபாகரன், ரவி, முரளி ஆகியோர் முயன்றபொழுது அவர்கள் ராஜதுரோகக் குற்றம் சாட்டப்பெற்று கைது செய்யப்பட்டனர்.

**சுலோசனா**

இவள் மண்ணின் புதல்வர்கள் என்னும் புதினத்தில் விடுதலை உணர்வூட்டும் சிறந்த பெண் பாத்திரமாவாள். சுலோசனாவிற்கும், பிரபாகரனுக்கும் திருமணம் செய்யப் பெற்றோர் முடிவு செய்கின்றனர். இதனை அறிந்த சுலோசனா அப்படியே செய்யுங்கள் ‘‘நான் சுதந்திரப் போராட்டத்தில் கலந்து கொள்ள விரும்புகிறேன். பிரபாகரன் என் கணவரானால் என்னை

அதற்கு அனுமதிப்பார். சிறை என்றால் வாடுவேன், போலீசுக்குப் பயந்து களத்திலிருந்து ஓடுவேன் என்று அவர் நினைக்க மாட்டார். என் உடம்பிலிருந்து பெருகும் இரத்தத்தால் இந்த மண் சிவக்கும் என்றால் அதற்காக அவர் பெருமைப் படுவார்.''[8]என்ற சுலோசனாவின் கூற்று விடுதலை உணர்வு அவள் உதிரத்தில் கலந்திருப்பதும், நாட்டு விடுதலைக்காக உயிரையும் கொடுக்கத் துணியும் ஒரு பெண்ணாக சுலோசனா என்னும் பாத்திரம் அமைந்துள்ளது.

## 6. தேசபக்தன் கந்தன்

இப்புதினத்தில் கந்தன், இராஜேஸ்வரி, இரங்கன் ஆகிய மூவரும் முதன்மையான விடுதலை உணர்வூட்டும் பாத்திரங்கள் ஆவர். சுந்தரம், பொன்னன், சரஸ்வதி, பெரிய பண்ணை சொக்கலிங்கம் போன்றவர்கள் இவர்கட்கு துணை நிற்கும் துணைமைப் பாத்திரங்களாவர்.

**கந்தன்**

இலண்டனில் ஐ.சி.எஸ் படித்து வரும் கந்தன் பாதியிலேயே அதைத் துறந்து தாய்நாட்டின் விடுதலை வேள்வியில் பங்கு கொள்ள விரும்பி தஞ்சை மாவட்டத்தில் தரங்கம்பாடிக்கு அருகிலுள்ள ஆக்கூர் கிராமத்தில் வந்து தேசத் தொண்டாற்றுகிறான். காந்தியடிகளின் ஒத்துழையாமை இயக்கத்தில் பங்கு கொண்டு அதனைப் பற்றி மக்களிடம் எடுத்துக் கூறுவதுடன் மக்களுக்குத் தன் செலவில் சர்க்கா, பஞ்சு இவற்றை அளித்து நூல் நூற்கவும் உதவுகின்றான். விடுதலைப் போராட்டத்தை வெறும் வாய்ப் பேச்சில் மட்டுமின்றிச் செயலிலும்செய்து காட்டிய பெருமை கந்தனுக்கு உண்டு.

கந்தனது விடுதலைப் போராட்டம் தொடர்பான பேச்சு மக்களின் மனத்தை நாட்டுப் பற்றின் பால் திருப்பியதை ''ஆமாம் அண்ணே அவர்

வாக்கைத் தெய்வவாக்காகக் கொண்டு நடப்போம் அவர் தேசபக்தர். இன்று காலையில் ஏழைகளுக்கு இராட்டினமும் பஞ்சும் கொடுத்தார்''[9]என்ற கூற்றின் வழி அறிய இயலும். மேலும் ஆக்கூர் கிராமத்தில் மக்களின் குடிப்பழக்கத்தை நீக்க மதுவிலக்குப் பிரச்சாரம் செய்வது, கள்ளுக்கடை மறியல் செய்வது, சொக்கலிங்க முதலியாரிடம் உள்ள தென்னந்தோப்பிலே கள்ளுக்கடை இருந்த இடத்தில் ஆசிரமத்தை ஏற்படுத்தி இக்கிராமத்தைத் திருத்துவோம் என்று கூறுவது போன்ற செயல்கள் அவர்தம் விடுதலைப் போராட்டச் செயலை வெளிப்படுத்துகிறது.

தரங்கம்பாடியில் நடைபெற்ற குண்டு வெடிப்பில் கந்தன் மார்பில் குண்டு பாய்கிறது. இறக்கும் தருவாயிலும் கூட, கந்தன் அங்கிருந்த இரங்கன் மற்றும் ராஜியிடம், சிறையிலிருந்து திரும்பிய பின் கள்ளுக்கடை மறியல், ஒத்துழையாமை இயக்கம் போன்றவற்றை நடத்துங்கள்.நாடு விடுதலைப் பெற்ற பின்பேநீங்கள் திருமணம் செய்து கொள்ள வேண்டும் என வேண்டுகிறான்.

இங்ஙனம் தன் உயிர் உள்ளவரையில் நாட்டின் விடுதலைக்காக போராடிய கந்தன் உயிர் பிரியும் தருவாயிலும் நாட்டைப் பற்றியே சிந்தித்துத் தான் இறந்த பின் விடுதலைப் போராட்டத்தை நிறுத்திவிடக் கூடாது தொடர்ந்து போராட வேண்டும் என்று தன்னுடன் இணைந்து போராடியவர்களிடம் வாக்குறுதி கேட்பது நாட்டு விடுதலையின் மீது கந்தன் கொண்ட பற்றினை விளக்கும். நாடு நமக்கு என்ன செய்தது என்று கேட்பதை விட நாட்டிற்கு நாம் என்ன செய்தோம் என்று கருதும் மனப்பாங்கு உள்ளவராக கந்தன் என்னும் பாத்திரம் அமைந்துள்ளமை சுட்டத்தக்கது. மேலும் உயிர் பிரியும் தருவாயில் கூட நாட்டின் விடுதலைப் பற்றிச் சிந்திக்கும் பாத்திரமாக கந்தன் பாத்திரம் அமைந்துள்ளமை குறிப்பிடத்தக்கது.

**இராஜேஸ்வரி**

தேசபக்தன் கந்தனில் இடம் பெற்றுள்ள பெண் பாத்திரம் இராஜேஸ்வரி. இவள் தனது ஐ.சி.எஸ். பட்டத்தைத் துறந்து, பம்பாயில் ஒத்துழையாமை இயக்கத்தில் பங்கு கொண்டு தொண்டாற்றிய பின் சென்னை வருகிறாள். தமிழகத்திலும் கந்தன், இரங்கன் ஆகியோருடன் இணைந்து ஒத்துழையாமை இயக்கப் பிரச்சாரத்தில் ஈடுபடுகின்றாள். கந்தனிடம் அவன் இறக்கும் தருவாயில் அவனுக்கு அளித்த உறுதிமொழியைப் பின்பற்றி தன் வாழ்வைத் தேசப் பணிக்கு ஆப்பணித்துக் கொள்கின்றாள். இதன்மூலம் அவளது விடுதலை உணர்வு வெளிப்படுத்தப்பட்டுள்ளது.

**இரங்கன்**

ஆந்திராவில் அரசாங்க வேலை பார்த்து வந்த இரங்கன் தஞ்சைக்கு அசிஸ்டெண்ட் கலெக்டராக மாற்றப் பெற்று அதற்காகச் சென்னை வருகின்றான். அங்கு இராஜேஸ்வரியைச் சந்திக்கின்றான். பின் கந்தனை இருவரும் ஆக்கூரில் சந்திக்கின்றனர். இச்சந்திப்பு மூவரின் விடுதலை வேட்கையையும் வளர்க்கிறது. இரங்கனும் இராஜேஸ்வரியும் சேர்ந்து ஊர் ஊராகச் சென்று ஒத்துழையாமை இயக்கப் பிரச்சாரம் செய்கின்றனர்இதனால் மக்களிடம் ஒத்துழையாமை இயக்க உணர்வு காட்டுத்தீப் போல் பரவுகிறது. விடுதலைப் போராட்டத்தில் ஈடுபடுவதற்காகத் தனது பதவியையே துறந்த பெருமையுடைய பாத்திரமாக இரங்கன் விளங்குகிறார்.

**7. பெண்**

இப்புதினத்தில் முதன்மைப் பாத்திரம் சந்தானம் ஆவான். வத்சலா, சுப்புரத்தினம், இராமசாமி போன்றவர்கள் துணைமைப் பாத்திரங்கள் ஆவர்.

**சந்தானம்**

வெளிநாட்டில் ஐ.சி.எஸ் பட்டம் பெற்றபின் அதனைத் துறந்து தாய்நாடு திரும்புகிறான் சந்தானம்.இதனை விரும்பாத அவன் மனைவி அவனை

வெறுத்ததால் சோலைப்பாளையம் சென்று முழுநேர தேசபக்தன் ஆகிறான். அவனது சொற்பொழிவு உறங்கிக்கிடந்த மக்களைத் தட்டி எழுப்பியது அவ்வூரில் உள்ளவர்கள் சந்தானத்தின் விடுதலை உணர்வுமிக்க பேச்சைக் கேட்டு மாறியதை ‘‘விதியின் மேல் பாரத்தைப் போட்டு வெம்பியவர்களும், நம்பிக்கையற்றுத் தளர்ந்தவர்களும், கோழைகளும், சோம்பேறிகளும் எழுச்சிமிகுந்த புது இரத்தத்துடன் வீடு திரும்பினர்’’[10] என்ற பகுதி விளக்கும். விடுதலைப் போராட்டத்தில் ஈடுபட்டதற்காக ஒருவருட கடுங்காவல் தண்டனை அடைகிறான். தான் சிறை சென்றாலும் பரவாயில்லை நாடு விடுதலை பெறவேண்டும் என்ற உணர்வுடைய பாத்திரமாகச் சந்தானம் விளங்குகிறான்.

**சுப்புரத்தினம்**

சோலைப்பாளையத்திற்கு அருகில் உள்ள ஜமீனில் மதுவிலக்குப் பிரச்சாரம் செய்ததற்காக வெட்டப்பட்டு உயிர்பிழைத்தவன் சுப்புரத்தினம். இவன் உயிர் பிழைத்தபின்பும் அந்த ஜமீனில் கள்ளுக்கடைகள் இருக்கக்கூடாதுஎன்று இறுதிவரை போராடும் பாத்திரமாகப் படைக்கப்பட்டுள்ளான்.

**வத்சலா**

இவள் சந்தானத்தின் மனைவி. இராமசாமியைச் சிலர் கல் கொண்டு தாக்க அவன் இரத்தம் சொட்டச் சொட்டக் கீழே விழுகிறான். அச்சூழலில் மேடையேறிய வத்சலா குடியைக் கெடுக்கும் குடியை நிறுத்தச் சொல்ல வந்ததற்காக எவனோ ஒரு பேடி ஒளிந்து கொண்டு இந்தக் கல்லை வீசி உள்ளான். மீண்டும் அவன் கல்லை எறிந்தால் அதை நான்தாங்கத் தயார் என்று நெருப்புக் கனல் வீசப் பேசுகிறாள் கல் எறிந்தவன் வந்து மன்னிப்புக் கேட்கிறான். அவனோடு சென்று ஜமீன்தாரைப் பார்க்கிறாள். அவர் நாளையிலிருந்து ஊரில் கள்ளுக்கடை இருக்காது என்கிறார். ஒரு

ஆவேசத்தில் விடுதலைப் போரில் ஈடுபட்டாலும் தொடர்ந்து செயல்படும் ஒரு பாத்திரமாக வத்சலா விளங்குகிறாள்.

**8. அபலையின் கண்ணீர்**

இப்புதினத்தின் முதன்மைப் பாத்திரம் சிவராஜன்.துணைமைப் பாத்திரம் தன்ராஜ்.சிவராஜன் ஒரு விடுதலைப் போராளி. 1942-இல் புரட்சி இயக்கத்தை நடத்தி அதற்காகப் பலமுறை சிறைசென்றவன். சிறையிலிருந்து வந்த சிவராஜன் தேசத்திற்கு வேறு முறையில் தொண்டு செய்ய எண்ணி பொருள்களைப் பதுக்கி வைத்துக் கொண்டு கருப்பு மார்க்கெட்டில் ஈடுபடுபவர்களைகண்டுபிடித்துக் கொடுக்கும் வேலையைச்செய்கிறான். அவனது ஒவ்வொரு செயலிலும் விடுதலை உணர்வும் நாட்டுப்பற்றும் நிறைந்து விளங்குகிறது.

துரைராஜ் என்பவர் காண்ட்ராக்டர். இராணுவத்தில் சேருகிறவர்கள் ரயில் பிரயாணம் போகும் மார்க்கத்தில் ஒரு ரயில்வே ஸ்டேஷனில் அவர்களுக்கு ரொட்டியும், டீயும் சப்ளை செய்யும் காண்ட்ராக்ட்டை முதலில் எடுத்தார். பிறகு யுத்தகாலத்தில் கிராக்கியாகக் கூடிய பொருள்களை எல்லாம் அந்தந்த ஜில்லாவில் வாங்கித் திரட்டி மக்களுக்குப் பொருள்கள் கிடைக்காமல் முடக்கினார். அப்படிப்பட்ட துரைராஜை சட்டத்தின் முன் நிறுத்திய பெருமை சிவராஜன் என்னும் பாத்திரத்திற்குரியதாகும்.

**9. சர்க்கா**

இப்புதினத்தில் ராமமூர்த்தியும், கல்யாணியும் முதன்மைப் பாத்திரங்களாவர். சுந்தரராஜன், தேவநாதன் இருவரும் துணைமைப் பாத்திரங்களாவர்.

**ராமமூர்த்தி**

இராமமூர்த்தி தன் கல்லூரிப் பருவத்தில் விடுதலைப் போராட்ட எழுச்சியால் தூண்டப்பட்டு போராட்டத்தில் ஈடுபட்டதால் கைது

செய்யப்படுகிறான். அவன் சிறையில் இருக்கும்பொழுது அவனின் தாய் இறந்து விடுகிறாள். தாயை இறுதியாகப் பார்க்க, சிறை அதிகாரிகள் அனுமதிக்காததால் கோபம் கொண்டு தாய்க்குப் பின் தேசமே பெரிது என எண்ணுகிறான். இனி தேசம்தான் தனக்கு தாய், மனைவி, மக்கள், சகோதரன், சகோதரி என்று கூறி தேசத்தின் அடிமைத்தளையை உடைத்து எறிவதற்காகத் தன் வாழ்வை அர்ப்பணிக்கிறான். சர்க்கா என்ற பத்திரிகையின் தலையங்கத்தில் “நம் தேசத்தின் ஒவ்வொரு கிராமமும் விழித்துக் கொள்ள வேண்டும். ஏனெனில் கிராமங்களில் குவிந்து கிடக்கும் இருளை வேருடன் அறுத்து எறிவது என்பது அந்நிய ஆட்சியைப் பிடுங்கி எறிவதற்கு இணையாகும்.”[11]என்று எழுதியிருப்பதில் அவனது கிராம விடுதலை குறித்த சிந்தனை வெளிப்படுகின்றது. சர்க்காவில் உப்பு சத்தியாக்கிரகம் பற்றி எழுதி மக்களுக்கு விடுதலையுணர்வை ஊட்டியதன் காரணமாக இராமமூர்த்தி கைதாகிறான். இங்ஙனம் தன்னால் முடிந்த வகைகளில் எல்லாம் நாட்டு மக்களை விடுதலை வேள்வியில் ஈடுபடச் செய்யும் சிறந்த பாத்திரமாக இராமமூர்த்தி பாத்திரம் படைக்கப்பெற்றுள்ளது.

**கல்யாணி**

இவள் சர்க்கா என்னும் இதழைப் படித்தும் ராமமூர்த்தியின் விடுதலை உணர்வு மிக்க சொற்பொழிவினைக் கேட்டும்கதராடை அணிந்து விடுதலைப் போராட்டத்தில் தன்னை இணைத்துக் கொண்டவள். இராட்டையில் தினம் தவறாமல் நூல் நூற்பதோடு தந்தையின் மறைவிற்குப் பின் ராமமூர்த்தியுடன் இணைந்து ஆசிரமத்தையும், சர்க்காவையும் நடத்துபவள் ஆகவும் உள்ளாள். சர்க்கா அலுவலகம் தடை செய்யப்பட்ட போதும், அவளது சொத்துக்கள் பறிமுதல் செய்யப்பட்டபோதும் மனம் தளராது தொடர்ந்து சர்க்கா பத்திரிகையை தன் வீட்டில் வைத்து நடத்தி அதில் விடுதலை பற்றி

எழுதவும் முற்பட்டாள். தன் பத்திரிகையின் மூலம் மக்களுக்கு விடுதலை உணர்வூட்டியதற்காக அரசு ராஜதுரோக குற்றம் சாட்டிக் கல்யாணியைக் கைது செய்தது. எனினும் அஞ்சாது சிறை செல்கிறாள். இவ்வாறு தன் சொத்துக்களையும் வாழ்வையும் நாட்டின் விடுதலைக்காக அர்ப்பணித்த ஒரு பாத்திரமாகக் கல்யாணி விளங்குகிறாள்.

**சுந்தரராஜன்**

இவர் ஒத்துழையாமை இயக்கத்தில் ஈடுபடுவதற்காகத் தம் வக்கீல் தொழிலைத் துறந்தவர். தேவிபுரத்தில் ஆசிரமம் அமைத்து "ஒவ்வொரு வெள்ளிக் கிழமையிலும் கிராம மக்களை ஆசிரமத்தில் கூட்டி நாடு குறித்தும் அது விடுதலையடைய வேண்டியது குறித்தும் எடுத்துரைப்பதை தமது செயலாகக் கொண்டவர்."[12]இறக்கும் தருவாயில் கூட, கல்யாணியிடம் தேவிபுரத்தையும் சர்க்காவையும் கைவிடாதே என்று கூறுவது அவரது விடுதலை வேட்கையினைப் புலப்படுத்தும்.

**10.இன்பநினைவு**

இப்புதினத்தில் இராமநாதன் முதன்மைப் பாத்திரமாவான். கல்லூரிப் பருவத்திலேயே காந்தியடிகளைச் சந்திக்கும் வாய்ப்பு இராமநாதனுக்குக் கிட்டுகிறது. காந்தியின் விடுதலை உணர்வுமிக்க பேச்சைக் கேட்டு அதன்பால் ஈர்க்கப்பட்டு அப்பேச்சின்படியே தன் வாழ்வை அமைத்துக் கொள்கிறான். காந்தியின் பேச்சை தன் மனத்தில் நிறுத்திய அவன் "நான் இன்றிலிருந்து பிரம்மச்சாரி மனைவி, மக்கள், வீடு, வாசல் என்ற பந்தம் எனக்கு வேண்டாம் என்னுடைய மூச்சுக் காற்று ஒவ்வொன்றையும் என்னுடைய நாட்டு மக்களான பெரிய குடும்பத்திற்கு அர்ப்பணம் செய்யப் போகிறேன்."[13] என்று உரைப்பது அவனது விடுதலை வேட்கைக்குச் சிறந்த சான்றாகும்.

கரூர் என்னும் ஊரிலுள்ள வீடுகளில் உள்ள தேசியக் கொடிகளைப் போலீஸ்காரர்கள் எடுத்தெறிவதைப் பார்த்து சில இளைஞர் கூட்டம் அதனைத் தடுத்து நிறுத்த முற்படுகிறது. அக்கூட்டத்தில் ராமநாதன் முதன்மையானவனாகச் செயல்பட்டு அதற்காகச் சிறைத் தண்டனையையும் அனுபவிக்கிறான். இராமநாதன் நாட்டு விடுதலைக்காகத் தன்னால் இயன்றபொழுதெல்லாம் கதராடையை விற்றும் அந்நியத் துணிக்கடைகள், கள்ளுக்கடைகள் முன்பு மறியல் செய்து பாடுபடுகின்றான். இதனால் பலமுறை அடிபட்டும் சிறை சென்றும் மருத்துவமனையில் சிகிச்சை பெறுகின்றான். தன் உடல் நிலை பாதிக்கப்பட்டு இருந்தாலும் அதனைப் பொருட்படுத்தாமல் மீண்டும் பேச்சு, எழுத்து, செயல் மூலம் நாட்டின் விடுதலைக்காகப் போராடும் ஒரு பாத்திரமாக இராமநாதன் படைக்கப்பட்டுள்ளான்.

**11. நெஞ்சின் அலைகள்**

இப்புதினத்தில் விடுதலை உணர்வூட்டும் பாத்திரம் வாசுதேவன் என்ற வாசு ஆவான். காந்தி என்ற பெயரைக் கூறியதற்காகச் சிறைப்படுகிறான். விடுதலை அடைந்த வாசு நேதாஜியின் விடுதலை இயக்க தேசிய இராணுவத்தில் சேர்ந்து விடுகிறான். சிங்கப்பூரில் இயங்கிவந்த தேசிய இராணுவ தலைமையகத்தில் பர்மா தலைநகர் இரங்கூனுக்கு ஜனவரி-7, 1944-இல் மாற்றினார். இப்படை மணிப்பூர் மாநிலத் தலைநகரான இம்பால் வழியாக இந்தியாவினுள் நுழையத் திட்டம் வகுக்கப்பட்டது. பிப்பிரவரி-4, 1944-இல் ‘டில்லி சலோ’ கோஷத்தை முழங்கிக் கொண்டே இந்தியாவின் வடகிழக்கு எல்லையில், பிரிட்டிஷ் இராணுவத்தினரோடு போர் புரிந்தவாறு முன்னேறியது. இப்படையுடன் மணிப்பூர் வந்த வாசு தன்னுடன் வந்த புஷ்பாவுக்கு தன் தாய்மண்ணைப் பரிசாகக் கொடுக்கிறான். “மண்ணா பரிசு என்று புஷ்பா கேட்டதற்கு, ஆம் புஷ்பா; பொன் விளையும் பூமியின் மண் இது.

இன்றைக்கு இந்தியாவின் எல்லைக்குள்ளேயே நம் சேனை நுழைந்துவிட்டது. இனி நாம் சுதந்திரத் தம்பதிகளாகவே வாழ்வோம்; நமக்குப் பிறக்கும் குழந்தைகள் சுதந்திரத் தாயின் மடியில் தவழ்ந்து விளையாடுவார்கள்''[14]என்றுரைப்பது சுதந்திரம் விரைவில் அடைந்து விடுவோம் என்ற மகிழ்ச்சியின் வெளிப்பாடாக உள்ளது.

இன்னும் இரண்டே மாதத்தில் டில்லி செங்கோட்டையில் வெள்ளி விழா கொண்டாடப் போவதாக அவனுக்கு ஒரு பிரமை. அந்தளவுக்கு அவன் மனதில் விடுதலைஉணர்வு நிறைந்திருந்து வாசுவோடு இருந்த விடுதலைவீரர்களைப் பார்த்து பிரிட்டிஷ்காரர்கள் தங்களிடம் வந்தால்சாப்பாடு தருகிறோம் என்கின்றனர். அவர்களைப் பார்த்து ‘‘சோற்றுக்கும் சுகத்துக்கும் மானத்தை அடகு வைத்தது போதும் அடிமை நாய்களாக அறுசுவை உணவு கொள்வதை விடப் பட்டினி கிடந்து நாட்டை மீட்பது மேல்''[15]என்றுரைப்பான் வாசு. இப்பேச்சின் வழி அவனது விடுதலை வேட்கைவெளிப்படுகின்றது. இவ்வாறு புதினம் முழுவதும் தன் பேச்சாலும் செயலாலும் விடுதலை உணர்வு நிரம்பியவனாக நேதாஜியின் எண்ணத்தை நிறைவேற்ற முற்படும் ஒரு சிறந்த பாத்திரமாக வாசு விளங்குகின்றான்.

**12. அலைஓசை**

இப்புதினத்தில் சூரியா, தாரிணி ஆகிய இருவரும் விடுதலை உணர்வூட்டும் பாத்திரங்களாவர். சூரியா காங்கிரஸ் மாநாட்டிற்குச் சென்று விட்டு வந்த பின் சீதா வீட்டில் பேசும்போது ‘‘இங்கிலீஸ் ஆட்சி நமது ஆத்மாவையே அழித்து விட்டது''[16]என்று கூறுமிடத்து சூரியாவின் விடுதலை உணர்வு புலப்படுகிறது. வன்முறைப் புரட்சியில் ஈடுபடும் தாரிணி, சூரியா ஆகிய இருவரும் பின் காந்தியடிகளின் அறப்போர் வழிக்கு மாறுகின்றனர். தாரிணியும், நிருபமாவும் உப்புசத்தியாக்கிரகத்தில் ஈடுபட்டதை‘‘எங்களுடைய

வயதை முன்னிட்டு எங்களை சிறைக்கு அனுப்பவில்லை”[17]என்ற தாரிணியின் கூற்றின் வழி அறிய இயலும்.

சூர்யா, அமர்நாத்திடம் பேசும்போது “தேசம் ஒரு எரிமலை போல் குமுறிக் கொண்டு இருக்கிறது. ஒரு நாள் அந்த நெருப்பில் பிரிட்டிஷ் ஆட்சி எரிந்து சாம்பலாகும்.”[18]என்றுரைப்பது அந்நியர் ஆட்சி மறைய வேண்டும் என்ற அவனது எண்ணத்தை வெளிப்படுத்தும்.

**13. கண் திறக்குமா**

செல்வம் இப்புதினத்தின் முதன்மைப் பாத்திரமாவார். இவரே இப்புதினத்தில் விடுதலை உணர்வு நிரம்பியவராகவும் காணப்படுகின்றார். தனக்கு விடுதலை உணர்வு மனதில் தோன்றிய விதத்தை அவரே “நான் ஒரு முறை வீட்டிலிருக்கும்போது வெளியே தெருவில் சென்ற ஊர்வலத்தில் இருந்து வந்த ஆயிரமாயிரம் குரல்களிலிருந்து எழுந்த வந்தேமாதரம் என்னும் வானளாவிய ஓசை என் கவனத்தைக் கவர்ந்தது; மேலும் அவர்களின் ‘மகாத்மா காந்திக்கு ஜே!’ என்றும் ‘பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம் வீழ்க!’ என்றும்‘ராஜ்ஜியம் நமதே அடைந்தே தீருவோம்!’ என்றும் உச்சஸ்தாயில் எழுந்த கோஷங்கள் செத்த பிணத்தையும் உயிர்ப்பிக்கக் கூடியனவாய் இருந்தன. அவர்களின் இத்தகைய கோஷங்கள் எல்லாம் என் மனதில் நாமும் விடுதலைக்குக் போராட வேண்டும் என்ற எண்ணத்தை உண்டாக்கின”[19]என்று உரைப்பதன் வழியே அறிய இயலும்.

செல்வம் காந்தியுகம் பூத்திருந்த காலத்தில் ‘ரௌலட்’ சட்டத்தை எதிர்த்துப் போராடி அடிபடும்போது “அந்நியன் உங்களை என்றும் ஆள வேண்டும் என்றும் நீங்கள் சொந்த நாட்டுச் சகோதரர்களை இப்படி ஏன் அடித்து நொறுக்குகிறீர்கள்? அவர்கள் கேட்கும் விடுதலை உங்களுக்கும்

வேண்டாமா? கேவலம் இருபது, முப்பது சம்பளத்துக்காக உங்களை, உங்கள் உயிரை,உங்கள் உரிமையை விலைக்கு விற்று விடுவதா வெட்கக் கேடு"[20] என்று முழங்கிக் கொண்டே அடி வாங்குகிறார். விடுதலையாகி வெளியே வந்த பின் தனது தீனபந்து பத்திரிகையில் அரசையும் அரசியலலையும் தாக்கி எழுதுவதும் மீண்டும் துணிக்கடை மறியல், கள்ளுக்கடை மறியல், உப்புசத்தியாக்கிரகம், தனிநபர் சத்தியாக்கிரகம் முதலியவற்றில் ஈடுபட்டுச் சிறைக்குச் செல்வதும் அவரது விடுதலை உணர்வைப் புலப்படுத்தும். இவ்வாறு புதினம் முழுவதும் நாட்டு விடுதலை ஒன்றே தனது குறிக்கோள் எனத் திகழும் பாத்திரமாகச் செல்வம் படைக்கப்பட்டுள்ளமை குறிப்பிடத்தக்கது.

**14. கோபுரதீபம்**

இப்புதினத்தில் சுந்தரம் முதன்மைப் பாத்திரமாவான். நம்பிராஜன், கோமதிநாயகம், வேங்கடகிருஷ்ணன் போன்றோர் துணைமைப் பாத்திரங்களாவர். காந்திய சகாப்தம் தோன்றுவதற்கு முன்பே திருநெல்வேலிச் சீமையில் கல்லூரி மாணவர்களான சுந்தரமும் அவனது நண்பர்களும் தமது படிப்பை விட்டு வந்து புரட்சி நடவடிக்கைகளில் ஈடுபடுகின்றனர். அவர்களது எண்ணம் நாட்டின் விலங்கை ஒடித்து விடுதலை பெற வேண்டும் என்பதாகும். ஒரு முறை தன் நண்பர்களின் நடுவே சுந்தரம் ஆவேசமாக உரத்தக் குரலில் "இம் என்றால் சிறைவாசம்! ஏன் என்றால் சிறை வாசம்!எதற்கென்றால் வனவாசம்! நண்பர்களே நாம் ஒவ்வொருவரும் வாஞ்சி ஐயராக மாற வேண்டும். திலகருடைய வழி நம்மை அறைகூவி அழைக்கிறது. நாம் இருக்க வேண்டிய இடம் கல்லூரியின் இருண்ட வகுப்பறைகள் அல்ல"[21]என்றுரைத்துத் தான் மட்டுமன்றித் தன் நண்பர்களையும் விடுதலை வேள்வியில் ஈடுபட வைத்த சிறப்பு சுந்தரத்திற்கு உண்டு. நாட்டு

விடுதலைக்காகத் தனது படிப்பு, காதல் என அனைத்தையும் தியாகம் செய்கிறான்.

“இதந்தரு மனையின் நீங்கி
இடர்மிகு சிறைப்பட்டாலும்
பதந்திரு இரண்டும் மாறிப்
பழிமிகுந்திழிவுற்றாலும்
விதந்தரு கோடி யின்னல்
விரைந்தென்னை யழித்திட்டாலும்
சுதந்திர தேவி நின்னைத்
தொழுதிடல் மறக்கிலேனே”[22]

என்ற பாரதியின் பாடலுக்கு ஏற்பச் சுந்தரம் வீட்டை, விட்டு கல்லூரியை விட்டு, காதலியை விட்டு, கானகம் புகுந்தபோதும் விடுதலைக்காகப் போராடுவதை நிறுத்தவில்லை.இத்தனை போராட்டத்திற்குப் பிறகும் விடுதலையைப் பெற இயலாத நிலையில் காவலரிடம் சிக்கி, அடிபட்டு சிறையில் இறப்பதை விட விடுதலைப் பெற வேண்டும் என்ற உணர்வை மனதில் எண்ணிக் கொண்டே இறப்பது மேல் என்றெண்ணி கடலில் மூழ்கி உயிர் இழக்கிறான் சுந்தரம்.நாட்டின் விடுதலையைத் தவிர வேறெதும் எண்ணாத மாண்புடைய ஒரு பாத்திரமாக சுந்தரத்தின் பாத்திரம் அமைந்துள்ளமை குறிப்பிடத்தக்கதாகும்.

### 15. தியாகத் தழும்பு

இப்புதினத்தின் முதன்மைப் பாத்திரம் தியாகராஜன் ஆவார். சிவப்பிரகாசம், துர்க்காபாய் ஆகிய இருவரும் துணைமைப் பாத்திரங்களாவர். 1930-இல் உப்பு சத்தியாக்கிரகத்தின்போது தேசத் தொண்டனாக அறிமுகமாகும் தியாகராஜன் படிப்படியாக பல நிலைகளிலும் விடுதலை

உணர்வு உடையவராகப் படைக்கப்பட்டிருக்கிறார். தன்னையொத்த இளைஞர்களைச் சேர்த்துக் கொண்டு அந்நியத் துணி எதிர்ப்பு, கள்ளுக்கடை மறியல் போன்ற விடுதலைப் போராட்ட நிகழ்வுகளில் ஈடுபட்டுச் சிறை செல்கின்றார். ஒவ்வொரு ஊரிலும் தனிநபர் சத்தியாகிரகத்தில் ஈடுபடுவதற்கு ஆள் தேர்வு செய்கின்றனர். இதில் தியாகராஜனும் தேர்வு செய்யப்படுகின்றான். தனிநபர் சத்தியாகிரகம் செய்ததோடு அது பற்றியும் ஆங்கில ஆட்சியின் கொடுமைகள் பற்றியும் மக்களிடம் விழிப்புணர்வு ஏற்படுத்தியதற்காக மீண்டும் சிறை செல்கின்றார். இதன் பின் வெள்ளையனே வெளியேறு இயக்கத்தில் ஈடுபட்டுப் போராடியபோது போலீஸ் சுட்டதில் தோளில் அடிபட்டு அது தழும்பாகிறது. அதனால் இப்புதினம் தியாகத்தழும்பு என்று பெயர் பெறுகிறது. உப்புசத்தியாகிரகத்திலிருந்து வெள்ளையனே வெளியேறு இயக்கம் வரை நடைபெற்ற அனைத்துப் போராட்டங்களிலும் பங்கு கொண்ட ஒரு பாத்திரமாக தியாகராஜன் படைக்கப்பட்டுள்ளார்.

**16.புதுவெள்ளம்**

இப்புதினத்தின் முதன்மைப் பாத்திரம் முருகையன் ஆவான். பெருமாள்சாமி துணைமைப் பாத்திரமாவான். 1942-இல் நடைபெற்ற ஆகஸ்டு புரட்சியின்போது முருகையன் இரவில் மறைவாகக் கூட்டம் போட்டதால் போலீசார் தேடி வந்ததை அறிந்த கல்லூரி முதல்வர் அவனைக் கல்லூரியிலிருந்து வெளியேற்றிய பின் முருகையன் தன் ஊரில் பெருமாள்சாமியைச் சந்தித்துப் பேசுகின்றான். அதனைக் கண்ணுற்ற போலீசார் அவனைக் கைது செய்கின்றனர். மன்னிப்புக் கடிதம் எழுதித் தர முருகையன் மறுத்து விடுகிறான். இதில் அவனது விடுதலை உணர்வு வெளிப்படுகிறது. நாடு சுதந்திரம் அடைந்த அன்று தின்பண்டங்களும் இனிப்புகளும் வாங்கிக் கொடுத்து மகிழ்வது அவன் விடுதலை மீது கொண்ட

பற்றினைக் காட்டும். இப்புதினம் முழுவதும் முருகையன் விடுதலை உணர்வு மிக்க பாத்திரமாகவும். அறப்போரை விரும்புபவனாகவும் படைக்கப்பட்டுள்ளான்.

**17. சோலைமலை இளவரசி**

இப்புதினத்தின் முதன்மைப் பாத்திரம் குமாரலிங்கம் ஆவான். இதில் இரண்டு வகை கிளைக் கதைகள் இடம் பெற்றாலும் இரண்டிலும் அவனுடைய விடுதலை உணர்வுடைய பாத்திரமாகவே படைக்கப்பட்டுள்ளான். 1942-இல் ஆகஸ்டு புரட்சியின் போது அதில் ஈடுபட்ட குமாரலிங்கத்தைப் போலீசார் தேடி வரும்பொழுது தான் கைதாவதற்கு முன் ஏதேனும் செய்ய வேண்டும் என்ற உணர்வுடன் பொதுக் கூட்டம் போடக் கூடாது என்ற அரசாங்கத் தடை உத்தரவை மீறிப் பொதுக் கூட்டம் போட்டு அதில் "பாரதத்தாயின் அடிமை விலங்கைத் தகர்க்கும் காலம் வந்து விட்டது. இதுதான் சமயம்! ஆறிலும் சாவு நூறிலும் சாவு கிளம்புங்கள் உடனே! இந்த ஊர்ச் சிறையில் சில தேசபக்தர்கள் இருப்பதாகக் கேள்விப் படுகிறேன். சிறைக் கதவை உடைத்து அவர்களை விடுதலை செய்யுங்கள்! தாலுக்காக் கச்சேரியையும் கஜானாவையும் கைப்பற்றுங்கள்! வெளியூர்களிலிருந்து போலீசார் வராதபடி தந்திக் கம்பிகளை அறுத்து விடுங்கள்! இரயில் தண்டவாளங்களைப் பெயர்த்து விடுங்கள்! பூரண சுதந்திரக் கொடியை வானளாவ உயர்த்துங்கள்! நமதே ராஜ்யம்! அடைந்தே தீருவோம்!"[23]என்றுரைப்பது குமாரலிங்கத்தின் தேசபக்தியையும் விடுதலை உணர்வையும் புலப்படுத்தும் பகுதிகளாகும்.

அவனுடைய இத்தகைய ஆவேசப் பிரசங்கத்தைக் கேட்ட ஜனங்கள் அந்தக் கணமே "வந்தே மாதரம்! மகாத்மா காந்திக்கு ஜே! புரட்சி வாழ்க!"[24]என்ற கோஷங்களை எழுப்பிக் கொண்டு அவனதுபேச்சிலுள்ள கோரிக்கைகளை நிறைவேற்றக் கிளம்பினர் என்பதின் வழி விடுதலை

உணர்வை மக்களிடம் தூண்டிவிட்ட ஒரு பாத்திரமாகக் குமாரலிங்கம் விளங்குவதை அறிய இயலும்.

பல ஊர்களிலும் இருக்கும் தேசபக்த வீரர்களிடம் அந்நிய ஆட்சிக்கு எதிரான துண்டு பிரசுரங்களைக் கொண்டு சேர்ப்பதிலும் அவனது விடுதலை உணர்வு வெளிப்படுகிறது. மற்றொரு கதையில் மாறனேந்தல் நாட்டு இளவரசனாக குமாரலிங்கம் இருந்தபொழுது ஆங்கிலேயரை வெறுப்பதும் அவர்களிடம் அடிமைப்பட்டு வாழும் வாழ்வை விரும்பாததும் அவனின் விடுதலை உணர்விற்குச் சிறந்த சான்றுகளாகும்.

**18. இருபது வருஷங்கள்**

இப்புதினத்தில் முதன்மைப் பாத்திரம் டாக்டர் கேசவராவ் ஆவார். இவர் விடுதலை உணர்வினால், ஒத்துழையாமை இயக்கத்தில் பங்கு கொள்ள விரும்பி தமது ஸ்கௌட் மாஸ்டர் பதவி, கௌரவ அசிஸ்டெண்ட் டாக்டர் பதவி முதலிய அனைத்தையும் துறந்து போராட்டத்திற்குச் செல்கிறார். போலீசாரால் கைது செய்யப்பட்டு சிறையில் அடைக்கப்படுகிறார். கள்ளுக்கடை மறியல், அந்நியத்துணிக்கடை மறியல் முதலியவற்றில் ஈடுபட்டுப் போராடுதல் இவரது விடுதலை உணர்வைநன்கு புலப்படுத்தும்.

**19. அணையாச்சுடர்**

இப்புதினத்தில் கௌதம் முதன்மைப்பாத்திரமாவான். விடுதலையே மூச்சு என்று போர்ப்பரணி பாடுபவனாகக் கௌதம் விளங்குகின்றான். ஆங்கிலேயர்களுடன் போராடி இந்தியாவின் வட பகுதியை வெற்றி கொண்டு வெற்றி கொண்ட இடங்களிலெல்லாம் புரட்சிக் கொடியைப் பறக்க விடுபவனாக இவன் விளங்குகிறான். இறுதியில் நாட்டுக்காகத் தன் இன்னுயிரை இழக்கும் ஒரு வீரனாக கௌதம் படைக்கப்பட்டுள்ளான்.

கல்யாணி:

வீரமும் காதலும் வாழ்க்கையின் இரு கண்கள் என்ற பாரத பெண்ணுக்கு எடுத்துக்காட்டாக விளங்கிய ஒரு பாத்திரம் கல்யாணி.

ருத்திரதத்தர்:

கங்கைக் கரையில் ஆசிரமம் அமைத்து பாடசாலை நடத்துவதோடுஇவர் வெள்ளையனை எதிர்ப்பதை தம் வாழ்க்கையின் நெறியாகவும் கொண்டு வாழ்ந்தவர் ஆவார்.

**20. காலவெள்ளம்**

காலவெள்ளம் என்னும் புதினத்தில் இராஜாராமனும், கோபாலனும் முதன்மைப் பாத்திரங்களாவர். தேஷ்பாண்டே துணைமைப் பாத்திரமாவார். இராஜாராமனும், கோபாலனும் நாட்டு விடுதலைக்காக மூச்சு உள்ளவரை போராடுவதைத் தவிர வேறு எந்த வித ஈடுபாடும் தங்களுக்குக் கிடையாது என்றும் ஒரு வெள்ளைத்தாளில் எழுதிக் கையெழுத்து இடுவது அவர்களது விடுதலை உணர்வைக் காட்டும் செயலாகும்.“நாடெங்கும் சுதந்திர வேட்கை பரவியிருந்த காலத்தில் கோபாலன் மனத்தை ஈர்த்த தலைவர் சுபாஷ்சந்திரபோஸ். காந்தியடிகளின் சாத்வீகத்தில்அவனுக்கு அவ்வளவாக நம்பிக்கை ஏற்படவில்லை. சமூகத்திலுள்ள குற்றங்குறைகளை நோக்கும்போது அரசியலில் மட்டுமல்ல சமூகத்திலும் ஆவேசமான புரட்சி ஏற்பட்டாலன்றி நாம் முன்னேற வழியில்லை என்பதை அவன் உணர்ந்தான்”[25]என்னும் பகுதி இராஜாராமனும் கோபாலனும் சுபாஷ்சந்திரபோஸின் தீவிரவாதப் புரட்சி வழியைப் பின்பற்றியவர் என்பதைப் புலப்படுத்தும்.

சமூக ரீதியில் மக்கள் மனதில் புரட்சியை உண்டாக்க வேண்டுமே தவிர, ஒத்துக் கொள்ளாதவர்களை எல்லாம் ஹிட்லர் போல் கொல்லக் கூடாது என்பதில் கோபாலன் உறுதியான கொள்கையை கொண்டிருந்தான்எனினும் நண்பர்கள் இருவரும் வெள்ளைக்காரனை நம்

நாட்டை விட்டு விரட்ட வேண்டும் என்பதை நேரடிக் கொள்கையாகக் கொண்டிருந்தனர். ஒரு சமயம் பொதுக் கூட்டத்தில் பேசியதற்காக இருவர் மீதும் அரசு இராஜதுரோகக் குற்றம் சாட்டி இராஜாராமனைக் கைது செய்கிறது. கோபாலன் தலைமறைவாகி மும்பை சென்று தேஷ்பாண்டேயைச் சந்திக்க முற்படும்போது தேஷ்பாண்டேயும் கைதாகியதை என்பதை அறிந்து சென்னை வருகிறான். அரசு சென்னையில் அவனைக் கைது செய்கிறது. மேற்சுட்டியவற்றால் இராஜாராமன் கோபாலன் ஆகிய இருவரும் நாட்டு விடுதலை வேள்வியில் தீவிதவாதத்தைப் பின்பற்றும் பாத்திரமாகப் படைக்ககப்பட்டுள்ளமை புலனாகும்.

**21.ஆத்மாவின் ராகங்கள்**

இப்புதினத்தின் முதன்மைப் பாத்திரம் இராஜாராமன் ஆவார். முத்திருளப்பன், மதுரம், குருசாமி, பிரகதீஸ்வரர் ஆகியோர் துணைமைப் பாத்திரங்களாவர். தியாகமும் பெருந்தன்மையும், தேசபக்தியும், தீரமும், தெய்வ நம்பிக்கையும் உடையவராக புதினத்தில் இராஜாராமன் இடம்பெற்றுள்ளார்.பிரபல தேசபக்தரும் அறுபத்தேழு வயது நிறைந்தவரும் காந்தியக்கல்வி நிபுணரும், தியாகியுமான சர்வோதய தலைவர் என இராஜாராமன் அறிமுகப்படுத்தப்படுவதன் வழி இராஜாராமனின் தேசபக்தியும் நாட்டுப்பற்றும் புலனாகிறது. தமிழ்நாட்டுக் காந்தியாக வாழ்ந்தவர் இராஜாராமன் என்பதை அவரது கதாபாத்திரம் வெளிப்படுத்துகின்றது. துணிக்கடை மறியல், கதர்ப்பிரச்சாரம், கதர்த்துணி விற்றல் முதலியவை அவரது விடுதலைப் போராட்டச் செயல்களாகும். மேலும் தனிநபர் சத்தியாக்கிரகம், வெள்ளையனே வெளியேறு இயக்கம் முதலியவற்றில் பங்கு பெற்றுச் சிறை செல்வதும் தமது வாழ்நாள் முழுவதும் நாட்டு

விடுதலைக்காகப் பாடுபட்டவராக இராஜாராமன் இப்புதினத்தில் படைக்கப்பட்டுள்ளார்.

முத்திருளப்பன், குருசாமி, பிரகதீஸ்வரர் போன்றவர்களும் போராட்டங்களில் பங்கு பெற்று சிறை செல்லும் துணைமைப் பாத்திரங்களாவர். இப்புதினத்தில் மதுரம் என்பவள் போராட்டத்தில் ஈடுபடவில்லை என்றாலும் போராட்டங்களுக்கும், கதர்நிதிக்கும் தமது நகைகளை அளித்தாள் என்பது அவளது விடுதலை உணர்வைப் புலப்படுத்தும் செயல்களாகும்.

**22.கல்லுக்குள் ஈரம்**

திரிவேணி, இரங்கமணி இருவரும் இப்புதினத்தின் முதன்மைப் பாத்திரங்களாவர். சங்கரராமதீட்ஷிதர், சொக்கலிங்கம்பிள்ளை, சிவானந்தம் ஆகியோர் துணைமைப் பாத்திரங்களாவர். சுதந்திர போராட்டக் காலத்தில் நடமாடியவர்களை நேரில் பார்ப்பது போல் இப்புதினக் கதாபாத்திரங்கள் அமைந்துள்ளனர்.

**திரிவேணி**

அன்பின் உருவம், அடக்கத்தின் இருப்பிடம், பெண்மையின் மென்மை, அகிம்சையின் மறுபிறப்பு என்ற அனைத்துக் கூறுகளின் கொள்கலனாகத் திரிவேணி விளங்குகிறாள். கிரிப்ஸ் தூதுக்குழுவை எதிர்த்தும், கள்ளுக்கடை மறியலில் ஈடுபட்டு போலீசாரிடம் அடிபடுவதன் மூலம் திரிவேணியின் விடுதலைப்போராட்டச் செயல்கள் வெளிப்படும். ஆகஸ்டு புரட்சியின்போது தன் அத்தையை இழந்து, நாட்டு விடுதலையில் தன் எண்ணத்தைச் செலுத்தி வன்முறையாளர்கள் தண்டவாளத்திற்கு வெடி வைத்திருப்பதை அறிந்து அதனை அகற்றித் தமது உயிரைத் தியாகம் செய்கிறாள் திரிவேணி.

காந்தீய வழிப்போராட்டமே சிறந்தது என்பதை உணர்த்தும் பாத்திரமாக திரிவேணி படைக்கப்பட்டுள்ளாள்.

**இரங்கமணி**

இவரின் தந்தை சென்னையில் நடைபெற்ற உப்புசத்தியாக்கிரகத்தின் போது காவலரின் அடக்குமுறையினால் உயிரை இழக்கிறார். அதனால் இரங்கமணி தீவிரவாத போக்கைப் பின்பற்றுகிறான். சொக்கலிங்கம் என்பவர் இரங்கமணிக்கு உற்ற துணையாக இருக்கிறார். பல்வேறு இழப்புகளுக்குப் பின் இரங்கமணி தீவிரவாதத்தை விடுத்து அறப்போராளியாக மாறுகிறான்.

**சிவானந்தம்**

கடமையுணர்வோடு விடுதலைப் போராட்டத்தில் ஈடுபட்டு அதற்காகத் தமது பதவியை உதறி எறிந்த நாட்டுப் பற்று உடையவராகச் சிவானந்தம் விளங்குகிறார்.

**23.வளைக்கரம்**

இப்புதினத்தில் மாதவன், இராதாநாத் ஆகிய இருவரும் முதன்மைப் பாத்திரமாவர்.சுஜாதை,ஈசான்,லூசியா போன்றவர் துணைமைப் பாத்திரங்களாவர். இராதாநாத் வெள்ளையனே வெளியேறு இயக்கத்தில் பங்கு கொண்டு சிறை சென்றமை மட்டுமின்றி, போர்ச்சுகீசியர் கையில் பாவைகளாக இயங்கும் நம்மவர்களின் நிலையை மாற்றி அவர்களை மீட்கும் பணியில் ஆட்களைத் திரட்டிப் போராடும் நிலையில் இவரது விடுதலை உணர்வு வெளிப்படுகிறது. நவீன பிரகலாதன் நாடகத்தில் ஜெய நாராயணா, ஜெய நமோ நாராயணா, ஜெய்ஹிந்த், வந்தேமாதரம் என்று முழங்குவதும் இந்தப் பக்தனை தாய்த்திருநாட்டின் தொண்டனை சிறை என்ன செய்யும்? என்று முழக்கமுடுவதும்அரி,அரி என்றொரு காந்தி அளித்ததோர் தெம்பு எனக்குண்டு. ஆரே உன் சாட்டை வீச்சுக்கு துப்பாக்கிக் குண்டுக்கும்

அஞ்சிடும் புழுவில்லை நான் என்ற முழக்கம் அவரது விடுதலை உணர்வைக் காட்டுகிறது. ஒரு கூட்டத்தில் இராதாநாத் போராட்டத்தில் பங்கு பெற வருபவர்களிடம் “துப்பாக்கிக் குண்டுக்கு உன் மார்பைக் காட்டும் நெஞ்சுறுதி உனக்கு இருக்கிறதா? உன் அணியில் ஒருவன் கைதானாலும் அனைவரையும் ஒன்றாக நிறுத்தி வைக்கும் ஆற்றல் உன்னிடம் இருக்கிறதா?”[26] என்று கேட்குமிடத்தும், நாட்டை விட்டுக் கடத்தப்பட்டபோதும் இறுதி வரை நாட்டின் விடுதலைக்காகப் போராடும்பாத்திரமாக இராதாநாத் விளங்குகிறான்.

மாதவன் எழுத்தின் மூலம் விடுதலை உணர்வு ஊட்டியதால் சிறைப்படுத்தப்பட்டு நாட்டை விட்டுக் கடத்தப்படுவதன் மூலம் அவனது விடுதலை உணர்வு வெளிப்படுகிறது.

**24.மண்ணில் தெரியுது வானம்**

மண்ணில் தெரியுது வானம் என்னும் இப்புதினத்தில் நடராஜன் முதன்மைப் பாத்திரம் ஆவான். சரோஜா துணைமைப் பாத்திரம் ஆவாள். நடராஜன் மகாத்மா, சத்தியாக்கிரகம், போராட்டம் என எப்பொழுதும் பேசிக் கொண்டிருப்பதன் மூலமும்,“தேசத்தின் தலை சிறந்த தியாகிகளைத் துன்புறுத்தும் இழிவான காரியத்தைச் செய்யும் ஆங்கிலேயனுக்குக் கையாளாக இருந்து அவன் வாலைப் பிடித்துக் கொண்டு, அவனுக்குப் பல்லைக் காட்டிச் சம்பளம் பெறும் உத்தியோகத்தை விட வேறு எந்த ஈனமான தொழிலையும் செய்யலாம்”[27] எனக் கூறுவதன் மூலமும் தன்னுடைய விடுதலை உணர்வை வெளிப்பத்துகின்றான்.

மேலும் ஆங்கில அரசின் 144 தடை உத்தரவை மீறி காங்கிரஸின் பொதுக்கூட்டத்திற்குக் கதராடை அணிந்து சென்றதால் கைது செய்யப்படுகின்றான். அதுமட்டுமின்றி காங்கிரஸ் சேவா சங்கத்தில் சேர்ந்து

தொண்டாற்றுவதன் மூலம் காந்தியைச் சந்திக்கும் வாய்ப்பைப் பெறுகிறான். அந்நியத் துணிக்கடை மறியல் செய்வதும் பத்திரிகையில் பணியாற்றும்போது எழுத்தின் மூலம் விடுதலை உணர்வை மக்களிடம் தூண்டுவதும் இவனது விடுதலைப் போராட்டப் பணியாக உள்ளது.

**சரோஜா**

காந்தியத்தின் தியாகம், தொண்டு, தன்னலமின்மை போன்றவற்றைப் பின்பற்றி வாழ்பவள் சரோஜா. காங்கிரஸ் ஆஸ்பத்திரியில் பணியாற்றுவதே ஏழைகளுக்குத் தொண்டு செய்வதற்கும், உதவி செய்வதற்கும் தனக்குக் கிட்டிய ஒரு வாய்ப்பாக கருதக்கூடியவள். இதனால் இவளது கருணை உள்ளமும், அன்பான குணமும் வெளிப்படுகிறது. காந்தியத்தின் அகிம்சை வழியில் நடக்கும் சரோஜாவை நடராஜன் விரும்பி மணம் செய்து கொள்வதும் இருவரும் இணைந்து காந்தியத்தின் கொள்கைகளை மக்களிடம் பரப்புவதும், சுதந்திரத்திற்குப் பாடுபடுவதும் மட்டுமின்றி தன் மகன் மோகனுக்கும் காந்தியக் கொள்கைகளையும், அகிம்சையையும் கற்றுக் கொடுக்கும் இடத்தும், இவர்களது விடுதலை வேட்கை புலனாகும்.

**25.எங்கே போகிறோம்**

இப்புதினத்தில் சிதம்பரம் முதன்மைப் பாத்திரம். கோபாலகிருஷ்ணன், இராமலிங்கம் துணைமைப் பாத்திரமாவர். சிதம்பரம் விடிவெள்ளி என்னும் தமிழ்ப் பத்திரிகையின் உதவிப் பேராசியராகப் பணிபுரிந்தான். பின் தன் உழைப்பினால் அதன் ஆசிரியராக மாறி தமது எழுத்தின் மூலம் நாட்டில் விடுதலை உணர்வை ஊட்டத் தொடங்கினான். சிதம்பரத்தின் விடிவெள்ளி பத்திரிகை அரசியல் அடிமைத்தனத்திற்கு எதிராகச் செயல்பட்டதோடு தமிழனுக்கு இலக்கியம், கலை, கலாச்சாரச் செய்திகளால் புத்தொளி பாய்ச்சி வந்தது ‘‘ஒன்றும் அறியாமல் இருக்கும் குடிமக்களுக்கு அடிப்படைத்

தேவைகள், அவசரத் தேவைகள், அரசியல் கல்வியைப் பரப்புதல், அரசியலுக்கும் அறநெறிக்கும் உள்ள தொடர்பை காந்தியத்தின் வழி எடுத்துக் கூறுதலை நோக்கமாகக் கொண்டிருந்தது."[28] என்னும் பகுதி சிதம்பரம் மக்களிடம் விடுதலை குறித்த விழிப்புணர்வு எற்படுத்தியதைப் புலப்படுத்தும்.

### 26.இருவிழிகள்

இப்புதினத்தின் முதன்மைப் பாத்திரம் சிவஞானம், இஸ்மாயில் ஆவார். ஜான்சி, ஆனந்தவள்ளி, ரஹீம் ஆகியோர் துணைமைப் பாத்திரங்களாவர்.

**சிவஞானம்**

கல்லூரிப் படிப்பை பாதியிலேயே நிறுத்திவிட்டு விடுதலைப் போராட்டத்தில் ஈடுபட்டவர் சிவஞானம். ஒத்துழையாமை இயக்கக் கூட்டத்தில் பங்கு கொண்டு காந்தியடிகளைக் காண்பதற்காகச் சென்னை சென்றவர். விடுதலை வேள்வியில் ஈடுபடுகிறார். 1942-இல் நடந்த சைமன் கமிசன் எதிர்ப்புப் போராட்டத்திலும், பர்தோலி சத்தியாகிரகத்திலும் ஈடுபட்டுச் சிறை செல்கிறார். 1930-இல் இராஜாஜி தலைமையில் நடைபெற்ற உப்புசத்தியாக்கிரகம், கள்ளுக்கடை மறியல், அந்நியத் துணி எரிப்புமுதலியவற்றில் பங்கு கொண்டு சிறை செல்வது தன் மனைவியுடன் சேர்ந்து பிரச்சாரம் செய்வது எனப் பல நிலைகளில் விடுதலைப் போராட்டக்காரராக சிவஞானம் விளங்குகிறார். ஆண்கள் மட்டுமின்றி பெண்களும் விடுதலைப போராட்டடத்தில் பங்கு கொள்ள வேண்டும் என்ற எண்ணம் உடையவராகத் திகழ்ந்ததை தன் மனைவியையும் விடுதலைப்போராட்டத்தில் ஈடுபடுத்தியதன் வழி அறிய இயலும்.

**இஸ்மாயில்**

திருவாசகம் படிக்கும் ஆன்மீகப் பெரியவராக இஸ்மாயிலின் பாத்திரம் அறிமுகப்படுத்தப்படுகிறது. இஸ்மாயில், சிவஞானத்தோடு இணைந்து நாட்டு

விடுதலை வேள்வியில் ஈடுபடுகிறார். இந்திய விடுதலைப் போராட்டங்களான உப்புசத்தியாக்கிரகம், கள்ளுக்கடை மறியல், அந்நியத்துணி எதிர்ப்பு, தனிநபர் சத்தியாக்கிரகம், வெள்ளையனே வெளியேறு இயக்கம் போன்றவற்றில் ஈடுபடுபவராகப் படைக்கப்பட்டுள்ளார். விடுதலைப் போராட்ட நிகழ்வுகள் அனைத்திலும் பங்கு பெறும் ஒரு பாத்திரமாக இஸ்மாயில் இடம் பெற்றுள்ளமை சுட்டத்தக்கது.

## 27. வானவீதி

இப்புதினத்தில் பண்ணன் முதன்மைப் பாத்திரமாவான். கமல்கோஷ், எழில் ஆகிய இருவரும் துணைமைப் பாத்திரங்களாவர்.

**பண்ணன்**

1942-இல் நடந்த சைமன் கமிசன்போராட்டத்தில் ஈடுபடுதல், உப்பு சத்தியாக்கிரகத்தில் ஈடுபட்டுச் சிறை செய்யப்படுவது, வரி கொடா இயக்கத்தில் பங்கு கொள்வது, தனிநபர் சத்தியாக்கிரகத்தின்போது முதல் சத்தியாக்கிரகியாகத் தேர்ந்தெடுக்கப்பட்டு உரையாற்றுவது எனப் பல நிலைகளில் பண்ணனது விடுதலைப் போராட்டச் செயல்கள் அமைந்துள. இறுதியில் வெள்ளையனே வெளியேறு இயக்கத்தில் பங்கு கொண்டு செயல்படும்போது இறந்து விடுகிறான். தன் வாழ்நாள் முழுவதும் விடுதலைக்காகப் போரிட்ட ஒரு பாத்திரமாகப் பண்ணன் விளங்குகிறான்.

**கமல்கோஷ்**

கமல்கோஷ் எழிலின் கல்லூரி நண்பன். எந்தக் காரியத்தையும் துணிவோடு செய்பவன். இதனை ‘‘ஒரு முறை நாங்கள் கல்லூரிக்கு வேலைநிறுத்தம் செய்து எல்லோரும் ஊர்வலமாகப் புறப்பட்டுக் கல்கத்தாவின் முக்கியத் தெருக்களின் வழியாக வந்து சுபாஷ் சந்திரபோஸின் கூட்டம் நடத்துவோம் என்று தீர்மானித்தோம். போலீஸ்காரர்கள் அதைத் தடுத்து

நிறுத்தவே,கமல்கோஷ் ஆத்திரத்தோடு அவர்களிடம் வாதிட்டு வெற்றி பெற்றான்.''[29] என்னும் எழிலின் கூற்று விளக்கும். நாட்டின் நலனையன்றி வேறொன்றையும் அறியாத கமல், விடுதலைக்காகப் பலவித போராட்டங்களில் ஈடுபட்டுப் போராடி இறுதியில் ஜெயிலில் இருந்து தப்பிக்கும்போது போலீஸாரால் சுடப்பட்டு இறந்து விடுகிறான்.

**எழில்**

வானவீதியில் இடம் பெறும் பெண் பாத்திரம் எழில் ஆவாள். இவள் பண்ணனின் விடுதலை உணர்வால் ஈர்க்கப்பட்டு, அவனோடு நண்பனாகப் பழகிப் பின் பெற்றோரின் சம்மதத்துடன் பண்ணனை மணந்து கொண்டவள். இறுதி வரை தன் கணவன் பண்ணனோடு அவனது விடுதலைப் போராட்டத்திற்குத் துணை நிற்கும் பாத்திரமாகப் படைக்கப்பட்டுள்ளாள்.

**28. மகுடபதி**

மகுடபதி இதன் முதன்மைப் பாத்திரமாவான். பெரியண்ணக் கவுண்டர் துணைமைப் பாத்திரம் ஆவார்.

**மகுடபதி**

உப்பு சத்தியாக்கிரகத்தில் பங்கு கொண்டு சிறை செல்வது அதனைத் தொடர்ந்து மதுவிலக்குப் பிரச்சாரம் செய்வது, 1931-இல் நடந்த சத்தியாக்கிரகத்தில் பங்கு பெறுவது எனப் புதினத்தில் மகுடபதியின் விடுதலை உணர்வு வெளிப்படுத்தப்பட்டுள்ளது. புதினத்தின் இறுதியில் தந்தையின் விருப்பப்படி செந்திருவை மணந்து கொண்ட பின் மீண்டும் தேசத்தொண்டில் ஈடுபடப் போவதாக மகுடபதி கூறுவது அவனது விடுதலைப் போராட்டத்தில் அவன் கொண்ட பற்றினை விளக்கும்.

**30.பாதையில் பதிந்த அடிகள்**

இப்புதினத்தில் மணி என்ற பெண்பாத்திரம் முதன்மைப் பாத்திரம் ஆகும். மணி காந்தியடிகளைச் சந்தித்தபின் ஊர் ஊராகச் சென்று கதர்ப்பிரச்சாரம், தீண்டாமைப் பிரச்சாரங்களைச் செய்வது, தேசவிடுதலைக்கு அங்கத்தினர்களைச் சேர்ப்பது, என விடுதலைப் போராட்டத்தில் ஈடுபடுகிறாள். வேதாரண்யம் உப்பு சத்தியாக்கிரகத்தில் பங்கு கொண்டது, கள்ளுக்கலயங்களை உடைத்தெரிவது போன்ற செய்கைகளின் வழி அவளது விடுதலை உணர்வு வெளிப்படுகிறது. மேலும் மக்களிடம் நேரிடையாகச் சென்று வெள்ளை அரசாங்கம் கூறும் செய்திகள் நம்மை ஏமாற்றுவது அவன் நாட்டு யுத்தத்திலே காவு கொடுக்க நம்மைக் கொண்டு போவான் அதனால் பட்டாளத்தில் சேராதீர்கள் என்று மக்களிடம் எடுத்துரைப்பது தனிநபர் சத்தியாக்கிரகத்தை ஒட்டி இளைஞர்களைத் தேர்ந்தெடுத்து வகுப்புகளும், அதற்கான பயிற்சிப் பாசறைகளை நடத்துவது, ஒத்துழையாமை இயக்கத்தில் பங்கு பெறுவது என மணியின் செயல்கள் அனைத்தும் விடுதலையை மையமிட்டதாகவே அமைந்துள. இளவயதிலேயே கணவனை இழந்த மணி தன் வாழ்க்கை முழுவதையும் நாட்டு விடுதலைக்காக போராடுவதில் கழித்ததோடு அதற்காகத் தன் உயிரையும் அர்ப்பணிக்கும் ஒரு பாத்திரமாக விளங்குகிறாள்.

**31.மணிக்கொடி**

இப்புதினத்தின் முதன்மைப் பாத்திரம் கங்காதரன் ஆவார். நரேந்திரநாத் பானர்ஜீ, இராஜாராமன், இராமசாமி, பவித்ரா, அஞ்சனா போன்றோர் துணைமைப் பாத்திரங்கள் ஆவார்.

**கங்காதரன்**

வன்முறைப் போரை விரும்பும் போராட்ட வீரனாக உள்ள கங்காதரன் சிட்டகாங் சென்று நாட்டு விடுதலைப் போரில் ஈடுபட விரும்புகிறான்.

நாளடைவில் காங்கிரஸில் சேர்ந்து வெள்ளையனே வெளியேறு இயக்கத்தில் பங்கு கொள்கிறான். பின், சென்னையில் நடந்த ஊர்வலத்தில் கலந்து கொண்டதால் கைது செய்யப்பட்டு சிறையில் அடைக்கப்படுகின்றான். தொடக்கத்தில் விடுதலைப் போரில் தீவிரவாதத்தில் ஈடுபட்டுப் பின், மிதவாதியாக மாறிய பாத்திரமாகக் கங்காதரன் படைக்கப்பெற்றுள்ளான்.

**நரேந்திரநாத் பானர்ஜீ**

இவன் இரண்டு ஆங்கிலேயர்களைக் கொன்ற குற்றத்திற்காக மறைந்து வாழ்கிறான். இச்சூழலிலும் ஹார்ட்டிக் குண்டெறி வழக்கு, கிகோரி ரயில் கொள்ளை போன்றவற்றில் பங்கு கொண்டதற்காக நாடு கடத்தப்படுகிறான். பின் வெள்ளையனே வெளியேறு இயக்கத்தில் பங்கு பெற்று சிறையும் செல்கிறான். இச்செயல்களின் வழி இவனது விடுதலை உணர்வு வெளிப்படுகிறது.

**இராஜாராமன்**

போலீசாரால் தேடப்படும் நரேந்திரன் என்பவருக்குத் தன் வீட்டில் இடம் அளித்ததாலும், கங்காதரனிடம் பேசும்போது “பயங்கரவாதத்தால் எதையும் சாதிக்க முடியாது, அப்படி சாதிக்க முடிந்தாலும் அந்த வெற்றியெல்லாம் தற்காலிகமாகத் தான் இருக்கும், நிரந்தரமான வெற்றி வேண்டும் என்றால் காந்திவழி தான் நல்லது”[30] என்று கூறும்போதும் இராஜாராமனின் விடுதலை உணர்வு வெளிப்படுகிறது. வெள்ளையனே வெளியேறு இயக்கத்தில் பங்கு கொண்டதற்காகக் கைது செய்யப்பட்டு சிறையில் அடைக்கப்பட்டு அங்கேயே உயிரைத் துறப்பதும் அவரது விடுதலை உணர்வுக்குச் சிறந்த சான்றாகும்.

**இராமசாமி**

இவர் பள்ளியில் பணியாற்றுவதுடன் தேசத்தொண்டிலும் ஈடுபடும் ஒரு பாத்திரமாக உள்ளார். தமது மகன்களிடம் நாட்டு விடுதலை பற்றி

உரையாற்றும்போது தான் கைது செய்யப்பட்டு சிறை சென்றதைக் கூறுகிறார். இதன் மூலம் அவர்களையும் விடுதலை உணர்வு உடையவர்களாக உருவாக்கும் அவரது எண்ணம் வெளிப்படுகிறது.

## 32. வந்தே மாதரம்

திருவல்லிக்கேணி இலக்கியச் சங்கம் என்ற அமைப்பில் உறுப்பினர்களாய் இருக்கும் வாலிபர்களில் ஒருவர் சுப்ரமணியன் ஆவார். சுப்ரமணியத்தின் நெருங்கிய நண்பர்களாக விளங்கியவர்கள் வீரராகவாச்சாரி, சுந்தரம் ஆகியோர். இவர்கள் மூவரும் திருவல்லிக்கேணி கடற்கரையில் மாலை நேரத்தில் நாள் தவறாமல் சந்தித்துப் பல நிகழ்வுகளை அலசுவார்கள். அதன்படி அவர்கள் ஆங்கிலேயரை எதிர்த்து ஒரு பத்திரிகை நடத்த முடிவுவெடுக்கின்றனர். இதனை ‘‘இந்தியர்களின் தொண்டைக்குள் திணிக்கப்படும் இந்த ஆலகாலத்தை வெளியே எடுத்து எறிந்து விட வேண்டும் என்று மூவரும் தீர்மானித்தனர்.’’[31] என்னும் கூற்று நன்கு புலப்படுத்தும்.

### சுந்தரம்

சுந்தரம் என்பவர் சுப்பிரமணியன், வீரராகவாச்சாரி ஆகியோரின் நண்பர். ஆங்கிலேய அரசை எதிர்த்து ஹிந்து பத்திரிகையில் கட்டுரைகளை எழுதியவர். சுப்பிரமணியன் ஹிந்துவிலிருந்து விலகி சுதேசமித்திரன் பத்திரிகையைத் தொடங்கிய பொழுது அதிலும் இவரது எழுத்துப்பணி தொடர்ந்தது. நாடெங்கும் நடந்த காங்கிரஸ் இயக்க மாநாடுகள் அதில் பேசப்பட்ட செய்திகள் ஆகியவற்றை மக்கள் மத்தியில் தம் எழுத்தால் கொண்டு சேர்த்த பெருமைக்குரியவர் சுந்தரம்.

### வீரராகவாச்சாரி

வீரராகவாச்சாரி, சுந்தரம், சுப்பிரமணியம் மூவரும் சேர்ந்து ஆங்கிலேயருக்கு எதிரான ஒரு பத்திரிகையைத் தொடங்கத்

திட்டமிட்டிருந்தாலும், வீரராகவாச்சாரி இதில் முழுமூச்சுடன் செயல்படத் தொடங்கினார் என்பதை “அடுத்த வாரம் நாம் மூவரும் இங்கே சந்திக்கிறோம். கையில் பத்திரிகையுடன், என்று குரலில் நம்பிக்கை தொணிக்கச் சொன்ன, அவர் சொல்லில் இருந்தே அறிய முடிகிறது.”[32]என்னும் பகுதி விளக்கும். மெட்ராஸ் டைம்ஸ் நாளிதழின் நிருவாகப் பொறுப்பைத் தானே ஏற்று அதில் ஆங்கிலேயருக்கு எதிரேயான விடுதலை உணர்வைத் தமிழ் மக்களிடம் விதைத்து வந்தார். வீரராகவாச்சாரியிடம் கையில் துப்பாக்கி இல்லாவிட்டாலும் வாய்க்குள் சிக்கிக் கிடக்கும் சிவந்த நாக்கை ஆயுதமாக மாற்றி வார்த்தைகளைத் தோட்டாக்களாக மாற்றி ஆங்கிலேயரை எதிர்ப்பவராகப் போராடி வந்தார். தான் சாகும்வரை விடுதலை உணர்வைத் தான் தொடங்கிய ஹிந்து பத்திரிகை மூலமாக மக்களிடம் எடுத்துரைக்கும் பாத்திரமாக வீரராகவாச்சாரி விளங்குகிறார்.

**சுப்ரமணியம்**

இவர் வீரராகவாச்சாரியின் நண்பர். “இந்திய மண்ணின் எஜமானர்களாக மாறிவிட்ட ஆங்கிலேயர்களை இந்த நாட்டிலிருந்து உடனடியாக வெளியேற்றிவிட முடியாது. இந்தக் காரியம் நிறைவேறப் பல ஆண்டுகளுக்குப் பொறுமையுடன் போராட வேண்டும். இந்தப் போராட்டத்தில் ஈடுபட்டிருப்போரிடையே ஒற்றுமை நிலவ வேண்டும். ஆயிரம் பிரச்சினைகள் ஏற்பட்டாலும் ஒற்றுமை சிதையக் கூடாது. ஒருவருக்கொருவர் விட்டுக் கொடுக்க வேண்டும்; உதவி செய்து கொள்ள வேண்டும்.”[33] என்றெல்லாம் விடுதலை உணர்வுமிக்க கருத்துக்களை ஹிந்து நாளிதழில் எழுதி மக்களிடம் விடுதலை உணர்வைத் தூண்டி வருகிறார். தள்ளாத வயதிலும் பேனா பிடிக்க முடியாத நிலையிலும் கூட வரை விடுதலைக் கருத்துக்களை எழுதுபவராக இப்பாத்திரம் படைக்கப்பெற்றுள்ளது.

## தொகுப்புரை

- ❖ ஆய்விற்கு எடுத்துக் கொண்டுள்ள 32 புதினங்களில் 109 விடுதலை உணர்வூட்டும் பாத்திரங்கள் இடம் பெற்றுள்ளனர். இதில் ஆண் பாத்திரங்கள் எழுபத்துமூவர் பெண் பாத்திரங்கள் இருபத்தொன்பது பேர் ஆவர்.
- ❖ ஆண் பாத்திரங்களில் முப்பத்துநான்கு பேர் முதன்மைப் பாத்திரங்களாகவும், நாற்பத்தொன்பது பேர் துணைமைப்பாத்திரங்களாகவும் உள்ளனர்.
- ❖ பெண் பாத்திரங்களில் ஜெயலெட்சுமி, திரிவேணி, மணி ஆகிய மூவர் முதன்மைப் பாத்திரங்களாகவும், சாவித்திரி, சாருமதி, சுலோசனா, இராஜேஸ்வரி முதலிய இருபத்துமூவர் துணைமைப்பாத்திரங்களாகவும் உள்ளனர்.
- ❖ புரட்சிப் பெண், கல்லுக்குள் ஈரம், பாதையில் பதிந்த அடிகள் என்ற மூன்று புதினங்களும் பெண்களை முதன்மைப் பாத்திரங்களாகக் கொண்டு அமைந்தவையாகும்.
- ❖ பெண் பாத்திரங்கள் விடுதலை உணர்வூட்டும் துணைமைப் பாத்திரங்களாக உள்ளவை தியாகபூமி, மண்ணின் புதல்வர்கள், தேசபக்தன் கந்தன், பெண், சர்க்கா, அலை ஓசை, தியாகத் தழும்பு, அணையாச் சுடர், சோலை மலை இளவரசி, இருபது வருஷங்கள், ஆத்மாவின் இராகங்கள், வளைக்கரம், மணிக்கொடி, மண்ணில் தெரியுது வானம், இரு விழிகள், வானவீதி, வந்தேமாதரம் என்ற பதினெழு புதினங்கள் ஆகும்.
- ❖ ஜான்சி என்னும் பெண் கைக்குழந்தையுடன் விடுதலைப் போராட்டத்தில் ஈடுபட்டதை இருவிழிகள் என்னும் புதினம் எடுத்துரைக்கிறது.
- ❖ ஆண்கள் மட்டுமே விடுதலை உணர்வூட்டும் பாத்திரங்களாக உள்ள புதினங்கள் மணிவாசன், அன்பு நிலையம் அல்லது வாழும் வகை, அபலையின் கண்ணீர், இன்ப நினைவு, நெஞ்சின் அலைகள், கண் திறக்குமா,

கோபுர தீபம், புதுவெள்ளம், சோலைமலை இளவரசி, இருபது வருஷங்கள், கால வெள்ளம், எங்கே போகிறோம், மகுடபதி என்பனவாகும்.

- ❖ தேசபக்தன் கந்தன் என்ற புதினத்தில் காங்கிரஸ் கட்சியையும், விடுதலைப் போராட்டத்தையும் எதிர்த்துக் கூறும் சொக்கலிங்கம் என்னும் துணைமைப்பாத்திரம், புதினத்தின் இறுதியில் ஒத்துழையாமை இயக்கப் போரில் பங்கு பெறுவது குறிப்பிடத்தக்கது.
- ❖ சோலைமலை இளவரசியில் பொன்னம்மாவின் தந்தையாகிய மணியக்காரர் விடுதலைப் போராட்டத்தை வெறுத்தவர் பின் மனம் மாறி விடுதலைப் போராட்ட வீரரை ஆதரிப்பவராகக் காட்டப்பெறுகிறார்.
- ❖ காலவெள்ளம் புதினத்தில் கோபாலன் என்னும் பாத்திரம் முதலில் தீவிரவாதத்தைப் பின்பற்றுகிறது. பின் காந்திய வழியே சிறந்தது என்பதை உணர்ந்து காந்திய வழிக்கு மாறும் பாத்திரமாகப் படைக்கப்பட்டுள்ளது.
- ❖ மணிக்கொடியில் நரேந்திரநாத் பானர்ஜி, கங்காதரன் ஆகிய இருவரும் தொடக்கத்தில் தீவிரவாதத்தைப் பின்பற்றியவர்கள் இறுதியில் மிதவாதத்தை ஏற்கின்றனர்.
- ❖ நாட்டின் மீது கொண்ட பற்றினால் திருமணத்தையே மறுத்து விடுதலைப் போராட்டத்தையே தன் வாழ்வாக ஆக்கிக்கொண்ட பாத்திரமாக சர்க்காவின் முதன்மைப் பாத்திரமான இராமமூர்த்தி விளங்குகிறான். இன்ப நினைவின் முதன்மைப்பாத்திரமான இராமநாதன் திருமணத்தை மறுத்து விடுதலைப் போராட்டத்தில் தம்மை முழுமையாக இணைத்துக் கொண்டமை குறிப்பிடத்தக்கது. ஆத்மாவின் ராகங்களில் இராஜாராமன், மதுரம் என்னும் இரு பாத்திரங்களும் நாட்டின் விடுதலைக்காகத் தமது திருமணத்தையே விடுதலைக்கு பின் என்று தள்ளிப்போட்டுப் போராடும் பாத்திரங்களாகப் படைக்கப்பெற்றுள்ளனர்.

- விடுதலைப் போராட்டத்திற்காகக் கல்வியைத் துறந்த பாத்திரங்களாக கோபுரதீபத்தில் சுந்தரம் என்ற பாத்திரமும் இருவிழிகள் புதினத்தில் சிவஞானம் என்ற பாத்திரமும் அமைக்கப்பட்டுள்ளமை சுட்டத்தக்கது. ஒத்துழையாமை இயக்கக் கொள்கையைப் பின்பற்றிப் பட்டம், பதவியைத் துறந்த பாத்திரமாகப் பெண் என்ற புதினத்தின் முதன்மைப் பாத்திரமாகிய சந்தானமும், தேசபக்தன் கந்தன் என்ற புதினத்தில் இரங்கன் என்ற பாத்திரமும் அமைந்துள்ளமை குறிப்பிடத்தக்கது.

## சான்றெண் விளக்கம்


1. Maran, E1 Poldhu, The Readers Dist- P.1058.
2. அ.ச. ஞானசம்பந்தன், இலக்கியக்கலை, ப.351.
3. மா. இராமலிங்கம், நாவல் இலக்கியம், ப.10.
4. மேலது, ப.51.
5. பனையப்ப செட்டியார், மணிவாசகன், ப.06.
6. மேலது, பக்.75-76.
7. சாண்டில்யன், புரட்சிப் பெண், ப-127.
8. நா. ரா.பண்டரிநாதன், மண்ணின் புதல்வர்கள், ப.114.
9. கா.சி.வேங்கடரமணி, தேசபக்தன் கந்தன், ப.15.
10. அகிலன், பெண், ப .85.
11. பி.எம். ராஜகோபாலன், சர்க்கா, ப.31.
12. மேலது, ப.66.
13. அகிலன், இன்பநினைவு, ப.36.
14. அகிலன், நெஞ்சின் அலைகள், ப.161.
15. மேலது, ப.196.
16. கல்கி, அலைஓசை, பக்.245,246.
17. மேலது, ப.347.
18. மேலது, ப.349.
19. விந்தன், கண்திறக்குமா, ப.24.
20. மேலது, ப.21.
21. நா. பார்த்தசாரதி, கோபுரதீபம், ப.5.
22. மேலது, ப.73.
23. கல்கி, சோலைமலை இளவரசி, ப.15.

24. மேலது, ப.16.

25. இந்திரா பார்த்தசாரதி, காலவெள்ளம், ப.111.

26. ராஜம்கிருஷ்ணன், வளைக்கரம், ப.206.

27. சிதம்பர சுப்பிரமணியம், மண்ணில் தெரியுது வானம், ப.45.

28. அகிலன், எங்கே போகிறோம், ப.23.

29. கு. ராஜவேலு, வானவீதி, ப.52.

30. ஜோதிர்லதா கிரிஜா, மணிக்கொடி, ப.158.

31. பண்டரிநாதன், வந்தேமாதரம், ப.7.

32. மேலது, ப.17.

33. மேலது, ப.101.

# கலைத்திறன்கள்

உள்ளத்தில் எழுகின்ற உணர்வுகளைப் பிறருக்கு வெளிப்படுத்தும் கருவியாக அமைவது கலை எனப்படும். இலக்கியம் சிறப்படைய கலைத்திறன்கள் சிறக்கவேண்டும். எனவே புதின ஆசிரியர்கள் புதினம் சிறக்க பல்வேறு உத்திகளைக் கையாளும் நிலையில் அவை கலைத்திறன்களாக வெளிப்படுகின்றன. அவ்வகையில் விடுதலைப் போராட்ட உணர்வுகளை வெளிப்படுத்தும் புதினங்களில் இடம்பெற்றுள்ள கலைத்திறன்களைக் காண்பது இவ்வியலின் நோக்கமாகும்.

## கலைவிளக்கம்

கலை என்பதற்கு, ‘‘கலை என்ற சொல் முதலில் செயல் திறமையைக் காட்டுவதும், அழகு ஏற்படும் வகையில் செய்வதும், சுவை பயக்கவல்லதும், பற்பலகாரியங்களுக்கு உதவுவதும் ஆன அறிவையும், ஆற்றலையும் குறித்தது. கலையில் செயல், திறமை, அழகு, சுவை என்ற அம்சங்கள் உள்ளன.’’[1] என்று உரைக்கும் கலைக் களஞ்சியம். ‘‘உள்ளதை உணர்ந்தவாறு உணர்த்துவதும் அவைகளைப்பற்றிக் கவலைப்படாமல் உணர்ச்சியால் வாரிவழங்குவதும் உணர்ச்சியும், கற்பனையும் கொண்டு வளர்வதும் தாவிப்பறப்பதும் போன்றதும் கலையாகும் மேலும் சிற்பம், ஓவியம் முதலியன போல் எதற்கும் உருவம் தந்து உணர்த்துவதும் நுண் பொருளாகிய கருத்துக்களுக்கும் உருவம் தந்து விளக்குவதும் ஒரு பொருளின் விருப்பு அல்லது வெறுப்புக் கொண்டு மனம் ஈடுபட்டு உணர்த்துவது கலை’’[2] என்று கலை என்பதற்கு விளக்கம் உரைப்பர் மு.வரதராசன்.

மனிதமனத்தின் ஆழத்தில் புதைந்து கிடக்கும் தன்மைகளையும், அழியாத உண்மையின் தத்துவத்தையும், முருகியலையும் வெளிப்படுத்துவது கலையாகும். ‘‘கலை என்பது ஒருவகை ஆற்றல் குறிப்பிட்ட ஒரு வழியை மேற்கொண்டு முன்னரே கலைஞன் மனத்தில் தோன்றிய ஒரு பயனைப் பிறர் அறியச்செய்யும் ஆற்றல் ஆகும்.’’[3]என்பார் அ.ச.ஞானசம்பந்தன்.

‘‘கலை என்பது கற்பனையினின்று எழுகின்றது. கற்பனாசக்தி மக்கட் குலத்திற்கெல்லாம் பொதுவானதொரு சக்தியாகும். ஆகவே கலை பொதுவாக மானிட அனுபவங்களின்றே ஊற்றெடுக்கின்றது. கலைகளில் ஒன்றாகிய இலக்கியமும் மானிட அனுபவங்களிலிருந்தே எழுகின்றது.’’[4]என்று கலைக்கு விளக்கம் தருவர் கோதண்டராமன். இதனால் கலை உள்ளதை உள்ளவாறு உணர்த்துவதும் அழகும், இன்பமும் அளிப்பதும் ஆகும் என்பது புலனாகும். கலைத்திறன்களில் உவமை, உருவகம், மேற்கோளகாட்டல், பழமொழி, வருணனை, கற்பனை போன்றவை அடங்கும்.

## உவமை விளக்கம்

‘‘பண்புந் தொழிலும் பயனுமென்றிவற்றின்
ஒன்றும் பலவும் பொருளொடு பொருள்புணர்த்
தொப்புமை தோன்றச் செப்புவதுவமை’’[5]

என்று தண்டியலங்காரம் உவமைக்கு இலக்கணம் கூறுகின்றது.

அதாவது ஒரு பொருளை சிறப்பித்துக் கூற அதைவிடச் சிறந்த வேறொரு பொருளோடு ஒப்பிடுவதே உவமையாகும். இதனால் புரியாதன எளிதில் புரியும். கேட்டார்க்கு இன்பம் பயக்கும் என்பது புலனாகும்.

‘‘படைப்பாளியின் படைப்பின் ஆற்றலை உணர்த்தக் கருதிய உணர்வின் எல்லையை வெளிப்படுத்தும் இலக்கிய உத்திகளுள் உவமை சிறப்பிடம் பெறவல்லது. உவமைகள் இலக்கியப் புலவனின்

படைப்பாற்றலையும்,கூர்ந்து நோக்கும் பார்வையையும், சமூதாயச்சூழலின் செல்வாக்கையும் உணர்த்துவனவாகும்''[6]என இயம்புவர் தமிழண்ணல்.

உவமைஎன்பது பொருளைத் தக்க ஒப்புமை கொண்டு உணர்த்துவதென்றும், இவ்வொப்புமையிலே புலவரின் அகங்கண்ட புதிய அழகைக் காணுகிறது என்றும், அவ்வாறு ஒப்புமை கண்டு கூறுவதையே உவமை எனவும் இலக்கணநூலார் கூறுவர்''[7] என்பர் மு.வரதராசன்.

''காணப்பட்ட பொருள்களை ஒப்பிட்டுப் பார்க்கும் இயல்பு மனிதனிடம் இயற்கையாக அமைந்துள்ள ஓர் இயல்பாகும். மனிதனிடம் என்று எண்ணம் தோன்றிற்றோ அன்றே மொழியும் தோன்றி இருத்தல் வேண்டும். மொழி தோன்றிய அன்றே உவமை தோன்றியிருக்கும்''[8] என்பர் அ.ச.ஞானசம்பந்தன்.

கவிதையில் மட்டுமன்றி உரைநடையிலும் உவமைகள் கையாளப் பெற்றுள்ளன. கதையோட்டத்திற்கு ஏற்பப்படைப்பாளிகள் ஆங்காங்கே உவமைகளைச் சேர்த்துப் படைப்புகளை வலிமையுடையதாகப் படைக்கின்றனர். அவ்வாறு படைக்கப்படும் உவமைகள் கதைக்கு முக்கியமானதாகக் கருதப்படுகின்றது. புதினங்களில் கருத்து விளக்கத்திற்கும், சுவைமிகுதிக்கும் உவமை உதவுகிறது. கருத்து வெளிப்பாட்டை துல்லியமாக வெளிப்படுத்தும் தன்மைக்கு உதவுவது உவமையாகும். அவ்வகையில் ஆய்விற்கு எடுத்துக் கொண்டுள்ள புதினங்களில் இடம்பெற்றுள்ள உவமைகள் பின்வருமாறு.

மணிவாசகனைப் பிரிந்து சோகத்துடன் இருக்கும் சாரதாம்பாளின் முகத்தோற்றத்தை ''கரிய மேகக் கூட்டங்களால் மறைக்கப்பட்ட சந்திரனைப் போன்றிருந்தது''[9] என்பர். இதில் சாரதாவின் முகம் சந்திரனுக்கு உவமிக்கப்பட்டுள்ளது.

தியாகபூமியில், பனிக்காலத்தில் சூரியன் தோன்றிய பின்பும் பனி சூரியனை மறைத்துக் கொண்டிருப்பதை ஆசிரியர் ‘‘மாயையாகிய பனி ஆத்ம சூரியனை ஜீவனுடைய கண்ணுக்குப் புலப்படாமல் மறைத்துக்’’[10] கொண்டிருக்கிறது என்றுரைப்பது இயற்கையைத் தத்துவ நோக்குடன் கண்டுரைத்த உவமை ஆகும்.

புரட்சிப் பெண்ணில், இரயில் நிலையத்தில் ஸ்டேஷன் மாஸ்டர் வருகைக்காகக் காத்திருக்கும் மக்கள் அவரைக் கண்டதும் சூழ்ந்து கொள்கின்றனர். மக்களின் இச்செயல் ‘‘மழையை எதிர்பார்த்துக் காத்திருக்கும் சாதக பட்சிகளுடன்’’[11] ஒப்பிட்டுரைக்கப்பட்டுள்ளது.

டாக்டர் கோபாலனைச் சந்தித்துப் பேசிக் கொண்டிருந்த ஜெயலெட்சுமி இலேசாகச் சிரித்தாள் ‘‘அந்த முல்லைச் சிரிப்பினால் அவள் முகம் விகசித்த அழகைக் கண்டு அவர் தேன் குடித்த நரி போல் மயங்கி நின்றார்’’[12] என்று முக அழகில் கோபாலன் மயங்கியமை தேன் குடித்த நரியின் செயலோடு உவமித்துக் கூறப்பட்டுள்ளது.

அன்பு நிலையம் அல்லது வாழும் வகை என்ற புதினத்தில் சுந்தரநாதன் மனோரஞ்சிதத்தின் மீது கொண்ட காதலைச் சுட்டும்போது ‘‘அவன் உள்ளத்தில் மனோரஞ்சிதம் ஒரு தேவதை போலக் கோயில் கொண்டாள். தான் உடல்,அவளே உயிர், தான் விழி, அவளே ஒளி என்றுணர்ந்தான் சுந்தரநாதன். தாந்தே என்னும் இத்தாலியக் கவிக்கு பீட்ரிக்ஸ் எப்படி ஒரு கற்புத் தெய்வமாக விளங்கினாளோ அப்படியே மனோரஞ்சிதம் சுந்தர நாதனுக்கு விளங்கினாள்’’[13] என்ற இத்தாலியக் கவியின் உணர்வோடு சுந்தரநாதனின் உணர்வு ஒப்பிட்டுக் கூறப்பட்டுள்ளது.

மண்ணின் புதல்வர்கள் புதினத்தில் லலிதாவை அவள் கணவன் கோபித்துக் கொண்டபோது சுந்தரம் என்பவர் ‘‘டாக்டர் பெண் என்பவள் மலரைப் போன்றவள் சூரியனின் கிரணங்கள் கொஞ்சம் உஷ்ணமடைந்துவிட்டாலே போதும் அதன் இதழ்கள் சுருண்டு விடும். அது போதாதென்று சூட்டுக்கோலால் மலரின் இதழ்களைத் தேய்ப்பது போல் எதற்காகக் கோபித்துக் கொள்கிறீர்கள்’’[14] என்றுபெண்ணை மலரோடு ஒப்புமைப்படுத்தி உரைப்பர்.

தேசபக்தன் கந்தனில் ரங்கனையும், அவனது தங்கை சரஸ்வதியையும் பார்த்த இராஜேஸ்வரி, சரஸ்வதி முழு நிலவு போல் இருப்பதாகவும், ரங்கன் மழை மேகம் போன்று இருப்பதாகவும் ஒப்பிட்டுக் கூறுகிறாள். மேலும் நல்லோர் தீயோர் இயல்பைச் சுட்டிக் காட்டும்போது ‘‘உப்புநீர்க் கடலுக்கு அருகில் உள்ள கிணற்றுநீர் நன்றாய்க் குடிப்பதற்கு ஏற்றாற் போல் உள்ளது. எத்தனையோ ஆறுகள் கடலுள் கலந்தாலும் கடல்நீர் உப்புத்தன்மையுடன் உள்ளது தீயோரைச் சார்ந்திருப்பினும் நல்லோர் நல்லோரே, நல்லோருடைய கூட்டுறவு மிகுதியும் உடையவராயினும் தீயோர் திருந்தார்’’[15] என்று நன்னீருக்கு நல்லோரும் உப்புநீருக்குத் தீயோரும் உவமிக்கப்பட்டுள்ளனர்.

பெண் புதினத்தில் கதைத் தலைவன் சந்தானம் தன் மனைவி வத்சலாவின் ஆட்டத்திற்கெல்லாம் வளைந்து கொடுத்துக் கொண்டிருந்தான் என்பதைக் கூறுமிடத்து,‘‘விக்கிரகத்துக்கு என்னவெல்லாமோ பணிவிடை செய்கிறார்கள், திருவிழாவும், களியாட்டங்களும் அதற்காக நடக்கின்றன. வேளைக்கு ஒரு பூஜை, நாளைக்கு ஓர் அலங்காரமாக இருக்கிறது. இதைப்பற்றி எல்லாம் அந்த விக்கிரகத்திடம் கேட்கிறார்களா? யாரை மகிழ்விப்பதற்காக இவையெல்லாம் நடைபெறுகின்றன. அது போல் தன் நெஞ்சை வத்சலாவிடம் பறி கொடுத்திருந்ததால் அவனும் ஓர்

விக்கிரகமாகத்தான் மாறி இருந்தான்''[16]என்று சந்தானம் தனக்கென ஒரு விருப்பின்றி இருந்தமை இறை விக்கிரகத்தின் நிலையோடு உவமைப்படுத்தப்பட்டுள்ளது.

அபலையின் கண்ணீர் என்ற புதினத்தில் கதைத் தலைவன் சிவராஜும் அவன் நண்பர் இன்ஸ்பெக்டர் தன்ராஜும், கள்ளமார்க்கெட்டில் ஈடுபட்டு ஆட்சியில் உள்ள காங்கிரஸ்காரர்களால் பாராட்டப்படும் துரைராஜைப் பிடிப்பதற்குப் புறப்பட்டார்கள் என்பதை ''மதயானையோட சண்டை போட இரண்டு பூனைகள் போர்முரசு கொட்டிக் கொண்டு புறப்பட்டது என்றும், ராட்சதக் காட்டுப்பூனையோடு போராடுவதற்கு இரண்டு சுண்டெலிகள் தடபுடலாகக் கொடி கட்டிக் கொண்டு கிளம்பியது என்றும், எவரெஸ்ட் சிகரத்தை இடித்துத் தரைமட்டம் ஆக்குகிறோம் என்று இரண்டு சிட்டுக்குருவிகள் சிறகை அடித்துக் கொண்டு உயரப் பறக்கத் தொடங்கியது போன்றிருந்தது''[17] என்றும் ஒரு செயலுக்கு மூன்று உவமைகளை உரைப்பர் கல்கி.

சர்க்கா என்ற புதினத்தில் சுந்தரராஜன் கோர்ட் விடுமுறையை மகிழ்வுடன் அனுபவிக்க வந்திருந்தபொழுது அவரது மனைவி மாரடைப்பினால் இறந்து விடுகிறாள், இதனை ''ஒருவன் சுவர்க்க வாசலை அணுகிய பின் சுவர்க்க வாசல் கதவைத் தாழிட்டுவிட்டு அவன் திரும்பிச் செல்லும் வழியையும் நிரந்தரமாக அடைத்து விட்டால் அவன் எவ்வளவு துன்பம் உறுவானோ அவ்வளவு துன்பத்தில் சுந்தரராஜன் தத்தளித்துக் கொண்டிருந்தார்''[18] என்று மகிழ்ச்சிக்கு சுவர்க்கம் ஒப்புமைப்படுத்தியுரைக்கப்பட்டுள்ளது.

இன்ப நினைவில் கதைத் தலைவி கமலம், தாமரை மலரைப் பறிக்க குளத்திற்குள் சென்றதைச் சுட்டும்போது ''நீரில் அம்பெனப் பாய்ந்தாள் நீர்த்

திவலைகள் உடைந்து நொறுங்கும் கண்ணாடிச் சில்லுகள் போல் நாலா பக்கமும் சிதறித் தெறித்தன.''[19] என்று தண்ணீர்த் திவலை கண்ணாடிச் சில்லிற்கு உவமிக்கப்பட்டுள்ளது.

நெஞ்சின் அலைகளில் சங்கரனும் கனகமும் பேசிக் கொண்டிருக்கும்போது எல்லோருக்கும் சோறு, எல்லோருக்கும் துணி இதைக் கேட்க அரசியல்வாதிக்குத்தான் உரிமை உண்டா? என்கிறான் சங்கரன். இந்தச் சொற்கள் கனகத்தின் நெஞ்சத்தில் பதிந்தது என்பதைக் கூறுமிடத்து ''கடலில் நங்கூரம் பாய்ச்சிக் கப்பலை நிறுத்துவது போல் கனகத்தின் இதயத்தில் ஆழப் பாய்ந்து சென்றது''[20] என்பர் அகிலன் இதில் நெஞ்சம் கடலாகவும் அதில் பதிந்த நினைவு நங்கூரமாகவும் ஒப்புமைப் படுத்தப்பட்டுள்ளது.

அலைஓசையில் இந்தியா சுதந்திரம் அடைந்த அன்று டில்லி நகர அழகைக் கூறுமிடத்து ''டில்லி நகரத்து அலங்கார தீபங்கள் வானத்து நட்சத்திரங்களுடன் போட்டி போடுகின்றன. வானத்து நட்சத்திரங்களை எண்ணினாலும் எண்ணி விடலாம் ஆனால் இந்த தீபங்களை எண்ண முடியாது''[21] என்று தீபங்களுக்கு நட்சத்திரங்கள் உவமையாகச் சுட்டப்பட்டுள்ளன. மேலும் இராகவன் இந்தியா சுதந்திரம் பெற்ற பின் வேலை நிமித்தமாக டில்லி சென்றபோது பஞ்சாபில் கலவரம் என்று கேட்டவுடன் அவன் உள்ளம் பஞ்சாப் சென்று சீதாவையும் குழந்தை வசந்தியையும் காப்பாற்ற நினைக்கும்போது பஞ்சாபிற்குள் செல்வது என்பது ''புலியின் குகைக்குள் நுழைவது போலவும், தீ பிடித்து எரியும் பஞ்சாலைக்குள் செல்வது போலவும், பாம்புப் புற்றுக்குள் கை விடுவது போலவும் இருந்தது''[23]என்று ஒரு செயலுக்கு மூன்று உவமைகள் உரைக்கப் பெற்றுள்ளன.

கோபுர தீபத்தில் நீண்ட நாட்களுக்குப் பின் தன் காதலன் சுந்தரத்தைச் சந்தித்துப் பத்மா பேசிக் கொண்டிருக்கும்போது போலீஸ் வரும் சத்தத்தைக் கேட்டுப் போய் வருகிறேன் என்று கூறிச் சுந்தரம் சென்று விடுகிறான். அப்பொழுது பத்மாவின் உள்ள நினைவை“கண்ணில்லாதவன் கண்களை அடைந்து உடனே இழந்துவிட்டது போன்ற நிலையினளாய் ஓடும் நதியையும் இருளையும் பார்த்துக் கொண்டு நின்றாள்”[23]என்பர் நா.பார்த்தசாரதி.

தியாகத்தழும்பு என்ற புதினத்தில் கதைத்தலைவன் தியாகராஜன் செயிண்ட் ஜார்ஜ் கோட்டையில் பறந்து கொண்டிருந்த பிரிட்டிஷ் கொடியை இறக்கிப் பாரதத்தின் மூவர்ணக் கொடியைப் பறக்க விட வந்த நிலையில் அவனது மனநிலையை “அவனுக்கு மேற்கே அமைதியாக ஓடிக் கொண்டிருக்கும் கூவம்நதியும், கிழக்கே அலைகளை வீசி ஆரவாரம் செய்து கொண்டிருக்கும் கருங்கடலும் போல அவன் உள்ளம் கொந்தளிப்புக்கும் அமைதிக்கும் இடையே ஊசலாடிக் கொண்டிருந்தது”[24] என்று அமைதிக்குக் கூவம் நதியும் கொந்தளிப்பிற்குக் கருங்கடலும் உவமையாகக் கூறப்பட்டுள.

புதுவெள்ளம் என்ற புதினத்தில் “மகாத்மா காந்தியைக் கதைத்தலைவன் ஏசுநாதருடன் ஒப்பிட்டுக் கூறுகிறான்.”[25]

புதுவெள்ளத்தில் முருகையனைக் காவலர்கள் கைது செய்து அழைத்துச் செல்லும் போது அவன் தந்தையின் நிலையைக் “கன்றைப் பறிகொடுத்த பசுபோல்”[26] என்ற உவமையின் வழி விளக்குகிறார் அகிலன்.

சோலைமலை இளவரசியில் இரவில் இரயில் வண்டி செல்லும் அழகான காட்சியானது,“தீப வரிசையானது இடம் பெயர்ந்து நகர்ந்து போய்க் கொண்டிருப்பது போல்”[27] காட்சியளிப்பதாய் ஒப்புமைப்படுத்தப்பட்டுள்ளது.

இருபது வருஷங்கள் என்ற புதினத்தில் சாவித்திரி என்ற பாத்திரம் அதிக வேலைகளை குறித்துக் கொண்டு அவற்றை முடிப்பதற்குள் நடுநிசி வந்துவிட்டதே என்று அலுத்துக் கொள்வாள் என்பதை உணர்த்த ஆசிரியர் ‘‘லோபிக்கு பணத்தில் எவ்வளவு ஆசையோ அவ்வளவு ஆசை சாவித்திரிக்கு வேலை செய்வதில்’’[28] என்றுரைப்பர்.

ஆத்மாவின் ராகங்களில் கதைத் தலைவன் இராஜாராமன் கைதாகிச் சிறையிலிருக்கும்பொழுது அவருக்கு மதுரவல்லி எழுதிய கடிதம் ஆறுதல் தந்தது என்பதை ‘‘பாலைவனத்தின் இடையே பயணம் செய்யும்போது பருகக் கிடைத்த நல்ல தண்ணீர் போல் இருந்தது.’’[29] என்று சிறை பாலைவனமாகவும் கடிதம் தண்ணீராகவும் ஒப்புமைப்படுத்தப்பட்டுள்ளது.

கோவாவில் உள்ள மடகாவ் நகரில் மக்கள் விடுதலைப்புரட்சிக்காக ஊர்வலம் செல்கின்றனர். அவ்வூர்வலத்தை ‘‘மழைக்காலம் ஓய்ந்ததும் கிளம்பும் ஈசல் கூட்டம் என அரசு நினைத்தது போலும். இது ஈசல் கூட்டம் அல்ல, கரையை உடைத்துச் செல்லும் காட்டாற்றின் வெள்ளம்’’[26] என ஒப்பிட்டுக் கூறுகிறது வளைக்கரம் என்னும்புதினம்.

எங்கேபோகிறோம் என்ற புதினத்தில் கதைத்தலைவன் சிதம்பரத்தின் குடும்பநண்பர் பொன்னையா தான் சிபாரிசு செய்த ஆள் தவறிழைப்பது தெரிந்தும் அவனைக் காப்பாற்றும்படி கூறிக் கொண்டே அவன் தோளில் கையைப் போடுகிறார். இச்செயல் அவனுக்கு ‘‘சுருக்குக் கயிறாகத் தோன்றியது. அவன் கிடுக்கிப் பொறிக்குள் அகப்பட்ட மூஞ்சூறு போலானான்.’’ [31]என்று அவனுடைய தர்மசங்கடமான நிலைமை உவமையின் வழி விளக்கப்பட்டுள்ளது.

வானவீதி என்ற புதினம் கதைத்தலைவி எழில் எதிர்வீட்டிற்கு வந்த சொக்கப்பனைக் கண்டவுடனேயே அவள் பயந்தாள் என்பதையும், அவள் பயந்ததைச் சுட்டும் போது ‘‘இளங்காலைப் போதில் முறுக்கு அவிழ்ந்து நறுமணம் பரப்பிய மலர்களைக் காணச்சென்றவள் அங்கே வரும் கரும்பூதத்தைக் கண்டால் எவ்வாறு மருள்வாளோஅவ்வாறு திகைத்தாள் அவள் அடுத்தகணம் வானவில் மறைவது போல் மெல்ல மறைந்து போனாள்.’’[32] என்று எழிலின் செயலுக்கு இரு உவமைகள் சுட்டப்பெற்றுள.

கல்கியின் மகுடபதி புதினத்தில் கதைத்தலைவியான செந்திருவின் அழகைக் கூறும் போது ‘‘அவள் கண்களை நீலோற்பல மொட்டுக்கும் முகத்தைத் தாமரை மலருக்கும்’’[33] ஒப்பிட்டுக் கூறுகிறார் ஆசிரியர்.

ஆகஸ்ட் புரட்சியின் போது தலைவர்கள் அனைவரும் சிறை செய்யப்பட்டவுடன் மக்களின் நிலைமையைக் கூறும் போது ‘‘மக்கள் ஓடக்காரன் இல்லாத ஓடம் போல் ஆயினர்.’’[34] என்று ஒப்பிட்டுக் கூறுகிறது மணிக்கொடி என்ற புதினம். இதில் மக்கள் ஓடத்திற்கும், தலைவர்கள் ஓடக்காரர்களாகவும் உவமிக்கப்பட்டுள்ளனர்.

வந்தேமாதரம் என்ற புதினம் சுந்தரம், சுப்பிரமணியன், வீரராகவாச்சாரி என்ற நண்பர்களின் பேச்சு முடிவடையாமல் நீண்டு சென்று கொண்டிருந்தது என்பதை ‘‘காட்டில் உள்ள ஒற்றையடிப் பாதை முடிவில்லாமல் நீளுவதைப் போல் அவர்களது பேச்சும் விவாதமும் வளர்ந்து கொண்ட இருந்தது’’[35] என்று சுட்டுகிறது. காந்தியடிகளின் வரவை எதிர்நோக்கி நின்ற மக்களின் நிலமையைக்கோயில் தீபாராதனை வேளையில் வெளியே பக்தர்கள் ‘‘இதோ இப்பொழுது திறந்துவிடுவர் ஒரே நிமிடம் ஒளிமயமான இறைவனைத் தரிசித்து விடலாம் என்று இதயத்துடிப்புடன், பொறுமையுடன் நிற்பதுபோல மேடையில்

காந்தியடிகள் வரவை எதிர்நோக்கிக் கண்ணிமைக்காது நின்றனர்''[36] என்று தெய்வத்திற்குக் காந்தியடிகளை உவமையாக்குவர் என்.ஏ.வேலாயுதம்.

**உருவகம் விளக்கம்**

''உவமையும் பொருளும் வேற்றுமை யொழிவித்

தொன்றெனை மாட்டின.்.துருவகமாகும்''[37]

என்று தண்டியலங்காரம் உருவகத்திற்கு இலக்கணம் கூறுகின்றது. அதாவது உவமையாம் பொருளையும், உவமிக்கப்படும் பொருளையும் வேறுபாடொழிவித்து ஒன்றென்பதோருள்ளுணர்வு தோன்ற வொற்றுமை கொளுத்தின் அது உருவகம் ஆகும் ஒப்புமையுடைய இரு பொருள்களை வேறு வேறாகக் காணாமல் ஒன்றிலேயே மற்றொன்றைக் காண்பது உருவகம் எனப்படும் ''உவமை அடங்கி உருவகமாக வெளிப்படும் போது அந்த அடக்கத்தில் ஆற்றல் பிறப்பது ஒரு விந்தையே ஆகும். உருவகம் என்பது அடக்கிச் செறிந்த உவமையே என்பார்''[38]மு.வரதராசன். படைப்பாளன் கருத்தைச் சொல்லும் போது ஒரு பொருளோடு ஒன்றை ஒப்பிடாமல் அந்தப் பொருளே அதுவாக இருக்கிறது என்று கூறுவது உருவகம் ஆகும். உருவகத்தில் பொருளும், உவமையும் வேறுபடாமல் ஒன்றை ஒன்று சேர்ந்தே இருக்கும்.

''சுருங்கிய உவமையே பிறகு உருவகம் ஆயிற்று உவமையிலிருந்து உருவகம் தோன்றினாலும் இரண்டிற்கும் வேறுபாடு உண்டு என்பார்''[39] அ.ச.ஞானசம்பந்தன். படைப்பாளியின் வெற்றிக்குக் காரணமாக அமைவது உவமையும் உருவகமும் ஆகும். உவமை மனச்சித்திரங்களாக இருப்பது; உருவகம் காட்சிகளாய் அமைவது ஆகும். புதினங்களின் நடையை அணிசெய்யும் கருவியாக உருவகம் அமைந்துள்ளது.

ஆய்விற்கு எடுத்துக் கொண்டுள்ள புதினங்களில் இடம்பெற்றுள்ள உருவகம் பின்வரும் பகுதியில் சுட்டப்பெற்றுள்ளது.

மண்ணின் புதல்வர்கள் புதினத்தில் வக்கீல் சுந்தரத்தின் மனைவி காவேரி பெண்மை பற்றித் தன் கணவனிடம் பேசும் போது அப்பா ஆண் மகனே நீ என் வயிற்றில் இருக்கும் போது எனக்குத் தொல்லை கொடுத்தாய் என்றாலும் "உனக்குப் பாலூட்டி வளர்த்தேன்; கண்களை விளக்காகவும், கை இரண்டையும் தொட்டிலாகவும் உனக்காக மாற்றிக் கொண்டேன்"[40]என்று கூறுமிடத்து உருவகம் இடம்பெற்றுள்ளது.

## மேற்கோள் காட்டல்

தான் பேசிய அல்லது எழுதிய கருத்துகளை உறுதி செய்யும் நோக்கத்தில் பிறர் பேசியதையோ, எழுதியதையோ எடுத்துக் கூறுவது மேற்கோள் ஆகும். முன்னோர் மொழி பொருளை இலக்கியத்தில் போற்றுதல் ஒரு மரபாகவே இருந்து வருகின்றது. பேசும் பொழுதும், எழுதும் பொழுதும் முன்னோர் மொழி பொருளை பொன்மொழியாகப் போற்றுவது ஒருவருடைய இலக்கிய நெஞ்சத்தைக் காட்டுவதாகும். ஒரு படைப்பாளி தம் கருத்துக்கு அரண் செய்யும் வகையிலும் மேலும் தெளிவுவேண்டும் நிலையிலும் மேற்கோள்களைக் கையாளுவது ஒரு மரபாக உள்ளது.

ஒரு படைப்பாளன் தன் படைப்பு சிறப்படையவும், தனது பரந்து பட்ட அறிவுத்திறம் வெளிப்படும் வண்ணமும், பிற நூல்களிலிருந்து மேற்கோள் காட்டுவர் இது அவரது இலக்கியப் புலமையைச் சுட்டுகிறது. மேலும் படைப்பாளி தம் கதைமாந்தர் வாயிலாகத் தமது கருத்துகளைக் கூறுவது அவரின் இலக்கிய ஆர்வத்தைக் காட்டுவதாக அமையும். இதனை உணர்ந்த புதின ஆசிரியர்கள் இதிகாசங்கள், சங்க இலக்கியம், திருக்குறள், ஔவையார் பாடல்கள், புராணங்கள், பாரதியார் கவிதைகள், பிற்காலப்

புலவர்கள் போன்றோர் நூல்களிலிருந்து மேற்கோள் காட்டித் தம் அறிவுத் திறத்தை வெளிப்படுத்தியுள்ளனர்.

மணிவாசகன் என்ற புதினத்தில் வேலையாள் கோவிந்தனிடம் மணிவாசகத்தைக் கொல்லும்படி அவனது சித்தப்பா கூற அவன் முதலாளி மீண்டும், மீண்டும் பாவம் செய்யவேண்டாம் கைகேயி எவ்வாறு தன் மகனுக்குப் பட்டம் கட்டவேண்டும் என்பதை மறைமுகமாகச் சுட்டினாளோ அதுபோல வசந்தமாளிகையை விற்கவேண்டும் தடையாக நிற்காதே என்றால் ஓடிவிடுகிறான் என்று உரைக்கும் இடத்து“ஆழிசூழ் உலகெலாம் பரதனே ஆள”[41] என்ற கம்பராமாயணப் பாடல் மேற்கோளாகக் காட்டப்பெற்றுள்ளது.

இருபது வருஷங்கள் புதினத்தின் கதைத்தலைவன் கேசவராவ் விடுதலைப் போராட்டத்தில் ஈடுபடச் செல்லும் முதல் நாள், அவர் மனைவி கண்ணீருடன் பேசும் போது “இளம் அபிமன்யூ யுத்தத்திற்குப் புறப்படும் போது மரணம் நிச்சயம் என்று தெரிந்து சக்கர வியூகத்தில் பிரவேசிக்கும் போது உத்தரை கண்ணீருடன் ஜெயமாலை அணிவித்தாள் தர்க்கம் செய்யவில்லை”[42] அதனால் நீயும் என்னை விடுதலைப் போருக்கு அனுப்பி வை என்று கூறுமிடத்து மகாபாரத நிகழ்வு சுட்டப் பெற்றுள்ளது.

நெஞ்சின் அலைகள் புதினத்தில் இந்தியா நோக்கி பர்மாவிலிருந்து வரும் படைகளுக்கு உடனே இரங்கூனுக்குத் திரும்புங்கள் என்று நேதாஜியிடமிருந்து வந்த செய்தியைக் கேட்டவுடன் அவர்கள் உள்ளம் பெற்ற உணர்வை “போரில் தன் மகன் புறமுதுகு காட்டினான் என்ற பொய்ச் செய்தி கேட்டு முலையறுக்கத் துடித்த தமிழச்சியின் வழித் தோன்றல்கள்இதைக் கேட்டுப் பதை பதைத்தார்கள்”[43]என்ற விடத்து புறநானூற்றின் கருத்து சுட்டப்பட்டுள்ளது.

மணிவாசகன் என்ற புதினத்தில், மணிவாசகன் தனது சித்தப்பாவும், சித்தியும் பேசுவதைத் தற்செயலாகக் கேட்க நேர்ந்தபோது, அவனது உயிர் ஆபத்தில் இருப்பதை உணர்ந்து உள்ளே சென்று நேரிடையாகக் கேட்டுவிடலாமா என்று எண்ணியவன்.

‘‘ஒறுத்தார்க் கொரு நாளை இன்பம் பொறுத்தார்க்குப்

பொன்றும் துணையும் புகழ்’’[44] என்ற குறள்நினைவில் வர அவன் திரும்புகிறான் என்ற இடத்து ஆசிரியர் திருக்குறளை மேற்கோளாகக் கையாண்டுள்ளார்.

மகுடபதியில் கதைத்தலைவன் மகுடபதியின் அறிவையும், ஆற்றலையும் விளக்குமிடத்து அசட்டுத் தைரியம் கூடாது என்பதை அவன் பாட்டன் பெரியண்ணனிடம் கூறும் போது ‘‘வள்ளுவரின் அஞ்சுவது அஞ்சாமை என்ற திருக்குறளைக் கையாளுகிறார்’’[45] இங்கு முன்னோர் மொழி அப்படியே கையாளப்பட்டுள்ளது.

அலைஓசையில் கிட்டாவையரின் மறைவைச் சுட்டுமிடத்து திருமூலரின் ‘‘கிடக்கப்படுத்தார் கிடந்தொழிந்தாரே’’[46]என்ற பாடல் உரைக்கப்பட்டுள்ளது.

அன்பு நிலையம் அல்லது வாழும் வகை என்ற புதினத்தில் சிங்காரம் தனது குருநாதர் வருகையை எதிர்பார்த்துக் காத்திருக்கும் வேளையில் அவரது வருகையை அறிந்தவுடன் சிங்காரத்தின் உணர்வுகள் ‘‘மெய்தான் அரும்பி விதிர் விதிர்த்து’’[47] என்னும் மாணிக்கவாசகரின் பாடல் வழி எடுத்துரைக்கப் பெற்றுள்ளது.

தியாகபூமியில் மழை பெய்யாத போது விராட பருவம் படித்தால் மழை பெய்யுமாமே என்று நல்லான் என்பவன் சம்புசாஸ்திரியிடம் கூறுகிறான். அவனுக்குப் பதில் அளிக்கும் போது சம்புசாஸ்திரி ஔவையார் கூறிய

‘‘நல்லார் ஒருவர் உளரேல் அவர் பொருட்டு

எல்லாருக்கும் பெய்யும் மழை''[48] என்ற மூதுரையைக் கையாண்டுள்ளார்.

புரட்சிப் பெண்ணில் தந்தையின் கூற்றுப்படி சரப சாஸ்திரியுடன் சேர்ந்து அவரது செயல்களைக் கண்காணிக்கத் தொடங்கிய ஜெயலெட்சுமி தன் காதலன் நிலை இப்படி உள்ளதே என்று நினைக்குமிடத்து ''நிதியும் கணவனும் நேர்ப்படினும் தன் விதியின் பயனே பயன்''[49] என ஔவை எனக்காகத்தான் கூறினாளோ என்று தம் விதியை நொந்து வருந்துமிடத்து ஔவையின் கூற்று எடுத்துரைக்கப் பெற்றுள்ளது.

வானவீதியில் எழில் தன் மாமாவின் உதவியுடன் ஆற்றங்கரையில் உணர்வற்றிருந்த பண்ணனைக் காப்பாற்றிப் பின் அவனைப் பற்றி வினவும் இடத்து அவன் ''உள்ளொன்று வைத்து புறமொன்று பேசுவார்

உறவு கலவாமை வேண்டும்''[50] என்ற இராமலிங்கனார் அடியைப் பின்பற்றுபவன் என்று கூறும் இடத்து இராமலிங்கனார் பாடல் சுட்டப்பட்டுள்ளது.

வளைக்கரம் புதினத்தில், இராதாநாத் இறந்த இடத்தைப் பார்க்கச் செல்லும் போது மாதவன் யோசனையில் இருக்கிறான். சாந்தினி என்ன வென்று கேட்க, ''எழுதிச் செல்லும் விதியின் கை

எழுதி எழுதி மேற் செல்லும்''[51]

என்ற பாராசீக கவிஞன் உமர்கையாம் பாடல்களைச் சுட்டுகிறான்.

தேசபக்தன் கந்தனில் ''நாம் சமயத்தைக் கைவிடாது இக்கிளர்ச்சியாகிய பாற்கடலில் நாம் உழைப்பாகிய மத்தை இட்டு அதன் பயனாக மேலெழும் சுயேச்சை என்னும் அமுதத்தைத் தடையின்றித் துய்க்க வேண்டும்''[52] என்ற இடத்துத் தேவர்களும், அசுரர்களும் திருப்பாற் கடலைக் கடைந்து அமுதம் பெற்ற செய்தி மறைமுகமாகச் சுட்டப்பட்டுள்ளது.

தேசபக்தன் கந்தனில் ரங்கனிடம் பேசும் போது, “நமது வாழ்க்கையெனும் வனாந்தரத்தில் நாம் போடும் வாய்ப்பந்தலே நந்தவனமாகும். வாய்ச் சொல்லால் ஆக்கவும் கூடும், அழிக்கவும் கூடும்”[53] என்ற இடத்து பாரதியின் வாய்ச் சொல்லில் வீரரடி என்ற கருத்து மறைமுகமாகச் சுட்டப்பட்டுள்ளது.

பெண் என்ற புதினத்தில் கதைத்தலைவன் சந்தானத்திடம் கனகம் என்ற பெண் தான் வரைந்த ஓவியங்களைக் காட்டி வருகையில், கடைசி ஓவியமாகிய ‘எப்போது வருவான் கண்ணன்’ என்ற தலைப்பில் உள்ள படத்தின் கீழ்“கனவு கண்டதிலே ஒரு நாள் கண்ணுக்குத் தோன்றாமலே”[54] என்று பாரதியின் கண்ணன் பாட்டின் வரிகளைச் சுட்டியிருப்பது குறிப்பிடத்தக்கது.

கோபுரதீபத்தில் சுந்தரம் சுப்பரமணியசிவாவின் பேச்சைக் கேட்டு விடுதலை போரில் ஈடுபடலானான் என்றவிடத்து “மேலோர்கள் வெஞ்சிறையில் வீழ்வதுவும்

நூலோர்கள் செக்கடியில் நோவதுவும் காண்கிலையோ”[55]

என்ற பாரதியின் பாடலடிகள் மேற்கோளாகச் சுட்டப்பட்டுள்ளன.

தியாகத்தழும்பு என்ற புதினத்தில் சுதந்திரம் பெற்ற முறையை இராமகிருஷ்ணன் தேவதாஸ் என்பவரிடம் கூறும்போது,

“தண்ணீர் விட்டோ வளர்த்தோம்?

சர்வேசா! இப்பயிரைக்

கண்ணீராற் காத்தோம்;

கருகத் திருவுளமோ?”[56]

என்ற பாரதியின் கூற்றினை அப்படியே எடுத்துக் கூறுகிறார்.

புதுவெள்ளத்தில் அடிபட்டுக் கிடக்கும் முனியாண்டியைத் தம் ரிக்ஷாவில் போட்டுக் கொண்டு செல்லும் முருகையன் உணர்வைச் சுட்டும் இடத்து ‘‘இந்த நாட்டில் இனி மனிதன் உணவை, மனிதன் பறிக்கமாட்டான், மனிதன் பட்டினிகிடக்க மனிதன் சாப்பிடமாட்டான், மனிதன் நோக மனிதன் பார்க்கமாட்டான்; சுதந்திரம் வந்து விட்டது சர்வோதயம் வந்துவிட்டது என்று துள்ளிக்கொண்டே ஓட்டினான்’’[57] என்ற இடத்துபாரதியின் பாடல் கருத்து சுட்டப்பட்டுள்ளது.

சோலைமலை இளவரசியில் குமாரலிங்கத்தைப்பிடிக்க ஆங்கிலேயர்கள் சூழ்ச்சி செய்து அவன் ஒளிந்து கொண்டிருந்த ஊரில் வந்து நாடு சுதந்திரம் அடைந்து விட்டது, குமாரலிங்கத்தை ஜவஹர்லால் நேரு பாராட்டுவதற்கு அழைத்து வரக் கூறினார் என்ற முரசறிவிப்பதைக் கேட்டு குமாரலிங்கம் மகிழ்ந்தான் என்ற இடத்து,

‘‘ஆடுவோமே பள்ளு பாடுவோமே

ஆனந்த சுதந்திரம் அடைந்துவிட்டோமென்று’’[58]என்ற பாரதியின் பாடலடிகள் மேற்கோளாக உரைக்கப்பட்டுள்ளது.

எங்கே போகிறோம் என்ற புதினத்தில் விடிவெள்ளி பத்திரிகையை விட்டு வெளி வந்தவனுக்குச் சிதம்பரத்தின் தந்தையும் அவரது நண்பரும் புது பத்திரிகை ஆரம்பிக்கத் தாங்கள் உதவுவதாகக் கூறிவுடன், அவன் உள்ளத்தில் ஏற்பட்ட மனநிலையை ‘‘விட்டு விடுதலையாகி நிற்பாய் இந்த சிட்டுக் குருவியைப் போல’’[59]என்ற பாரதியின் கூற்று கொண்டு விளக்குவர் அகிலன்.

பாதையில் பதிந்த அடிகளில் மணி ஆண்களுக்குச் சரியாக காங்கிரஸ் ஊர்வலத்தில் கலந்து கொண்டமை

‘‘தாதரென்ற நிலைமைமாறி ஆண்களோடு பெண்களும்

சரிநிகர் சமானமாக வாழ்வம் இந்த நாட்டிலே''[60] என்ற பாரதியின் பாடலோடு பொருத்திக்காட்டப்படுள்ளது.

**பழமொழி**

மக்களின் தொன்று தொட்டு வரும் அனுபவங்களைச் சுருக்கமாகக் குறித்துவரும் சொற்றொடர்களே பழமொழியாகும். இது சமுதாயத்தின் தோற்ற காலத்திலிருந்து தொடர்ந்து வருவது. ஏட்டிலக்கியத்திலும் எடுத்தாளப் பெறுவது நுட்பம், அழுத்தம், எளிமை ஆகிய பன்புகளை உடையது. தொல்காப்பியம் பழமொழியினை முதுமொழி எனக்கூறும். பழஞ்சொல், முதுசொல், சொலவு, வசனம், சொலவடை போன்ற சொற்களும் பழமொழியைக் குறிக்க வழங்கி வருவனவாகும். சான்றோர்களால் முற்காலத்தில் வழங்கப்பட்டுவந்த பழமையான மொழி பழமொழியாகும். ''ஒருநாட்டின் பழம் பெரும் செல்வம் பழமொழிகள் ஆகும்.இவை பெரும்பாலும் பட்டறிவின் பயனாக மக்களால் படைக்கப் பெற்றவை. எதுகை, மோனை, ஓசை, சொல்நயம், சுவை ஆழ்ந்த கருத்துக்கள் முதலியவை நிறைந்த சொற்றொடர்களே பழமொழியாகும். பழமொழிகளைக் கொண்டு மக்களின் நாகரீகத்தையும் பண்பாட்டையும் நன்கறியலாம். வரலாற்று நிகழ்ச்சிகளையும் சில பழமொழிகள் காட்டுகின்றன. அவற்றால் அவற்றின் காலங்களையும் கணக்கிடலாம்''[61] என்கிறது கலைக்களஞ்சியம்.

பழமொழிகள் பெரும்பாலும் அறிவுரைகளையும், அறவுரைகளையும் கொண்டிருக்கும். எழுத்தறிவுக்கு இயற்கை அறிவு இளைத்ததில்லை என்பதைப் பழமொழிகள் பறைசாற்றுகின்றன. பழமொழிகள் அச்சமுதாயத்தினரின் அனுபவமுதிர்ச்சியையும், அறிவுக்கூர்மையையும் எடுத்து விளக்குவதாக அமைகின்றன. ''வாழ்க்கைப் பாதையில் நெருக்கடி நேரங்களில் பழமொழிகள் அனைவருக்கும் கைவிளக்காகப் பயன்படுகின்றன.

இதனை உரை பாட்டு இரண்டிலும் பயன்படுத்தியுள்ளனர். எப்போதோ, யாராலோ உண்டானவை எனினும் இவற்றை அனைவரும் ஒப்புக்கொள்கிறார்கள். அதுவே இதன் சிறப்பு. விளக்கமுடியாத கருத்துகளை விளக்கப் பழமொழிகள் பயன்படுகின்றன. உள்ளத்து உணர்வுகளை வெளிக்காட்ட உதவுகிறது''[62]என்பது பழமொழிகளின் சிறப்பினை விளக்கும்.

எடுத்துக் கொண்ட பொருளைச் சுருக்கமாகவும் தெளிவுடனும், சுவையுடனும் பழமொழிகள் விளங்கவைக்கின்றன. சூழமைவிற்கு ஏற்றவாறு பழமொழிகளை எடுத்தாண்டால் அந்த சூழமைவை அல்லது பொருளை விளக்க அவை உதவும் மக்களை நல்வழி படுத்துவதாக விளங்கும் தாமறிந்த பழமொழிகளை புதின ஆசிரியர்கள் சூழலுக்கு ஏற்பப்படைப்பினுள் இணைத்து வெற்றி பெற்றுள்ளனர். ஆய்விற்கு எடுத்துக்கொண்ட புதினங்களில் இடம் பெற்றுள்ள பழமொழிகள் பின்வருமாறு.

மணிவாசகன் புதினத்தில் மணிவாசகன் தன்னை மறந்து வேறொருவனை மணந்து கொள் என்று தன் காதலி சாரதாம்பாளிடம் கூறியதும் அவள் நிலையை விளக்கும் போது ''மண் குதிரையை நம்பி ஆற்றில் இறங்கியது போல'', ''இடியேறுண்ட நாகம் போல்''[63] என்ற பழமொழிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

தியாகபூமியில் இராஜாராமய்யர் வாழ்வில் பற்றற்று இருந்ததால் நிர்வாகப் பொறுப்பை மனைவி தங்கம்மாள் ஏற்றார் என்பதை விளக்கும் இடத்து ''தாமரை இலைத் தண்ணீர் போல''[64] வாழ்ந்தார் என்ற பழமொழியை ஆசிரியர் கையாளுகிறார்.

அன்புநிலையம் (அ) வாழும் வகை என்ற புதினத்தில் பகதூரு பங்காருவின் ஆளான தேவுடு ஐயனை குப்பத்து மக்கள் அடித்துத் திட்டும் போது அவர் அட பயல்களா''விநாசகாலே விபரீத புத்தி''[65] என்ற

பழமொழியின் படிச் செயல்படுகிறீர்கள் நாளை எஜமான் இராணுவப்படையைக் கொண்டு சுட்டெரிப்பார் என்று கூறும் இடத்து பழமொழி கையாளப்பட்டுள்ளது.

மண்ணின் புதல்வர்கள் என்ற புதினத்தில் கதைத்தலைவி சுலோசனா தன் அறையில் உட்கார்ந்து யோசித்துக் கொண்டிருக்கும் போது அவளைப்பற்றிக் கவலையுடன் அவள் தாய் தந்தையிடம் கேட்கும் போது அவர் இந்த வியாதி என்னிடமிருந்து பிரபாகருக்கும் அவனிடமிருந்து உன் பெண்ணுக்கும் அவளிடமிருந்து உனக்கா? என்று கேட்கிறார். அதற்குப் பதில் கூறும் போது ‘‘ஊருடன் கூடி வாழவேண்டாமா’’[66] என்ற பழமொழி சுட்டப் பெறுகிறது.

தேசபக்தன் கந்தனில் கரியன் என்பவனுக்கு ஆக்கூர் ஸ்டேசனில் பாயின்ட்ஸ்மன் வேலையும், போர்ட்டர் வேலையும் கொடுப்பதாக உத்தரவு வந்ததும் அது தன் கௌரவத்திற்குக் குறைவு என்றாலும் வந்ததை விடக் கூடாது என்று ஏற்றுக் கொண்டான் என்ற இடத்து ‘‘நாளை வரும் பலாக்காய்க்கு இன்று வரும் களாக்காய்மேல்’’[67] என்ற பழமொழி சுட்டப்பட்டுள்ளது.

பெண் புதினத்தில் வத்சலா தன் கணவனைப் பிரிந்திருக்கும் வேளையில் அவள் தோழி ஸ்டெல்லா தன் காதலனைப் பற்றிக் கூறும் போது ஆம் நாமும் அப்படித்தானே இருந்தோம். இது இளமையில் உள்ள இயற்கை என்று நினைக்கும் இடத்து ‘‘தூரத்துப் பச்சை கண்ணுக்கு அழகுதான்’’[68] என்ற பழமொழியை நினைவு கூர்வதாகச் சுட்டப்பட்டுள்ளது.

அபலையின் கண்ணீர் என்ற புதினத்தில் இன்ஸ்பெக்டர் தன்ராஜ் தன் மீது தவறில்லை என்பதையும், சிவராஜ் சூழ்ச்சியில் சிக்கியுள்ளான் என்பதையும் உணர்த்த, பொய்க் கடிதங்கள் எழுதிக் கொடுத்த அம்புஜம் என்ற சிறுமியை அழைத்து வருகிறான் சிவராஜ் இவளை எதற்கு அழைத்து

வந்தீர்கள் என்ற இடத்து கொஞ்சம் பொறு தம்பி என்று கூறும் போது ‘‘பொறுத்தார் பூமி ஆள்வார்’’[69]என்ற பழமொழி கையாளப்பட்டுள்ளது.

சர்க்கா என்ற புதினத்தில் நல்ல திறமைசாலிகள் இல்லாததால் சுந்தரராஜன் நிலபுலன்களை நாட்டாண்மை பொன்னம்பலம் தான் நிர்வாகம் செய்து வந்தான் என்பதைச் சுட்டும் இடத்து ‘‘ஆளில்லா ஊருக்கு இலுப்பைப்பூ சர்க்கரை’’[70] என்ற பழமொழி கையாளப்பட்டுள்ளது.

இன்ப நினைவு புதினத்தில் கதைத்தலைவி கமலம் இராமநாதன் மீது கொண்ட காதலால் தன் கணவனிடம் நடந்து கொண்ட முறையை‘‘தாமரை இலை நீரைப் போல் மனம் ஒட்டாத நிலையில் நடந்து கொண்டாள்’’[71] என்ற பழமொழியின் வழி உரைப்பர் அகிலன்.

அலை ஒசையில் ராகவன், சீதா, சூரியா அனைவரும் பேசிக் கொண்டிருக்கும் போது சீதா சூரியாவிடம் டில்லியைச் சுற்றிப் பார்த்திருக்கிறாயா என்று கேட்டதற்கு அவன் இல்லை என்றவுடன் எங்களுடன் நீயும் வா நாளை செல்வோம் என்ற இடத்து ‘‘பழம் நழுவி பாலில் விழுந்தது போலாயிற்று’’[72] என்னும் பழமொழி சுட்டப்பட்டுள்ளது.

கோபுரதீபத்தில் சுந்தரம் அம்மைய நோயால் தாக்குண்ட போது பத்மாவின் தோழி வீட்டில் குறுக்குத் துறையில் அவனைத் தங்கச் செய்கின்றனர். அப்பொழுது தன் நிலையைப் பற்றி நினைத்து வருந்தும் இடத்து ‘‘யானை வாயில் நுழைந்த கரும்பாகிவிட்டேன்’’[73] என்ற பழமொழி கையாளப்பட்டுள்ளது.

தியாகத்தழும்பு புதினத்தில் தியாகராஜன் பிரகாசம் அவர்களைப் போலீஸ்காரர்களிடமிருந்து காப்பாற்றிய பிறகு உதயவனத்தைச் சேர்ந்தவர்களைத் தேடுவதற்காகக் கிளம்பும்போது அவர்களே எதிரில்

வந்தனர் என்பதைச் சுட்டும் போது “தேடப்போன மூலிகை காலில் சிக்கியது போல”[74] என்ற பழமொழி கையாளப்பட்டுள்ளது.

சோலை மலை இளவரசியில் கதைத்தலைவன் குமாரலிங்கம் ஊர் ஊராகச் சென்று பிரச்சாரம் செய்யும் போது பாரதத்தாயின் அடிமை விலங்கைத் தகர்க்கும் காலம் வந்துவிட்டது இதுதான் சமயம் புறப்படுங்கள் என்று கூறும் போது “ஆறிலும் சாவு நூறிலும் சாவு”[75] என்ற பழமொழி சுட்டப்பட்டுள்ளது.

இருபது வருஷங்கள் என்ற புதினத்தில் கோவிந்தசாமி “விருந்தும், மருந்தும் மூன்று நாள்”[76] என்பார்கள். மூன்று நாளா, மூன்று வேளையா, நானோ நாலுநாள் இருக்கப் போகிறேன் என்று நகைச்சுவையுடன் கூறும்இடத்து பழமொழி அமைந்துள்ளது.

ஆத்மாவின் ராகங்களில் கதைத்தலைவன் இராஜாராமன் அமராவதி சிறையில் இருக்கும் போது ஊரைப்பற்றியும் நண்பர்களைப்பற்றியும் நினைத்துக் கொண்டிருந்தான் என்பதைக் கூறும் இடத்து “பசித்தவன் பழங்கணக்குப் பார்ப்பது போல்”[77] என்ற பழமொழி சுட்டப்பட்டுள்ளது.

கல்லுக்குள் ஈரம் புதினத்தில் ரங்கமணி தீக்ஷிதரிடம் என் அப்பாவின் ஆத்மா சாந்தியடைய நான் இன்னும் ஒன்றும் செய்யவில்லையே என்று வருந்துபவன் “பழிக்குப்பழி இரத்தத்துக்கு இரத்தம்”[78] வாங்கியே தீரவேண்டும் என்று கூறும் இடத்து பழமொழி சுட்டப்பட்டுள்ளது.

வளைக்கரத்தில் மாதவன் டிஸௌஸாவிடம் சாத்வீக முறையிலேயே போராடுவோம் என்று கூறும் போது டிஸௌஸா இந்த சாத்வீகப் போராட்டத்தில் தான் “சாண் ஏறினால் முழம் சறுக்கி இருக்கிறோமே”[82] என்றுரைக்குமிடத்து பழமொழி சுட்டப்பட்டுள்ளது.

பாதையில் பதிந்த அடிகளில் தொழிற்சங்கங்களை ஏற்படுத்த நினைத்த கதைத்தலைவி மணி தொழிற்சாலைக்குச் சென்று அவர்களிடம் பேசிக் கொண்டிருக்கும் போது ‘‘வெந்ததைத் தின்னிட்டு விதி வந்தாச் சாவோம்’’[80] என்று இருக்கக்கூடாது என்ற பழமொழியைச் சுட்டி அதன்வழி அவர்கட்கு வழி காட்டுகிறாள்.

வானவீதியில் சிறையிலிருந்து திரும்பிய பண்ணனிடம் எழிலின் மாமா நாளைக்கே நீ உன் பழைய வேலைக்குச் செல்லலாம் என்று கூறியதைக் கேட்ட எழில் உடல் மெலிந்திருக்கும்போது எவ்வாறு வேலைக்குச் செல்வது என்பதைக் கூறும் நிலையில் ‘‘சுவரை வைத்துத்தானே சித்திரம் எழுத வேண்டும்’’[81] என்ற பழமொழி பயன்படுத்தப்பட்டுள்ளது.

இருவிழிகளில் ஆனந்தவல்லியின் பிறப்பினைப் பற்றி கூறும் போது ‘‘நத்தை வயிற்றில் முத்து’’,‘‘கள்ளிவயிற்றில் கற்பூரம்’’‘‘கழுகு வயிற்றில் கிளி’’[82] என்பன போன்ற பழமொழிகள் கூறப்பட்டுள்ளன.

மணிக்கொடியில் அர்ச்சனா காங்கிரஸ் இயக்கத்தில் சேர்ந்ததைக் கேட்டு இராமசாமியின் அக்கா, ‘‘புலியைப்பார்த்துப் பூனை சூடுபோட்டுக் கொண்டது போல’’[83]என்ற பழமொழியைக் கூறுகிறார்.

வந்தேமாதரத்தில் வாசுதேவன் தன் காதலைப்பற்றி சுப்பிரமணிய பாரதியிடம் கூறியதும் அவர் ‘‘உயிர்காப்பான் தோழன்’’[84] என்ற பழமொழியைக் கூறி அவனுக்குத் திருமணத்தை நடத்தி வைக்கிறார். இங்ஙனம் மக்கள் வழக்காற்றில் உள்ள பல்வேறு பழமொழிகளைப் புதின ஆசிரியர்கள் தம் கருத்தை உணர்த்தவும், கதைப்பொருள் சிறக்கவும் எடுத்துக் கையாண்டுள்ளமை சிறந்த உத்தி முறையாக விளங்குகிறது.

**வருணனை**

ஒரு சொல் அல்லது ஒரு தொடர் மூலம் படிப்போரின் கண்முன் காட்சிப் படுத்திகாட்டும் வகையில் அமையும் விரிவான விளக்கம் வருணனை ஆகும். ‘‘தான் அனுபவித்த ஒன்றை வரிசைமாறாமல் அதன் உட்கூறுகளையெல்லாம் பிரித்துப்பிரித்துக் கூறுவது வருணனை முறையாகும். அனுபவ எண்ணங்களைப் பிறர் புலன்களுக்குப் படும்படி சுவை படச் சொல்வது வருணனை உரைநடையாகும்’’[85] ஒரு படைப்பாளி தாம் உலகில் உணர்ந்த வற்றையும் அனுபவித்த வற்றையும் பலரும் உணரும் வண்ணம் கலையாகப் படைக்கிறார். அப்படைப்பில் தாம் உணர்ந்ததைப் பிறர் அறியச் சில கற்பனைகளைச் சேர்த்து உணர்ச்சிப் பூர்வமாகவும் அனுபவப்பூர்வமாகவும் வெளியிடுகின்றார் என்பதை ‘‘வருணணை என்பது தான் கூற வந்த செய்திகளைக் கற்பனைப் படிவமாக்கி கலைத்தன்மையோடு கூறுவது ஆகும். இது கற்பனையின் செயல் எனலாம்’’[86] என்றுரைப்பர். நா.பிச்சமுத்து. இலக்கியம் சிறக்க வருணனை அவசியம். வருணனை நடை என்பது கற்பனைக்கு இடம் தருகின்ற இலக்கிய உத்தியாகும்.

‘‘முருகியல் உணர்ச்சி மனிதன்கண் எழுவதால் தன்னுடைய விளக்கங்களுக்கு இலக்கியன் அழகிய வடிவங்கள் அமைக்கின்றான். இதனால் இலக்கியம் கலையாகின்றது’’[87] என்பர் பா.உதயகுமார். ‘‘புலன்களால் உணர்ந்த வற்றை அல்லது புலன்களின் வாயிலாக உணரும் புறக்காட்சிகளைச் சொற்களில் மொழி பெயர்த்துக் காட்டுவதே வருணனையாகும்’’[88] எனவே படைப்பாளி வெளிப்படுத்தும் இலக்கியத் தன்மைகளில் ஒன்றாக வருணனை அமைகின்றது. இவ்வருணனைகளை இயற்கை வருணனை, இடவருணனை, தோற்ற வருணனை எனப் பல வகைகளில் அடக்க இயலும்.

கதைகளில் உருவ வருணிப்பு, இடவருணனை முதலியன அமையும். பாத்திரங்களையும் இடத்தையும் காலத்தையும் அவற்றின் பின்னணியோடு புரிந்து கொள்ள வருணனை உதவுகிறது. வருணனை அளவோடு அமைதல் வேண்டும். அடிக்கடி இடம் பெறும் வருணனை தேவையற்றது இயல்பான நிகழ்ச்சிக்கு வருணனை தேவையில்லை. வருணனை கதைக்கு முழுமையாகப் பயன்பட வேண்டும். கதையின் கட்டுக்கோப்புக்கு அது துணை புரிய வேண்டும். கதைக்கருவுக்கும் வருணனைக்கும் நல்ல உறவு அமைதல் வேண்டும். கதையைச் சூழலோடு புரிந்து கொள்ளவும் பாத்திரங்களை நன்கு அறிந்து கொள்ளவும் வருணனை துணை புரிகின்றது. கதை ஆசிரியனின் கலைஉணர்வு, வருணனை மூலமாக வெளிப்படுகின்றது. ஆய்விற்கு எடுத்துக்கொண்டுள்ள புதினங்களில் புதின ஆசிரியர்கள் இயற்கையையும், ஊர்களையும், மனிதத் தோற்றங்களையும் அழகுபட வருணித்துள்ளனர்.

**இயற்கை வருணனை**

மணிவாசகன் புதினத்தில் மணிவாசகன் தாமிரபரணி ஆற்றின் கரையில் அமர்ந்து இறைவனைத் துதிக்கும் நிலையில் அவனைச் சுற்றியிருந்த இயற்கைச் சூழல்‘‘சல சல என்று ஓடும் தண்ணீரானது சந்திரனது வெள்ளிக்கிரணங்களால் உருக்கி ஓடவிட்ட வெள்ளி குழம்போ என்ற ஐயத்தை உண்டாக்கிற்று. அகன்ற வெண்மணல் மருங்கு இரண்டு பக்கங்களிலும் நெருங்கிய சந்திரனொளியாற் கண்ணிற்குத் தோற்றும் சோலைகள் மகிழ்ச்சியளிப்பனவாய் இலங்கின’’[89] என்று வருணிக்கப்பட்டுள்ளது.

தியாகபூமியில் இளவேனிற் காலம், சுக்கிரன்,‘‘இதோ மறையப் போகிறேன் என்று கண்சிமிட்டி சமிக்ஞை செய்தது. பறவைகளின் ஒலிகள் பலவித ஸ்வரங்களில் இருந்தன. விருட்சங்களிலும், செடிகளிலும் இருந்த பூ

மொக்குகள் பட்சிகளின் இனிய கானத்தைக் கேட்டு ஆனந்தத்தினால் சிலிர்த்தன. வீசிய இனிய இளந்தென்றல் காற்று சற்று விரிந்த பூ இதழ்களின் மீது தவழ்ந்து சென்று நாலா பக்கமும் நறுமணத்தைப் பரப்பின"[90] என வருணிக்கப்பட்டுள்ளது.

மண்ணின் புதல்வர்கள் புதினத்தில் சூரியனின் மறைவு "வாலிபத்தில் கொட்டம் அடித்த மனிதன் வயோதிகத்தில் தேகம் சுருண்டு அடங்குவது போல் உச்சியிலிருந்து நெருப்பைக் கொட்டிய சூரியனின் கதிர்கள் நிறம் மாறி சுருங்கிக் கொண்டிருந்தன"[91] என்று வருணிக்கப்படுள்ளது.

பெண் புதினத்தில் வத்சலா, தன் தோழியின் கிராமத்திற்குச் செல்லும் போது காணும் காலை நேரக் காட்சி "இரவில் கண்விழித்த காட்டு மல்லிகையின் நறுமணம் காற்றில் கலந்து கொண்டிருந்தது; திடீர் என்று ஒரு முயல் பாய்ந்து சென்றதைப் புதரிடுக்கிலிருந்த கீரிப்பிள்ளைகள் பயந்து பயந்து எட்டிப்பார்த்தன. வில்லென வளைந்து இருந்த வானமுகத்தில் அம்புகள் பாய்வது போல் கூட்டங் கூட்டமாகக் கொக்குகள் பறந்தன. பறவைகளின் கீதம் எங்கும் நிறைந்திருந்தது"[92] என்று வருணிக்கப்பட்டுள்ளது.

சர்க்காவில் சூரிய உதயமும் அதிகாலையும் "கொக்கரக்கோ என்று சேவல் ஆனந்தக் குரலில் கூவியது. மரங்களில் பதுங்கிக் கிடந்த பறவைகள் சிறகுகளைப் பட பட வென்று அடித்துக் கொண்டு குதூகலத்தில் கிளைகளை விட்டுப் பறந்து சென்றன. எங்கும் பரவியிருந்த புல் தரைகள் இரவு பெய்திருந்த பனியினால் பச்சைப் பசேலென்று கண்களைக் கவர்ந்து கொண்டிருந்தன. அந்தப் புல்லினத்தின் சிரத்துக்கே மகுடம் வைத்தாற் போல் பனிநீர்த் துளிகள் சூரியன் வெளிச்சத்தில் பள பள வென்று மின்னிக்

கொண்டிருந்தன; அவை அரண்மனையில் விரிக்கப்பட்டிருந்த பச்சைக் கம்பளம் போல் உள்ளது''[93] என்று வருணிக்கப்பட்டுள்ளது.

வானவீதியில் ''மரங்கள் அடர்ந்த சோலையிலே படர்ந்திருக்கும் நிழலைப் போன்று அந்தி இருள் உலகில் பரவிக் கொண்டிருந்தது பள்ளிக்கூடம் விட்டதும் சின்னஞ்சிறு குழந்தைகள் பலவகையாகக் கத்திக் கொண்டு வீட்டிற்கு ஓடுவதையொப்ப வானத்திலே பச்சைக்கிளிகளின் கூட்டம் ஒன்று கத்திய வண்ணம் சென்று கொண்டிருந்தது''[94] என்று அந்திநேரம் வருணிக்கப்பட்டுள்ளது.

கல்லுக்குள்ஈரம் புதினத்தில் ''வானம் மழையைக் கொட்டிவிட்டு நிர்மலமாகிவிட்டது, மரத்திலிருந்த பறவைகள் உடலில் இருந்த ஈரத்தைச் சிலிர்த்து உதறிக்கொண்டன. எங்கு பார்த்தாலும் குளிர்ச்சி பள பளப்பு ஈரமண்ணின் வாசனை குளித்துவிட்டு வரும் பெண்ணின் கேசத்திலிருந்து தண்ணீர் சொட்டுவது போல மரங்களிலிருந்து மழைத் துளிகள் சொட்டிக் கொண்டிருந்தன.''[95]என்று வருணிக்கப்படுகிறது.

வளைக்கரம் புதினத்தில் ''ஜுவாரி நதிஈசன் முடி மீது அலங்கரித்துக் கொண்டிருந்த நிர்மால்ய மாலைகளால் தன்னை அலங்கரித்துக் கொண்டு திகழ்ந்தது. கார்த்திகை மாதத்துச் சூரியன் விரிந்து பரந்து கிடக்கும் முகத்துவார நதியின் பரப்பை மெல்லச்சீண்டுபவன் போல் தன் கதிர்களால் மௌனப் பெரு மூச்சின் சிற்றலைகளைத் தழுவி பளீச் பளீச் என்று நதிப் பெண் சினந்த முகம் காட்டி வெட்டுவதைப் போன்றதொரு ஜாலத்தைச் செய்து ரசித்துக் கொண்டிருக்கிறான். நதிக்கரையின் செந்நெல் விளையும் வயல் வெளிகளெல்லாம. மரகதப்பாய் சுருண்டுபொன்னாகக் குவிந்து கிடக்கும் கோலங்கள் என வருணிக்கப்பட்டுள்ளது''[96]

கோபுரதீபத்தில் குற்றாலம் “கண்ணுக்கெட்டியதூரம் வரை ஒரே காரிருள். மலைப் பாறைகளில் மோதிப் பாய்ந்து கொண்டிருந்த அருவிகளின் ஓசை, சில்வண்டுகளின் சப்தம், இரவின் சூனிய அமைதிபரந்த மலைப்பிராந்தியம், முழுவதும் வியாபித்துக் கிடந்தது அருவிகள் சோவென்று கொட்டும் ஒலி”[97] என்று வருணிக்கப்படுகிறது.

**ஊர் வருணனை**

இருவிழிகள் புதினத்தில் சுந்தரபுரம் என்னும் ஊர்“பரந்து விரிந்த சுத்தமான நான்கு வீதிகளின் நடுவே உயர்ந்த கோபுரம் வானைத் தொட, கருணை மழை பொழியும் பெரிய சிவன் கோவிலும், அடுத்தே அளவெடுத்து வெட்டிய சதுரக் குளமும்,காண்போரைக்கவரும் கவின்மிகு காட்சிகளும், கனி வழங்கும் சோலைகளும் அதை அடுத்த நீண்டு விரிந்த வயல்களும் தெற்குப் பகுதியில் கன்னியாகுமரியை நோக்கி விரைந்தோடும் ப.்.றுளியாறும்”[98] என்று வருணிக்கப்படுகிறது.

இருபது வருஷங்கள் புதினத்தில்பெரிய குளம் என்னும் ஊர்“நாலாபுறமும் செழிப்பு வடக்கே பல்லாயிர அடி உயரமுள்ள கம்பீரமான மலைகள்; இதர திக்குகளில் சிறு குன்றுகள்; ஊரின் நடுவே மேற்கு கிழக்காக ஓடும் வராகநதி. ஊரைச் சுற்றிப் பல அழகிய ஏரிகள், அடுக்கடுக்காக நெற்பயிரின் பசுமை, வெற்றிலை கொடிக் காலின் பசுமை, தென்னையின் பசுமை”[99] என்று வருணிக்கப்பட்டுள்ளது.

**மாந்தர் வருணனை**

இன்பநினைவு புதினத்தில் “இயற்கையின் சிருஷ்டிக்கு அழகின் சிகரமாகத் தோன்றியவள் பெண் அவள் மிருதுவானவள், மென்மையானவள், தூய்மை நிரம்பியவள், மணம் நிறைந்த வண்ணமலரின் வனப்பையும் அதன்

மாசற்ற இயல்பையும் பெண்ணிடம் தான் காணமுடியும்''[100] என்று பெண் வருணிக்கப்படுகிறாள்.

அலை ஓசையில் தாரணியின் அழகு ''கார்த்திகை மாதத்துப் பூரணச் சந்திரனுடைய சந்தன நிறக் கிரணங்கள் ஒரு மந்திரவாதியினுடைய மந்திரத்தினால் பெண் உருக்கொண்டது போலத் தோன்றினாள். அவளது கண்விழிகள் பனிக்காலத்துக் காலை நேரத்தில் புல் நுனியில் நிற்கும் முத்துப் பனித்துளிகள் காலை நேரச் சூரிய கிரணங்களால் ஒளி பெற்றுத் திகழ்வது போல் பிரகாசித்தன. அப்பெண்ணின் குரல் பாலகோபாலன் தவழ்ந்து செல்லும் போது அரையில் கட்டியிருந்த கிண்கிணிகள் ஒலிப்பது போல் ஒலித்தது''[101] என்று வருணிக்கப்பெற்றுள்ளது.

ஆத்மாவின் ராகங்களில் மதுரத்தின் அழகினை ''படியேறித் திரும்பிச்சென்ற போது கருநாகமாகச் சுழன்றது அவளது பூச்சுடிய கூந்தல், வீணையாய் இயங்கிய சரீர நளினம், நிருத்தியமாக நடந்த நடையின் அழகு, சுகந்தமாய்ச் சுழன்ற நறுமணங்கள் எல்லாம் நாங்கள் உனக்குச் சொந்தம் என்று இராஜாராமனைப் பார்த்து மௌனமாகத் தவிப்பது போலிருந்தது''[102] என்று வருணிப்பர் நா.பார்த்தசாரதி.

**கற்பனை**

கற்பனை மனத்தின் வளர்ச்சிக்கு உறுதுணையாவது என்பது உளநூலார் கருத்தாகும். இக்கற்பனை குறித்து ''மனத்தின் உரம் அதன் கற்பனையாற்றலில் உள்ளது. கற்பனையால் மனம் பல பொருள்களைப் பற்றிய அறிவு பெறுகிறது. அந்த அறிவு திட்பமும், தெளிவும், வரையறையும், வளமும் உடையதாக வளர்வதற்குக் கற்பனை துணை செய்கிறது'' மேலும் கற்பனை என்பது மனிதன் தேடிப் பெறும் அணிகலன் போன்றது அன்று;

இயற்கையாகக் குழந்தைப் பருவத்திலேயே அமைந்துள்ள அழகு போன்றது''[103]என்பர் மு.வரதராசன்.

''கற்பனை குறித்து ''புலன்கள் நேரடியாக ஒரு பொருளை அனுபவியாத காலத்திலும் அந்தப் பொருளை நினைவிற்குக் கொண்டுவரும் ஒரு சக்தி அதாவது முன்னர் கண்ட அல்லது அனுபவித்த பொருளை அப்படியே மீண்டும் மனத்தில் கொணரும் தொழிலே கற்பனையாகும்''[104] என்பார் அ.ச.ஞானசம்பந்தன்.

படைப்பாளி தான் கண்ட காட்சியோடு உள்ளம் உணர்ந்தவற்றையும் கூட்டிப்படைக்கும் போது கற்பனை உருவாகின்றது. இக்கற்பனை பற்றி ''படைப்பாளியின் மன இயல்பு ஒரு காட்சியை மனக்கண்ணால் காணும் போது தாம் காணும் ஒரு காட்சியோடு மற்றொரு காட்சியை ஒப்பிட்டு நோக்கிடுவது இயல்பாகிறது. அவ்வித ஒப்பீட்டுணர்வே கற்பனையின் தோற்றமாகிறது''[105] என உரைப்பர். பா. உதயகுமார்.

''ஒருவர் தாம் காணும் நிகழ்ச்சிகளை மனத்துக்குள் கொண்டு வந்து அதற்குத் தான் விரும்பும்படி ஓர் உருவம் கொடுத்து விடுவது கற்பனையாகும். கற்பனையில் அடங்கும் எல்லாக் கருத்துக்களும் வெளிவருவதில்லை. கற்பனையில் மொழி அடக்கமுள்ள மனிதன் போன்றதாகும்''[106] என்பது அரங்க.சுப்பையா அவர்களின் கருத்தாகும்.

மண்ணின் புதல்வர்கள் புதினத்தில் ஒரு சிறந்த கற்பனை இடம் பெற்றுள்ளது. இதில் சூரியனின் மறைவைக் கூறும் இடத்து, ''இந்தியாவை நூறு ஆண்டுகளுக்கும் மேலாக ஆண்டுவரும் பிரிட்டிஷ் ஆட்சியின் அஸ்தமனம் இந்த மண்ணில் ஆரம்பமாகிவிட்டது. பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தின் அடக்கு முறை என்ற நெருப்பாலும், இந்திய மக்கள் தேசிய விடுதலைக்காகப் பெருகியிருக்கும் இரத்தப்பிரவாகத்தாலும் அந்த

சூரியன் நிறம் சிவப்பாக மாறி இருக்கிறது என்பதில் கற்பனை அமைந்துள்ளது.''[107] சூரியன் சிவப்பாக இருப்பதற்குக் காரணம் தேச விடுதலைக்கு மக்கள் ஈந்த இரத்தத்தில் அது தோன்றியது என்பது படைப்புக் கற்பனையில் சிறந்து விளங்குகிறது.

**தலைப்பிடும் உத்தி**

எழுதும் கலை பற்றி முடிந்த முடிவான கோட்பாடுகள் என்றுமே இருக்க முடியாது படைப்பாளியும், படிப்பாளியும் தான் முக்கியம். இடையே எத்தனையோ கோட்பாடுகள் தோன்றலாம், மறையலாம் என்ற கருத்து முக்கியமானது படைப்பாளன் தன் படைப்பு மூலமாகக் கதையை விவரித்துச் செல்ல சில விதிமுறைகளைக் கையாளுவதுண்டு. இவற்றுள் ஒன்று உத்தி ஆகும். உத்திகள் முறையாகவும் சிறப்பாகவும் அமைந்தால்தான் கதையின் போக்கும் மிகச் சிறப்பாக அமையும். இவ்வுத்தி குறித்து,

''ஒத்தகாட்சி உத்தி வகை விரிப்பின்''[108]

என்று தொல்காப்பியம் உரைக்கும். உத்தி என்பது குறித்து ''இது வடசொல்லின் சிதைவாகும். உணர்த்தப்படும் பொருள் இது என்று அறிதற்கும் நூற் பொருளை அதிகார முறைப்படி தருதற்கும் செய்திகளைத் திரட்டிக் கூறுதற்கும் திரட்டிக் கூறியவற்றை விரித்துக் கூறி அதனால் ஒரு பயன் உண்டென அறிதற்கும் உத்திகள் இன்றியமையாதனவாகும்.''[109] என்று வாழ்வியற் களஞ்சியம் உரைக்கிறது.

படிப்பவர்க்குச் சுவையூட்டுவதற்காக உத்திகள் அமைக்கப் பெறுகின்றன. இவை இல்லாத படைப்புகள் வாசகர்களை விரைவில் சலிப்படையச் செய்துவிடுகின்றன. உத்திகள் தான் இலக்கியங்களின் பெருக்கத்திற்கும் வேறு பட்ட சுவைகளுக்கும் மூலகாரணங்களாக உள்ளன. ''புதின ஆசிரியர்கள் எவ்வளவுதான் மேதையாக இருந்தாலும் நல்ல உத்தி

நுணுக்கங்கள் இல்லையென்றால் புதினம் சிறக்காது”[110] மேலும் கதையின் போக்கு தெளிவுறவும் கதைமாந்தர் பண்பு விளக்கமுறவும் “கதையைப் படிப்பவர்களுக்குச் சுவை ஆர்வம் ஏற்படவும், ஆசிரியர் தம் திறமையை வெளிப்படுத்தவும் உத்திகள் படைக்கப்படுகின்றன”[111] என்பர் இராமலிங்கம். உத்திகள் படைப்பாளியின் திறனை ஆற்றலை வெளிப்படுத்தாக அமைகின்றன. ஒரு கலைஞனின் படைப்பைச் சரியாகப் புரிந்து கொள்ள உதவுவது உத்தியாகும். இதனை “கலைஞன் கொண்டுள்ள திறமையின் வடிவே உத்தி அதனை அவன் ஒரு கவிஞனைப் போல் தனது சொந்த அனுபவத்தின் வாயிலாகவும் ஒரு பகுதியை மற்றவர்களின் அனுபவங்களில் பங்கு கொள்வது மூலமாகவும்பெறுகிறான். இங்ஙனம் பெறப்பட்ட உத்தித் திறன் அவனைக் கலைஞனாக்குவதில்லை. ஏனெனில் உத்திகளால் உருவாக்கப்படுகிறான். ஆனால் கலைஞன் பிறக்கிறான்.”[112] என்பார் சண்முகவேலன்.

உத்திகள் பல வகைப்படும் இவை படைப்பாளியின் திறனை, ஆற்றலை வெளிப்படுத்துவது. இதனைக் கலைத்திறன் என்றும் கூறலாம். ஒரு கலைஞனின் படைப்பைச் சரியாகப் புரிந்து கொள்ள உதவுவது உத்தியாகும். “படைக்கும் கலைஞரைப் பொறுத்தவரையில் உத்தி என்பது அவர் எடுத்துக் கொண்ட உட்பொருளுக்கேற்ப தரமாக அவர் திட்டமிடாமலே இயல்பாக அமைந்துவிடும் ஒரு வரம்பாகும் அவரை அறியாமலேயே (Unconsious) அது அவர் உள்ளத்தில் உருவாகி எழுத்தில் வெளிப்படும் புற ஒழுங்காக விளங்குகிறது”[113]ஆய்விற்கு எடுத்துக்கொண்ட புதினங்களில் இடம் பெற்ற உத்திகளைப் பின்வரும் பகுதி விளக்குகின்றது.

## புதினத்தலைப்பில் உத்தி

பாடுபொருளையோ, சுவையான செய்தியையோ, தலைப்பாக்கிக் கொண்டிருக்கும் படைப்பிலக்கியம் படிப்பவன் உள்ளத்தில் கூடுதல் கவர்ச்சியைத் தூண்டும்

ஆத்மாவின் ராகங்கள், புரட்சிப்பெண், தியாகபூமி, இருபதுவருஷங்கள், தேசபக்தன் கந்தன், மணிவாசகன், எங்கேபோகிறோம், காலவெள்ளம், இன்பநினைவு, இருவிழிகள், மண்ணின் புதல்வர்கள், மகுடபதி, இரத்தம் ஒரேநிறம், அன்பு நிலையம் (அ) வாழும் வகை, மண்ணில் தெரியுது வானம், பாதையில் பதிந்த அடிகள், அனையாச்சுடர் என்ற புதினங்களின் தலைப்புகள் கதையில் நடைபெறும் கதை நிகழ்வுகளையோ, அல்லது கதை மாந்தர்களின் பெயர்களையோ அல்லது தொடர்புடைய கருத்துகளையோ அடிப்படையாகக் கொண்டு தலைப்பிடுவது புதின ஆசிரியர்களின் உத்தி முறையாக உள்ளது.

புரட்சிப் பெண் என்ற புதினத்தில் கதைத்தலைவியான ஜெயலட்சுமி நாட்டுப்பற்றுடன் தீவிரவாதத்தை எதிர்க்கும் தன்மையை உடைய ஒரு புரட்சிப் பெண்ணாகப் படைக்கப்பெற்றிருப்பதை அடிப்படையாகக் கொண்டு கதைக்கு புரட்சிப் பெண் என்று தலைப்பிடப்பெற்றுள்ளது.

இரத்தம் ஒரே நிறம் என்ற புதினத்தின் இறுதியில் கதைத்தலைவன் முத்துக்குமரனும்,மக்கின்ஸி துரையும் இறக்கும் முன் இருவர் இரத்தமும் ஒன்று சேர்ந்தது என்று இந்தியனாக இருந்தாலும் ஆங்கிலேயனாக இருந்தாலும் இரத்தம் ஒரே நிறம் என்று கதையை முடிப்பது கதைத்தலைப்பை விளக்கும் நிலையில் அமைந்த தலைப்பாகும்.

சர்க்கா என்ற புதினத்தின் கதைத்தலைவன் தான் நடத்தும் இதழுக்கு சர்க்கா என்று பெயரிட்டிருப்பதும், புதினம் முழுவதும் சர்க்காவில்

நூல்நூற்பதற்கு உதவுவதும் செயல் சர்க்கா என்பதை மையமிட்டே புதினம் அமைந்திருப்பதால் கதைத்தலைப்பு பொருத்தமுடையதாகிறது.

தேசபக்தன் கந்தன் என்னும் புதினத்தில் கதைத்தலைவன் நாட்டிற்கு ஆற்றும் சேவை புதினம் முழுவதும் சுட்டப்பட்டுள்ளதால் தேசபக்தன் கந்தன் என்ற பாத்திரத்தின் பெயர் கதையின் தலைப்பாக அமைந்துள்ளது.

மணிவாசகன், மகுடபதி என்ற இரண்டு புதினங்களும் கதைமாந்தர்களின் பெயரையே புதினத்தின் பெயராகக்கொண்டு அமைந்துள்ளமை சுட்டத்தக்கது.

**உட்தலைப்பிடும் உத்தி**

நூலின் பெயர் மட்டுமின்றிப் புதினத்தின் உள்ளே அமைந்துள்ள பெயர்களும், அதன் உள்ளே கதை நடைபெறும் முறையை சுட்டிச்செல்வதும் உட்தலைப்பிடும் உத்தி ஆகும். இவ்வுத்தி இருவிழிகள், அலை ஓசை, கல்லுக்குள் ஈரம், இருபது வருஷங்கள், எங்கே போகிறோம், அன்பு நிலையம் (அ) வாழும் வகை கோபுரதீபம், கண்திறக்குமா, சோலைமலை இளவரசி, புதுவெள்ளம், வானவீதி என்ற புதினங்களில் அமைந்துள்ளன. கல்கியின் இரு புதினங்களாகிய தியாகபூமி, சோலைமலை இளவரசி ஆகியவற்றில் உட்தலைப்பிடும் உத்தி காணப்பெறுகின்றது.

தியாகபூமியில் கல்கி அவர்கள் கதையின் அத்தியாயங்களுக்கு கோடை, மழை, பனி, இளவேனில் என்று பெயரிட்டு, புதினத்தில் கதைத்தலைவி சாவித்திரியின் வாழ்க்கை திருமணமாகாமல் வரண்டிருந்தமை கோடை என்ற பகுதியிலும், திருமணமாகியும் பிறந்தவீட்டில் வாழ்ந்து வந்ததை மழை என்ற பகுதியிலும், பின் கணவன் வீடு சென்று துயருடன் வாழ்ந்த பகுதியைப் பனியென்ற பகுதியிலும், துயரம் நீங்கி வாழும் தன்மையை இளவேனில் என்ற பகுதியிலும் அமைந்திருப்பது உட்தலைப்பிடும் உத்தி முறைக்குச் சிறந்த சான்றுகளாகும்.

சோலைமலை இளவரசியில் குமாரலிங்கம் போலீசாரிடம் தப்பிவந்து தண்டவாளத்தைப் பெயர்த்துவிட்டு கண்காணிக்கும் நிகழ்ச்சி, 'நள்ளிரவில் வண்டிவந்தது'என்ற தலைப்பில் இடம்பெற்றுள்ளது பின் அவன் தப்பிச் சென்று சோலை மலை அடிவாரத்தில் உள்ள பாழடைந்த வீட்டில் மறைந்திருந்தமை 'அரண்மனைச்சிறை' என்ற தலைப்பின் கீழ் கூறப்பெற்றுள்ளது.

வானவீதியில் எழில், சொக்கப்பன் இருவரை மட்டுமே மையமாக வைத்துக் கதை எழுதப்பட்டிருப்பதால் புதின உட்தலைப்புகள் சொக்கப்பன், எழில் என்று பாத்திரங்களின் பெயர்களாலேயே அமைந்துள்ளமை சுட்டத்தக்கது.

புதுவெள்ளத்தில் முதல் இரண்டு அத்தியாயங்களுக்கு

'ஒத்தது அறிவான் உயிர்வாழ்வான் மற்றையான்

செத்தாருள் வைக்கப் படும்'. என்ற குறள் தலைப்பாக வைக்கப்பட்டுள்ளது. இது கதைத்தலைவன் முருகையன் பிறர் தன்மை அறிந்து செயல்படும் தன்மையுடையவனாகத் திகழ்வதை மையமிட்டு அமைந்துள்ளது.

தியாகபூமியில் அத்தியாயங்களின் பிரிவின் கீழ் அதன் தலைப்பிற்கேற்பப் பாடல்கள் சுட்டப்பட்டுள்ளமை கல்கி அவர்களின் உத்தி முறைகளில் ஒன்றாக உள்ளது. மழை என்ற அத்தியாயத்தின் கீழ்

"மாரிதான் சிலரை வரைந்து பெய்யுமொ?

காற்றுஞ் சிலரை நீக்கி வீசுமோ?"[114] என்ற கபிலர் பாடல் அமைக்கப்பட்டுள்ளமை சுட்டத்தக்கது.

**உரையாடல் உத்தி**

உரையாடலைப் பாத்திரப் பேச்சு என்றும் கூறுவர். புதினத்தில் உரையாடல் என்பது இருபாத்திரங்களுக்கு இடையில் நிகழும் பேச்சு

நிகழ்வைக் கதையில் எழுதிக்காட்டுவதாகும். சிறந்த உரையாடல் புதினத்தின் கதையை விளக்கமுறச் செய்யும் தன்மை உடையது. ‘‘புதினத்தில் வரும் நல்ல உரையாடல் அதன் வெற்றிக்குக் காரணமாக அமைகிறது’’[115] என்பர் இராலிங்கம். அவ்வகையில் விடுதலை உணர்வூட்டும் புதினங்களில் உரையாடல் உத்தி சிறப்புறப் பின்பற்றப்பட்டுள்ளது.

தியாகத்தழும்பு என்னும் புதினத்தில் ஆசிரியர் கதையின் இடையிடையே உரையாடலை அமைத்துள்ளார். ‘‘மலபார் போலீஸ் தடியால் அடித்து தியாகராஜனையும் சிவப்பிரகாச முதலியாரையும் எண்ணூர் கடற்கரையில் விட்டு விட்டுச் செல்கின்றனர். மீனவர்களால் அழைத்து வரப்பட்டுப் படுத்துக் கிடந்த தியாகராஜன் முனகவே அவனை அணுகிய சிவப்பிரகாசர்

எப்படி இருக்கிறது தியாகா! உடம்பு வலிக்கிறதா? என்று பரிவுடன் கேட்டார்.

‘ஆ’ அம்மா என்ற வேதனை முனகல் தான் பதிலாகக் கிடைத்தது.

‘கொஞ்சம் கஞ்சி புகட்டுங்களேன் களைப்புத் தீரும்’ என்கின்றனர் மக்கள். சிவப்பிரகாசர் சரி கொண்டு வாருங்கள் என்கிறார். இதோ கொண்டு வந்து விட்டோம் என்று ஓடினாள் ஒரு பெண்’’[116] என்ற இடத்து உரையாடல் முறை பின்பற்றப்பட்டுள்ளது.

## எடுத்துரை உத்தி

எடுத்துரை என்பது ஆசிரியர் கதைகூறும் முறையாகும். ஒரு பாத்திரம் தன் பழங்கதையை எண்ணிப்பார்ப்பது போல் நனவோடை முறையில் கூறுதல், கதையை நடுப்பகுதியில் தொடங்கி நனவோடை மூலம் முதற்பகுதியைக் கூறல் ஆகியன கதை சொல்வதற்குப் படைப்பாசிரியர் பயன்படுத்துவது எடுத்துரை உத்தியாகும்.

சோலைமலை இளவரசி என்ற புதினத்தில் குமாரலிங்கம் என்ற தேசத்தொண்டன் சோலைமலை அரண்மனைக்குள் நுழைந்தவுடன் முன்

ஜென்ம நினைவுகள் அவனுக்கு நினைவிற்கு வருவது; மாறனேந்தல் இளவரசனாக இருந்த போது நிகழ்ந்தவைகள் நினைவுக்கு வருவது என ஈரிடங்களில் நனவோடை உத்தி அமைந்துள்ளது.

## பின்னோக்கு உத்தி

கதை நிகழ்ச்சிகளைக் காலவரிசைப்படிக் கூறாமல் முன்பு நடந்த நிகழ்வுகளைப் பின்னால் கூறுகின்ற முறைக்கு பின்னோக்கு உத்தி என்று பெயர். மறைவு நனவு உள்ளத்தின் ஆழத்தில் பொதிந்து வைக்கப்பட்டிருந்த கடந்த கால நிகழ்வினை நனவு நிலைக்குக் கொண்டு வந்து நினைத்துப் பார்த்தல் பின்னோக்கு உத்தியாகும் இப்பின்னோக்கு உத்தி (1) முன்கதையைச் சுருக்கமாகக் கூறல் (2) நிகழ்கால ஊடாட்டத்தின் இடையிடையே கூறல் என்னும் நிலையில் அமையும் “இந்த விவரிப்பு பின்னோக்கு இடைவெளியின்றி ஒரே தொடர்ச்சியாக அமைவதுண்டு. நடப்புக் கதை நிகழ்ச்சியினூடே துண்டு துண்டாகவும் பெறலாம். கதையாசிரியர் கூற்றாகவோ கதை மாந்தர் கூற்றாகவோ அமையலாம்.”[116]

வானவீதியில் கதையில் தொடக்கம் சொக்கப்பன் கணவனை இழந்து இருக்கும் எழிலைச் சந்திப்பதாகத் தொடங்குகிறது. பின் அவர்கள் வாழ்வு கதையாகச் சித்திரித்துக் கூறப்பட்டுள்ளமை இவ்வுத்திக்குச் சான்றாகும்.

சர்க்காவில் “சூரியன் கிராமத்தில் மலைக் கோவிலில் விழுந்து கொண்டிருந்தான் சுந்தராஜனுக்கு ஏற்படப்போகும் விபத்தை அறிந்த அவன் கண்கள் இரத்தத்தை சிந்திக் கொண்டிருந்தன. இந்த இரத்தம் அவன் ஒளி பொருந்திய முகத்தில் எல்லாம் வழிந்தோடி வானவெளி முழுவதும் பிரதிபலித்துக் கொண்டிருந்தது.”[117] என்னும் உத்தியானது சுந்தரராஜன் விபத்தில் உயிர் இழக்கப் போகிறார் என்பதைக் குறிப்பாகச் சுட்டுகிறது.

## கடித உத்தி

புதினங்களில் கடிதங்கள் வாயிலாகக் கதை கூறுகின்ற உத்தி குறிப்பிடத்தக்கது. இவ்வுத்தி பெண், அபலையின் கண்ணீர், ஆத்மாவின் ராகங்கள், கோபுரதீபம், அலை ஓசை, வானவீதி, இருவிழிகள், மகுடபதி, நெஞ்சின் அலைகள், வளைக்கரம், இருபது வருஷங்கள், மணிக்கொடி போன்ற பல புதினங்களின் இடம்பெற்றுள்ளது. கதைமாந்தர்களின் பண்பினை வெளிப்படுத்தவும் கதையின் அடுத்த கட்டத்தை விளக்கும் விதமாகவும் இவ்வுத்தி புதினங்களில் இடம் பெற்றுள்ளது.

பெண் புதினத்தில் இரு கடிதங்கள் இடம் பெற்றுள்ளன. ஐ.சி.எஸ் பட்டம் பெற்ற சந்தானம் அப்பட்டத்தை அங்கேயே விட்டு விட்டு வருகிறேன் என்று தனது மனைவிக்கு எழுதிய கடிதத்தின் மூலம் அவர்களிடையே பிரிவு ஏற்படப்போகிறது என்பதையும், சந்தானம் தேசத் தொண்டாற்றச் செல்லவுள்ளான் என்பதையும் ஆசிரியர் கடித வழியாகச் சுட்டுகின்றார். தன் தோழி வத்சலாவிற்கு எழுதிய கடிதம் அவளது வாழ்க்கையே மாற்றுவதாய் அமைந்துள்ளது.

அலை ஓசை என்னும் புதினத்தில் கதைத்தலைவனுக்குத் தாரிணி தன்னை மறந்து விடும்படி எழுதிய கடிதம் புதினத்தின் கதைப் போக்கில் ஒரு திருப்பு முனையாக அமைந்துள்ளது.

கோபுரதீபத்தில் கதைத்தலைவன் தனது காதலி பத்மாவிற்கு எழுதும் கடிதத்தில் காதல் உணர்வையும், கல்லூரிப் படிப்பை விட்டு விட்டுத் தான் விடுதலைக்குப் பாடுபடப் போவதாகவும், தேசத்திற்காக உயிர்விடப் போவதாகவும் எழுதியிருப்பது அக்கால கல்லூரி மாணவர்கள் காதலைக் காட்டிலும் தேச விடுதலையை முக்கியமாகக் கருதியதைப் புலப்படுத்தும்.

ஆத்மாவின் ராகங்களில் சிறையில் இருக்கும் இராஜாராமனுக்கு மதுரத்திடம் இருந்து வந்த கடிதம் ‘‘பாலைவனத்தின் இடையே பயணம்

செய்யும் போது பருகக்கிடைத்த நல்ல தண்ணீர் போல இருந்தது”[117] என்பதன் மூலம் அக்காலச்சிறை வாழ்க்கையின் கொடுமைகள் மறைமுகமாகச் சுட்டப்பட்டுள்ளன.

## தொகுப்புரை

- புதிய கருத்துக்களை அல்லது பொருட்களை ஆக்கக்கூடிய சிந்தனையும் அதைச் செயல்படுத்தவல்ல ஆற்றலும் படைப்பாக்கம் ஆகும். படைப்புக்கள் சிறக்கக் கலைத்திறன்கள் உற்றதுணையாய் உள்ளன.
- ஆய்விற்கு எடுத்துக் கொண்ட முப்பத்திரண்டு புதினங்களில் படைப்பாசிரியர்கள் தமது படைப்பு சிறக்க உவமை, உருவகம், மேற்கோள்காட்டல், பழமொழி, வருணனை, கற்பனை, உத்தி போன்ற பல்வேறு கலைத்திறன்களைக் கையாண்டுள்ளனர்.
- ஆய்விற்குட்பட்ட பெரும்பாலான புதினங்களில் ஆசிரியர்கள் உவமையின்வழி கருத்தை விளக்குதல், மேற்கோள்காட்டல், பழமொழியைப் பயன்படுத்துதல் என்பன போன்ற உத்திகளைக் கையாண்டுள்ளனர்.
- இருவிழிகள், தேசபக்தன் கந்தன் ஆகிய இரு புதினங்களில் உவமைகள் அதிகம் இடம் பெற்றுள்ளன.
- உருவகம் மூன்று புதின ஆசிரியர்களால் மட்டுமே கையாளப்பட்டுள்ளது.
- படைப்பாளியின் இலக்கிய ஆர்வத்தையும், பன்னூற் பயிற்சியையும் காட்டுவதாக நூலில் மேற்கோள்கள் அமைகின்றன. ஆய்விற்கு எடுத்துக்கொண்ட புதினங்களில் பெரும்பாலானவற்றில் முன்னோர் கூற்றுகள் நேரிடையாகவும், மறைமுகமாகவும் கையாளப்பெற்றுள்ளன.
- வளைக்கரம் மற்றும் இருபது வருஷங்கள் என்னும் புதினங்களில் மகாபாரதச் செய்திகள் மேற்கோள்களாக இடம்பெற்றுள்ளன.

❖ இருவிழிகள், மண்ணில் தெரியுது வானம் ஆகிய இருபுதினங்களில் மட்டும் பல்வேறு நூல்களின் கருத்துக்கள் அதிகம் இடம்பெற்றுள்ளமை புதின ஆசிரியர்களின் புலமைத்திறத்தை விளக்குவனவாகும்.

❖ மண்ணில் தெரியுது வானம் புதினத்தில் ஆசிரியர் ஆங்கில மேற்கோள்களை அதிகம் கையாண்டுள்ளார். அவரது மேலைநாட்டிலக்கியப் பயிற்சியும் ஆங்கில மொழித்தோய்வும் இதற்குக்காரணமாகும்.

❖ விடுதலை உணர்வை ஊட்டும் புதினங்கள் ஆனதால் அது தொடர்பான கருத்துக்களைத் தெரிவிக்கப் பழமொழிகளைப் பெரும்பாலான ஆசிரியர்கள் கையாண்டுள்ளனர்.

❖ தேசபக்தன் கந்தன் என்னும் புதினம் விடுதலை பெறுவதற்கு முன் தோன்றியதாதலால் அக்கால நடைமுறைகளை விளக்கும் பழமொழிகள் இதில் அதிகம் காணப்பெறுகின்றன.

❖ கற்பனை கலைத்திறன்களில் ஒன்றாகும். விடுதலைப் போராட்டத்தை மையமிட்ட புதினங்கள் உண்மை நிகழ்வுகட்கு முக்கியத்துவம் கொடுத்துள்ளதால் இரண்டு புதினங்களில் மட்டும் கற்பனை அமைந்துள்ளது.

❖ படைப்பாளியின் படைப்பாற்றல் சிறக்க உத்திகளை அமைத்து எழுதுவர். அவ்வகையில் பெண் என்ற புதினத்தில் கடித உத்தியும், சர்க்கா என்ற புதினத்தில் தலைப்பிடும் உத்தியும், வானவீதி என்ற புதினத்தில் பின்னோக்கு உத்தியும் அமைந்துள்ளன.

❖ அணையாச்சுடர், காலவெள்ளம், என்ற இரண்டு புதினங்களும் வரலாற்று நிகழ்வுகளுக்கு முக்கியத்துவம் அளித்ததால் அவற்றில் கலைத்திறன்கள் பெரிதும் இடம்பெறவில்லை.

❖ இருவிழிகளில் விடுதலைப் போராட்ட நிகழ்வுகள் அனைத்தும் இடம் பெற்றிருப்பினும், கலைக்கூறுகள் பலவும் இடம்பெற்றுள்ளமையும் சுட்டத்தக்கது.

❖ அபலையின் கண்ணீர், மணிக்கொடி, வந்தேமாதரம் ஆகிய புதினங்களில் உவமை, பழமொழி ஆகியன மட்டும் இடம்பெற்றுள்ளன.

❖ புரட்சிப்பெண் என்ற புதினத்தில் உவமை, மேற்கோள் காட்டல் முதலிய உத்திகள் இடம்பெற்றுள்ளன.

❖ கண்திறக்குமா, மண்ணில் தெரியுது வானம் என்ற புதினங்களில் மேற்கோள்காட்டல், பழமொழி ஆகிய இரண்டும் உத்திகளாக இடம் பெற்றுள்ளன.

❖ கல்லுக்குள் ஈரம் புதினத்தில் பழமொழியும், வருணனையும் உத்திகளாக உள்ளன.

❖ விடுதலை உணர்வூட்டும் புதினங்களில் விடுதலை உணர்வோடு, புதினத்திற்குரிய கலைத்திறன்களும் அமைந்துள்ளமை சுட்டத்தக்கதாகும்.

## சான்றெண் விளக்கம்

1. கலைக்களஞ்சியம், தொகுதி-3, ப.338.
2. மு.வரதராசனார், இலக்கியத்திறன், பக்.6-7.
3. அ.ச.ஞானசம்பந்தன், இலக்கியக்கலை, ப.334.
4. கோதண்டராமன், இலக்கியமும் விமர்சனமும், ப.27.
5. தண்டி, தண்டியலங்காரம், நூ.31.
6. தமிழண்ணல், சங்க இலக்கிய ஒப்பீடு, ப.125.
7. மு.வரதராசனார், இலக்கியத்திறன், ப.194
8. அ.ச.ஞானசம்பந்தன், இலக்கியக்கலை, ப.240
9. பனையப்ப செட்டியார், மணிவாசகன், ப.160

10. கல்கி, தியாகபூமி, ப.118.

11. சாண்டில்யன், புரட்சிப்பெண், ப.10.

12. மேலது, ப.47.

13. சுத்தானந்த பாரதியார், அன்பு நிலையம் (அ) வாழும் வகை, ப.335.

14. நா.ரா.பண்டரிநாதன், மண்ணின் புதல்வர்கள், ப.21.

15. கா.சி.வேங்கடரமணி , தேசபக்தன், ப.183.

16. அகிலன், பெண், ப.32.

17. கல்கி, அபலையின் கண்ணீர், ப.171.

18. பி.எம்.ராஜகோபாலன், சர்க்கா, பக்.12,13.

19. அகிலன், இன்ப நினைவு, ப.28.

20. அகிலன், நெஞ்சின் அலைகள், ப.77.

21. கல்கி, அலை ஓசை, ப.727.

22. மேலது, ப.783.

23. நா.பார்த்தசாரதி,கோபுர தீபம், ப.20.

24. நாரணதுரைக்கண்ணன், தியாகத்தழும்பு, ப.181.

25. நா.பார்த்தசாரதி, புதுவெள்ளம், ப.42.

26. மேலது, ப.106.

27. கல்கி, சோலை மலை இளவரசி , ப.15.

28. எம்.எஸ்.கல்யாணசுந்தரம், இருபது வருஷங்கள், ப.92

29. நா.பார்த்தசாரதி, ஆத்மாவின் ராகங்கள், ப.135.

30. இராஜம்கிருஷ்ணன்,வளைக்கரம், ப.214.

31. அகிலன் எங்கேபோகிறோம், ப.21.

32. கு.ராஜவேலு,வானவீதி, ப.04.

33. கல்கி, மகுடபதி, ப.19.

34. ஜோதிர்லதாகிரிஜா, மணிக்கொடி , இரண்டாம் தொகுதி, ப.394.

35. நா.ரா.பண்டரிநாதன், வந்தேமாதரம், ப.28.

36. என்.ஏ.வேலாயுதம், இருவிழிகள், ப.117.

37. தண்டி, தண்டியலங்காரம், நூ.36.

38. மு.வரதராசனார், இலக்கியத்திறன், பக்.229-231.

39. அ.ச.ஞானசம்பந்தன், இலக்கியக்கலை, ப.254.

40. நா.ரா.பண்டரிநாதன், மண்ணின் புதல்வர்கள், ப.90.

41. பனையப்பசெட்டியார், மணிவாசகன், ப.18.

42. எம்.எஸ்.கல்யாணசுந்தரம், இருபது வருஷங்கள், ப.16.

43. அகிலன்,நெஞ்சின் அலைகள், ப.213.

44. பனையப்ப செட்டியார், மணிவாசகன், பக்.15-16

45. கல்கி,மகுடபதி, ப.11.

46. கல்கி, அலைஓசை, ப.604.

47. சுத்தானந்த பாரதியார், அன்பு நிலையம் (அ) வாழும் வகை, ப.274.

48. கல்கி, தியாகபூமி, ப.40.

49. சாண்டில்யன், புரட்சிப்பெண், ப.115.

50. கு.இராஜவேலு, வானவீதி, ப.39.

51. இராஜம்கிருஷ்ணன், வளைக்கரம், ப.728.

52. கா.சி.வேங்கடரமணி , தேசபக்தன்கந்தன், ப.222.

53. மேலது, பக்.188-189.

54. அகிலன், பெண், ப.95.

55. நா.பார்த்தசாரதி, கோபுரதீபம், ப.255.

56. நாரணதுரைக்கண்ணன், தியாகத்தழும்பு, ப.65.

57. அகிலன், புதுவெள்ளம், ப.290.

58. கல்கி, சோலைமலை இளவரசி, ப.127.

59. அகிலன், எங்கேபோகிறோம், ப.293.

60. இராஜம்கிருஷ்ணன், பாதையில் பதிந்தஅடிகள், ப.122.

61. கலைக்களஞ்சியம், பொருட்குறிப்பு அகராதி, பக்.366,367.

62. மேலது, பக்.366,367.

63. பனையப்ப செட்டியார், மணிவாசகன், ப.31.

64. கல்கி, தியாகபூமி, ப.40.

65. சுத்தானந்த பாரதியார், அன்பு நிலையம் (அ) வாழும் வகை, ப.266.

66. நா.ரா.பண்டரிநாதன், மண்ணின் புதல்வர்கள், ப.168.

67. கா.சி.வேங்கடரமணி, தேசபக்தன் கந்தன், ப.40.

68. அகிலன், பெண், ப.88.

69. கல்கி, அபலையின் கண்ணீர், ப.206.

70. பி.எம்.ராஜகோபாலன், சர்க்கா, ப.14.

71. அகிலன், இன்பநினைவு, ப.68.

72. கல்கி, அலை ஒசை, ப.227.

73. நா.பார்த்தசாரதி, கோபுரதீபம், ப.347.

74. நாரணதுரைக்கண்ணன், தியாகத்தழும்பு, ப.78.

75. கல்கி, சோலைமலை இளவரசி, ப.19.

76. எம்.எஸ்.கல்யாணசுந்தரம், இருபது வருஷங்கள், ப.140.

77. நா.பார்த்தசாரதி, ஆத்மாவின் ராகங்கள், ப.193.

78. ர.சு. நல்லபெருமாள் கல்லுக்குள் ஈரம், ப.331.

79. இராஜம்கிருஷ்ணன், வளைக்கரம், ப.320.

80. இராஜம்கிருஷ்ணன், பாதையில் பதிந்த அடிகள், ப.142.

81. கு.ராஜவேலு, வானவீதி, ப.169.

82. என்.ஏ.வேலாயுதம், இருவிழிகள், ப.36.

83. ஜோதிர்லதாகிரிஜா, மணிக்கொடி முதல் தொகுதி, ப.43.

84. பண்டரிநாதன், வந்தேமாதரம், ப.129.

85. சுப்பையா, இலக்கிய திறனாய்வு, இசங்கள், கொள்கைள், ப.214.

86. நா.பிச்சமுத்து, திறனாய்வும் தமிழ் இலக்கியக் கொள்கையும், ப.100.

87. பா.உதயகுமார், அறிஞர் அண்ணாவின் சிறுகதைத்திறன், ப.340.

88. மேலது, ப.341.

89. பனையப்ப செட்டியார், மணிவாசகன், ப.26.

90. கல்கி, தியாகபூமி, ப.218.

91. நா.ரா.பண்டரிநாதன், மண்ணின் புதல்வர்கள், ப.25.

92. அகிலன், பெண், ப.102.

93. பி.எம்.ராஜகோபாலன், சர்க்கா, ப.11.

94. கு.ராஜவேலு, வானவீதி, ப.1.

95. ர.சு.நல்லபெருமாள்,கல்லுக்குள் ஈரம், பக்.600-601.

96. இராஜம் கிருஷ்ணன், வளைக்கரம், ப.05.

97. என்.ஏ.வேலாயுதம், இருவிழிகள், பக்.27,28.

98. நா.பார்த்தசாரதி, கோபுரதீபம், ப.05.

99. எம்.எஸ்.கல்யாணசுந்தரம், இருபது வருஷங்கள், ப.05.

100. அகிலன், இன்ப நினைவு, ப.08.

101. கல்கி, அலை ஒசை, ப.61.

102. நா. பார்த்தசாரதி, ஆத்மாவின் ராகங்கள், ப.167.

103. மு.வரதராசனார், இலக்கியத்திறன், பக்.174-175.

104. அ.ச.ஞானசம்பந்தன், இலக்கியக்கலை, ப.158.

105. பா.உதயகுமார், பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரம் பாடல்கள், ப.105. ஒரு திறனாய்வு

106. அரங்க.சுப்பையா,இலக்கியத்திறனாய்வு,இசங்கள்,கொள்கைகள், ப.95.

107. நா.ரா.பண்டரிநாதன், மண்ணின் புதல்வர்கள், ப.07.

108. தொல்காப்பியம், நூ.1610.

109. வாழ்வியற்களஞ்சியம், தொகுதி-4, ப.862.

110. இராமலிங்கம், நாவல் இலக்கியம், ப.118.

111. மேலது, ப.68.

112. சண்முகவேலன், தமிழ்ப்பொழில் மலர்-3, ப.100.

113. அகிலன், புதிய விழிப்புக்கட்டுரைகள், ப.67.

114. கல்கி, தியாகபூமி, ப.160.

115. இராமலிங்கம், நாவல் இலக்கியம், ப.99.

116. நாரண.துரைக்கண்ணன், தியாகத்தழும்பு, பக்.199-200.

117. மீ.சுதா, ஆய்வுக்கோவை இரண்டாவது தொகுதி, ப.698.

118. நா.பார்த்தசாரதி, ஆத்மாவின் ராகங்கள், ப.135.

## முடிவுரை

- பத்தொன்பதாம் நூற்றாண்டில் உரைநடை பெற்ற வளர்ச்சியால் தோன்றிய ஓர் இலக்கிய வடிவம் புதினம் ஆகும். இப்புதின இலக்கியம் தாம் தோன்றிய காலச்சூழலை அடிப்படையாகக் கொண்டு வளரத் தலைப்பட்டது. இங்ஙனம் தோன்றி வளர்ந்த தமிழ்ப்புதினங்களில் கி.பி.1926 முதல் கி.பி.1997 வரை உள்ள புதினங்களில் இந்திய விடுதலைப் போராட்டம் குறித்த செய்திகள் அமைந்துள்ள புதினங்கள் ஆய்விற்கு எடுத்துக் கொள்ளப்பட்டுள்ளன. இதில் விடுதலைக்கு முன் தோன்றிய எட்டுப் புதினங்கள், விடுதலைக்குப்பின் தோன்றிய இருபத்தி நான்கு புதினங்கள் என மொத்தம் முப்பத்திரண்டு புதினங்கள் ஆராயப்பெற்றுள்ளன.
- விடுதலைப் போராட்டத்தைக் கதைக் கருவாகக் கொண்ட புதினங்கள் காந்தியடிகளின் கொள்கைகளை அடிப்படையாகக் கொண்டும், நேதாஜி சுபாஷ்சந்திரபோஸின் கொள்கைகளை அடிப்படையாகக் கொண்டும் என இரு நிலைகளில் படைக்கப்பட்டுள. அதனால் இப்புதினங்களில் மிதவாதம், தீவிரவாதம் என்னும் இரு கொள்கைகளும் வெளிப்பட்டுள்ளன.
- ஆய்விற்கு உட்பட்ட புதினங்களில் மணிவாசகன், தியாகபூமி, அன்புநிலையம் (அ) வாழும்வகை, மண்ணின் புதல்வர்கள், தேசபக்தன்கந்தன், பெண், அபலையின்கண்ணீர் சர்க்கா, இன்பநினைவு, அலைஓசை, கண்திறக்குமா, தியாகத்தழும்பு, இருபது வருஷங்கள் ஆத்மாவின்ராகங்கள், வளைக்கரம், மண்ணில் தெரியுது வானம், எங்கேபோகிறோம், இருவிழிகள், வானவீதி, மகுடபதி, பாதையில் பதிந்தஅடிகள் என்ற இருபத்தொரு புதினங்கள் காந்தீயக் கொள்கையைத் தழுவி படைக்கப்பட்டுள்ளன.
- புரட்சிப்பெண், கோபுரதீபம், சோலைமலை இளவரசி, அணையாச்சுடர், காலவெள்ளம், கல்லுக்குள்ஈரம், இரத்தம் ஒரேநிறம் என்ற ஏழுபுதினங்கள்

தீவிரவாதத்தின் வழியேதான் நாட்டை அந்நியரிடமிருந்து மீட்க முடியும் என்பதைக் கதைக் கருவாகக் கொண்டு படைக்கப்பட்டுள்ளன.

❖ புதுவெள்ளம், நெஞ்சின் அலைகள், மணிக்கொடி, வந்தேமாதரம் என்ற நான்கு புதினங்கள் மிதவாதம், தீவிரவாதம் என்ற இரண்டு கொள்கைளையும் தழுவிப் புனையப்பட்டுள்ளன.

❖ விடுதலைப் போராட்டப் புதினங்கள் ஆண்கள், பெண்கள், மாணவர்கள், சிறுவர்கள் என மக்கள் அனைவரும் சாதி, மத வேறுபாடுகளைக் கடந்து நாட்டின் விடுதலை ஒன்றையே குறிக்கோளாகக் கொண்டு போரிட்டமை குறித்துச் சிறப்பாக எடுத்துரைக்கின்றன.

❖ தமிழக விடுதலைப் போராட்டத் தலைவர்களான வ.வே.சு.ஐயர், வேங்கடகிருஷ்ணன், சிவதாணுப்பிள்ளை, இராஜாஜி, சத்தியமூர்த்தி, காமராசர், பாரதியார், வ.உ.சி, சுப்பிரமணிய சிவா, வாஞ்சிநாதன் போன்றோர் தம் விடுதலைப் போராட்டம் புதின ஆசிரியர்களால் அப்படியே புதினங்களில் எடுத்துரைக்கப் பெற்றுள்ளது.

❖ மகாத்மாகாந்தி, ஜவகர்லால்நேரு, பாலகங்காதரத்திலகர், நேதாஜிசுபாஷ் சந்திரபோஸ், ஜெயப்பிரகாஷ் நாராயணன், அபுல்கலாம் ஆசாத், லாலாலஜபதிராய், வல்லபாய்படேல், கோபாலகிருஷ்ணகோகலே, தாந்தியா தோபே, பகத்சிங், மங்கள்தேஷ்பாண்டே போன்றோர் வடநாட்டைச் சார்ந்த விடுதலைப் போராட்டத் தலைவர்கள் ஆவர். இத்தலைவர்களும் அவர்தம் விடுதலைப் போராட்டச் செயல்களும் புதினங்களில் இடம்பெற்றுள்ளமை சுட்டத்தக்கது.

❖ இந்திய விடுதலைப் போராட்டத்தை மையமாகக் கொண்டு புதினம் எழுதிய ஆசிரியர்கள் கல்கி, சாண்டில்யன், சுத்தானந்தபாரதியார், கு.ராஜவேலு, எம்.எஸ்.கல்யாணசுந்தரம் ஆகியயோர் புதினம் எழுதியதோடு

மட்டுமன்றி விடுதலைப் போராட்ட வீரர்களாகவும் விளங்கியமை குறிப்பிடத்தக்கது.

❖ விடுதலைப் போரின் தொடக்கமாகிய வேலூர்க்கலகம் முதல் இறுதிப் போராட்டமாகிய வெள்ளையனே வெளியேறு வரை நடந்த விடுதலைப் போராட்ட நிகழ்வுகள் கால அடிப்படையில் விளக்கப்பட்டுள்ளன.

❖ ஒரே புதினத்தில் எல்லா நிகழ்வுகளும் சுட்டப்பெறவில்லை எனினும் ஒரு சில நிகழ்வுகள் மட்டும் இடம்பெற்ற புதினங்களும் ஆய்வுக்கு எடுத்துக்கொள்ளப்பட்டன.

❖ கல்கியின் அலை ஓசை, நா.பார்த்தசாரதியின் ஆத்மாவின் ராகங்கள், ஜோதிர்லதாகிரிஜாவின் மணிக்கொடி, என்.ஏ.வேலாயுதத்தின் இருவிழிகள் போன்ற நான்கு புதினங்களில் விடுதலைப் போராட்டம் தொடங்கியது முதல் இந்தியா விடுதலை பெறுவது வரை உள்ள அனைத்துச் செய்திகளும் இடம் பெற்றுள்ளமை சுட்டத்தக்கது. விடுதலைப் போராட்ட நிகழ்வுகளை கூறுவதற்காவே இப்புதினங்கள் எழுதப்பட்டது போல் காட்சியளிக்கின்றன.

❖ விடுதலைப் போராட்ட நிகழ்வுகளில் முதலாவதாகச் சுட்டப்படும் வேலூர்க் கலகம் மணிக்கொடி என்ற ஒரு புதினத்தில் மட்டும் இடம் பெற்றுள்ளது வடமாநிலங்களில் பெருமளவு நிகழ்ந்த சிப்பாய்க்கலக நிகழ்வு அணையாச்சுடர், இரத்தம்ஒரேநிறம், வந்தேமாதரம் ஆகிய மூன்று புதினங்களில் இடம்பெற்றுள்ளன.

❖ அந்நியத் துணி எரிப்புப் போராட்டம் என்ற நிகழ்வு தியாகத்தழும்பு, இருவிழிகள் என்ற இரு புதினங்களில் இடம்பெற்றுள்ளமை குறிப்பிடத்தக்கது.

❖ கதர் இயக்கம் பற்றிய செய்திகள் மணிவாசகன், தியாகபூமி, அன்புநிலையம் (அ) வாழும் வகை, தேசபக்தன் கந்தன், சர்க்கா, ஆத்மாவின் ராகங்கள்,

மண்ணில் தெரியுது வானம், பாதையில் பதிந்த அடிகள் என்பன போன்ற எட்டுப்புதினங்களில் சுட்டப்பட்டுள்ளன.

❖ ரௌலட் சட்ட எதிர்ப்பு மற்றும் ஜாலியன் வாலாபாக் படுகொலை என்ற நிகழ்வுகள் கண்திறக்குமா, மணிக்கொடி, இருவிழிகள், என்ற மூன்று புதினங்களில் உரைக்கப் பெற்றுள்ளன.

❖ ஒத்துழையாமை இயக்கம் குறித்த நிகழ்வுகள் தேசபக்தன் கந்தன், பெண், சர்க்கா, இருபது வருஷங்கள், பாதையில் பதிந்த அடிகள், இருவிழிகள் என்ற ஆறு புதினங்களில் சுட்டப்பட்டுள்ளன.

❖ சட்டமறுப்பு இயக்கம் குறித்த நிகழ்வுகள் மணிக்கொடி, இருவிழிகள் என்ற இருபுதினங்களில் பேசப்பெற்றுள்ளன.

❖ உப்பு சத்தியாக்கிரகம் என்ற நிகழ்வு சர்க்கா, கண்திறக்குமா, தியாகத்தழும்பு, ஆத்மாவின் ராகங்கள், வானவீதி, மணிக்கொடி, இருவிழிகள் என்ற ஏழு புதினங்களில் சுட்டப்பட்டுள்ளன.

❖ கள்ளுக்கடை மறியல் மதுவிலக்கு போன்ற நிகழ்வுகள் தியாகபூமி, அன்பு நிலையம் (அ) வாழும் வகை, தேசபக்தன் கந்தன், பெண், இருபது வருஷங்கள், தியாகத்தழும்பு, ஆத்மாவின் ராகங்கள், கல்லுக்குள் ஈரம், மண்ணில் தெரியுது வானம், பாதையில் பதிந்த அடிகள், மகுடபதி, மணிக்கொடி, இருவிழிகள் என்பன போன்ற பதின்மூன்று புதினங்களில் இடம்பெற்றுள்ளன.

❖ தனிநபர் சத்தியாக்கிரகம் என்ற நிகழ்வு தியாகபூமி, தியாகத்தழும்பு, ஆத்மாவின் ராகங்கள், வானவீதி, மணிக்கொடி, இருவிழிகள் போன்ற ஆறு புதினங்களில் சுட்டப்பட்டுள்ளன.

❖ வெள்ளையனே வெளியேறு அல்லது ஆகஸ்ட் புரட்சி என்ற நிகழ்வு மண்ணின் புதல்வர்கள், நெஞ்சின் அலைகள், அலை ஓசை, தியாகத்தழும்பு,

புதுவெள்ளம், சோலைமலை இளவரசி, ஆத்மாவின் ராகங்கள், கல்லுக்குள் ஈரம், வானவீதி, மணிக்கொடி, இருவிழிகள் என்ற பதினொரு புதினங்களில் இடம்பெற்றுள்ளன.

❖ மணிவாசகன் என்ற புதினத்தில் கதர் இயக்கம் பற்றிய நிகழ்வு மட்டுமே இடம்பெற்றுள்ளது. இப்புதினம் தோன்றிய காலத்தில் கதர் இயக்கப்போராட்டம் பெருமளவு நடைபெற்றமை இதற்குக் காரணமாகக் கருத இடமுண்டு.

❖ பெண், இருபது வருஷங்கள் என்ற புதினங்களில் ஒத்துழையாமை இயக்க நிகழ்வுகளும் அணையாச்சுடர், இரத்தம்ஒரேநிறம் ஆகிய புதினங்களில் சிப்பாய்க்கலகமும் இடம்பெற்றுள்ளன.

❖ மண்ணின் புதல்வர்கள், நெஞ்சின் அலைகள், புதுவெள்ளம், சோலைமலை இளவரசி என்ற நான்கு புதினங்களில் வெள்ளையனே வெளியேறு இயக்க நிகழ்வுகள் உரைக்கப் பெற்றுள.

❖ கள்ளுக்கடை மறியல் என்ற விடுதலைப் போராட்ட நிகழ்வு பதின்மூன்று புதினங்களில் சுட்டப்படுள்ளது. இந்நிகழ்வை மட்டுமே களனாகக் கொண்டு மகுடபதி புதினம் படைக்கப்பட்டுள்ளது. கள் மக்களின் வாழ்வை நேரடியாகப் பாதித்ததால் மக்களை நேரடியாகப் பாதிக்கும் காரணிகளுக்கு படைப்பாளர்கள் முக்கியத்துவம் கொடுத்துள்ளமை புலனாகும்.

❖ தியாகபூமி, மதுவிலக்கு, கதர் அணிதல், அந்நியத்துணி மறுப்பு பற்றிய நிகழ்வுகளைக் குறிப்பிடுறது. அன்பு நிலையம் (அ) வாழும் வகை என்ற புதினம் மதுவிலக்கு, கதராடை அணிதல், அந்நியத்துணி மறுப்பு, சுதேசி இயக்கம் பற்றிச் சுட்டுகிறது. புரட்சிப் பெண்ணில் உப்பு சத்தியாக்கிரகம் பற்றிய நிகழ்வு இடம்பெற்றுள்ளது. மண்ணின் புதல்வர்கள், வெள்ளையனே வெளியேறு போராட்டம் நடைபெற்ற காலத்தில் எழுதப்பட்டதால் அந்நிகழ்வை விரிவாக எடுத்துரைக்கிறது. தேசபக்தன் கந்தன் ஒத்துழையாமை இயக்கம்

நாடு முழுவதும் நடந்த காலத்தில் தோன்றியதால் அவ்வியக்கம் பற்றி விரிவாக உரைக்கிறது. பெண் என்ற புதினம் சட்ட மறுப்பு இயக்கம், ஒத்துழையாமை இயக்கம் பற்றிய கருத்துகளைச் சுட்டியுள்ளது.

❖ ஆய்விற்கு எடுத்துக் கொண்டுள்ள 32 புதினங்களில் 109 விடுதலை உணர்வூட்டும் பாத்திரங்கள் இடம் பெற்றுள்ளனர். இதில் ஆண் பாத்திரங்கள் எழுபத்துமூவர் பெண் பாத்திரங்கள் இருபத்தொன்பது பேர் ஆவர்.

❖ ஆண் பாத்திரங்களில் முப்பத்துநான்கு பேர் முதன்மைப் பாத்திரங்களாகவும், நாற்பத்தொன்பது பேர் துணைமைப்பாத்திரங்களாகவும் உள்ளனர்.

❖ பெண் பாத்திரங்களில் ஜெயலெட்சுமி, திரிவேணி, மணி ஆகிய மூவரும் முதன்மைப் பாத்திரங்களாகவும், சாவித்திரி, சாருமதி, சுலோசனா முதலிய இருபத்து மூவர் துணைமைப்பாத்திரங்களாகவும் உள்ளனர்.

❖ புரட்சிப் பெண், கல்லுக்குள் ஈரம், பாதையில் பதிந்த அடிகள் என்ற மூன்று புதினங்களும் பெண்களை முதன்மைப் பாத்திரங்களாகக் கொண்டு அமைந்தவையாகும்.

❖ பெண் பாத்திரங்கள் விடுதலை உணர்வூட்டும் துணைமைப் பாத்திரங்களாக உள்ளவை தியாகபூமி, மண்ணின் புதல்வர்கள், தேசபக்தன் கந்தன், பெண், சர்க்கா, அலை ஓசை, தியாகத் தழும்பு, அணையாச் சுடர், சோலை மலை இளவரசி, இருபது வருஷங்கள், ஆத்மாவின் இராகங்கள், வளைக்கரம், மணிக்கொடி, மண்ணில் தெரியுது வானம், இரு விழிகள், வானவீதி, வந்தேமாதரம் என்ற பதினெழு புதினங்கள் ஆகும்.

❖ ஆண்கள் மட்டுமே விடுதலை உணர்வூட்டும் பாத்திரங்களாக உள்ள புதினங்கள் மணிவாசகன், அன்பு நிலையம் அல்லது வாழும் வகை, அபலையின் கண்ணீர், இன்ப நினைவு, நெஞ்சின் அலைகள், கண் திறக்குமா,

கோபுர தீபம், புதுவெள்ளம், சோலைமலை இளவரசி, இருபது வருஷங்கள், கால வெள்ளம், எங்கே போகிறோம், மகுடபதி என்பனவாகும்.

- ❖ தேசபக்தன் கந்தன் என்ற புதினத்தில் காங்கிரஸ் கட்சியையும், விடுதலைப் போராட்டத்தையும் எதிர்த்துக் கூறும் சொக்கலிங்கம் என்னும் துணைமைப்பாத்திரம், புதினத்தின் இறுதியில் ஒத்துழையாமை இயக்கப் போரில் பங்கு பெறுவது குறிப்பிடத்தக்கது.
- ❖ சோலைமலை இளவரசியில் பொன்னம்மாவின் தந்தையாகிய மணியக்காரர் விடுதலைப் போராட்டத்தை வெறுத்தவர் பின் மனம் மாறி விடுதலைப் போராட்ட வீரரை ஆதரிப்பவராகக் காட்டப்பெறுகிறார்.
- ❖ காலவெள்ளம் புதினத்தில் கோபாலன் என்னும் பாத்திரம் முதலில் தீவிரவாதத்தைப் பின்பற்றுகிறது. பின் காந்திய வழியே சிறந்தது என்பதை உணர்ந்து காந்திய வழிக்கு மாறும் பாத்திரமாகப் படைக்கப்பட்டுள்ளது.
- ❖ மணிக்கொடியில் நரேந்திரநாத் பானர்ஜி, கங்காதரன் ஆகிய இருவரும் தொடக்கத்தில் தீவிரவாதத்தைப் பின்பற்றியவர்கள் இறுதியில் மிதவாதத்தை ஏற்கின்றனர்.
- ❖ நாட்டின் மீது கொண்ட பற்றினால் திருமணத்தையே மறுத்து விடுதலைப் போராட்டத்தையே தன் வாழ்வாக ஆக்கிக்கொண்ட பாத்திரமாக சர்க்காவின் முதன்மைப் பாத்திரமான இராமமூர்த்தி விளங்குகிறான். இன்ப நினைவின் முதன்மைப்பாத்திரமான இராமநாதன் திருமணத்தை மறுத்து விடுதலைப் போராட்டத்தில் தம்மை முழுமையாக இணைத்துக் கொண்டமை குறிப்பிடத்தக்கது. ஆத்மாவின் ராகங்களில் இராஜாராமன், மதுரம் என்னும் இரு பாத்திரங்களும் நாட்டின் விடுதலைக்காகத் தமது திருமணத்தையே விடுதலைக்குப் பின் என்று தள்ளிவைத்துப் போராடும் பாத்திரங்களாகப் படைக்கப்பெற்றுள்ளனர்.

- விடுதலைப் போராட்டத்திற்காக கல்வியைத் துறந்த பாத்திரங்களாக கோபுரதீபத்தில் சுந்தரம் என்ற பாத்திரமும், இருவிழிகள் புதினத்தில் சிவஞானம் என்ற பாத்திரமும், அமைக்கப்பட்டுள்ளமை சுட்டத்தக்கது. ஒத்துழையாமை இயக்கக் கொள்கையைப் பின்பற்றிப் பட்டம், பதவியைத் துறந்த பாத்திரமாகப் பெண் என்ற புதினத்தின் முதன்மைப் பாத்திரமாகிய சந்தானமும், தேசபக்தன் கந்தன் என்ற புதினத்தில் இரங்கன் என்ற பாத்திரமும் அமைந்துள்ளமை சுட்டத்தக்கது.
- புதிய கருத்துக்களை அல்லது பொருட்களை ஆக்கக்கூடிய சிந்தனையும் அதைச் செயல்படுத்தவல்ல ஆற்றலும் படைப்பாக்கம் ஆகும். படைப்புக்கள் சிறக்கக் கலைத்திறன்கள் உற்றதுணையாய் உள்ளன.
- ஆய்விற்கு எடுத்துக் கொண்ட முப்பத்திரண்டு புதினங்களில் படைப்பாசிரியர்கள் தமது படைப்பு சிறக்க உவமை, உருவகம், மேற்கோள்காட்டல், பழமொழி, வருணனை, கற்பனை, உத்தி போன்ற பல்வேறு கலைத்திறன்களைக் கையாண்டுள்ளனர்.
- ஆய்விற்குட்பட்ட பெரும்பாலான புதினங்களில் ஆசிரியர்கள் உவமையின்வழி கருத்தை விளக்குதல், மேற்கோள்காட்டல், பழமொழியைப் பயன்படுத்துதல் என்பன போன்ற உத்திகளைக் கையாண்டுள்ளனர்.
- இருவிழிகள், தேசபக்தன் கந்தன் ஆகிய இரு புதினங்களில் உவமைகள் அதிகம் இடம் பெற்றுள்ளன.
- உருவகம் மூன்று புதின ஆசிரியர்களால் மட்டுமே கையாளப்பட்டுள்ளது.
- படைப்பாளியின் இலக்கிய ஆர்வத்தையும், பன்னூற் பயிற்சியையும் காட்டுவதாக நூலில் மேற்கோள்கள் அமைகின்றன. ஆய்விற்கு எடுத்துக்கொண்ட புதினங்களில் பெரும்பாலானவற்றில் முன்னோர் கூற்றுகள் நேரிடையாகவும், மறைமுகமாகவும் கையாளப்பெற்றுள்ளன.

❖ வளைக்கரம் மற்றும் இருபது வருஷங்கள் என்னும் புதினங்களில் அருச்சுனன் மனம் கலங்கி இருக்கும்போது இருத்தல், சக்கரவியூகத்தில் பிரவேசிக்கும் அபிமன்யூ குறித்த செய்திகள் மகாபாரதச் செய்திகளாக இடம்பெற்றுள்ளன.

❖ இருவிழிகள், மண்ணில் தெரியுது வானம் ஆகிய இருபுதினங்களில் மட்டும் பல்வேறு நூல்களின் கருத்துக்கள் அதிகம் இடம்பெற்றுள்ளமை புதின ஆசிரியர்களின் புலமைத்திறத்தை விளக்குவனவாகும்.

❖ மண்ணில் தெரியுது வானம் புதினத்தில் ஆங்கில மேற்கோள்கள் அதிகம் கையாளப்பட்டுள்ளன.

❖ விடுதலை உணர்வை ஊட்டும் புதினங்கள் ஆனதால் அது தொடர்பான கருத்துக்களைத் தெரிவிக்க, பழமொழிகளைப் பெரும்பாலான ஆசிரியர்கள் கையாண்டுள்ளனர்.

❖ தேசபக்தன் கந்தன் என்னும் புதினம் விடுதலை பெறுவதற்கு முன் தோன்றியதாதலால் அக்கால நடைமுறைகளை விளக்கும் பழமொழிகள் இதில் அதிகம் காணப்பெறுகின்றன.

❖ வருணனை உத்தியில் இயற்கைவருணனை, இடவருணனை, தோற்றவருணனை ஆகியவை புதின ஆசிரியர்களால் சிறப்பாகக் கையாளப்பெற்றுள்ளன.

❖ கற்பனை கலைத்திறன்களில் ஒன்றாகும். விடுதலைப் போராட்டத்தை மையமிட்ட புதினங்கள் உண்மை நிகழ்வுகட்கு முக்கியத்துவம் கொடுத்துள்ளதால் இரண்டு புதினங்களில் மட்டும் கற்பனை அமைந்துள்ளது.

❖ படைப்பாளியின் படைப்பாற்றல் சிறக்க பல்வேறு உத்திகளை அமைத்து எழுதுவர். அவ்வகையில் பெண் என்ற புதினத்தில் கடித உத்தி, சர்க்கா

என்ற புதினத்தில் தலைப்பிடும் உத்தி, வானவீதி என்ற புதினத்தில் பின்னோக்கு உத்தி போன்றவை அமைந்துள்ளன.

❖ அணையாச்சுடர், காலவெள்ளம், என்ற இரண்டு புதினங்களும் வரலாற்று நிகழ்வுகளுக்கு முக்கியத்துவம் அளித்ததால் அவற்றில் கலைத்திறன்கள் பெரிதும் இடம்பெறவில்லை.

❖ இருவிழிகளில் விடுதலைப் போராட்ட நிகழ்வுகள் அனைத்தும் இடம் பெற்றிருப்பினும், கலைக்கூறுகள் பலவும் இடம்பெற்றுள்ளமையும் சுட்டத்தக்கது.

❖ அபலையின் கண்ணீர், மணிக்கொடி, வந்தேமாதரம் ஆகிய புதினங்களில் உவமை, பழமொழி ஆகியன மட்டும் இடம்பெற்றுள்ளன.

❖ புரட்சிப்பெண் என்ற புதினத்தில் உவமை, மேற்கோள் காட்டல் முதலிய உத்திகள் இடம்பெற்றுள்ளன.

❖ கண்திறக்குமா, மண்ணில் தெரியுது வானம் என்ற புதினங்களில் மேற்கோள்காட்டல், பழமொழி ஆகிய இரண்டும் உத்திகளாக இடம் பெற்றுள்ளன.

❖ கல்லுக்குள் ஈரம் புதினத்தில் பழமொழியும், வருணனையும் உத்திகளாகப் பயன்படுத்தப்பெற்றுள்ளன.

❖ விடுதலை உணர்வூட்டும் புதினங்களில் விடுதலை உணர்வோடு, புதினத்திற்குரிய பல்வேறு கலைத்திறன்களும் அமைந்துள்ளமை சுட்டத்தக்கதாகும்.

❖ அக்காலகட்டத்தில் விடுதலைப் போராட்டத்தை விளக்கும் வகையில் வெளிவந்த சர்க்கா, தீனபந்து, விடிவெள்ளி, இந்து, சுதேசமித்திரன், மெட்ராஸ் டைம்ஸ் போன்ற பத்திரிகைகள் குறித்தும் புதினங்கள் எடுத்துரைக்கின்றன.

இதன் வழி அக்காலத்தில் வெளிவந்த பத்திரிகைகளும் விடுதலைப் போராட்டத்தில் பங்குபெற்றுள்ளமையை அறிய முடிகிறது.

❖ மக்கள் அரசியல் விடுதலையுடன் சமூக விடுதலையையும் முன்னெடுத்ததை சேரி மக்களைக் கோயிலுக்கு அழைத்துச் சென்று வழிப்படச் செய்தமையை சர்க்கா என்னும் புதினம் எடுத்துரைக்கின்றது.

❖ மக்கள் இந்து, முஸ்லீம் என்னும் வேறுபாடின்றி விடுதலைப் போராட்டத்தில் இணைந்து பங்கு பெற்றமையை இருவிழிகள் என்னும் புதினம் சுட்டுகிறது.

# துணை நூற்பட்டியல்

## முதன்மைச் சான்றாதாரங்கள்


1. அகிலன் : பெண்,
தாகம்,
சென்னை.
மு.ப. 1947.
11-ஆம் பதிப்பு -2001.

2. மேலது. : இன்பநினைவு,
தாகம்,
சென்னை.
மு.ப. 1949.
பன்னிரெண்டாம் பதிப்பு -1995.

3. மேலது. : நெஞ்சின் அலைகள்,
தாகம்,
சென்னை.
மு.ப. 1953.
எட்டாம் பதிப்பு -1980.

4. மேலது. : புதுவெள்ளம்,
தாகம்,
சென்னை.
மு .ப. 1964.
ஒன்பதாம் பதிப்பு 2004.

5. மேலது. எங்கே போகிறோம்,
தாகம்,
சென்னை.
மு.ப. 1973.
ஒன்பதாம் பதிப்பு -1997.

6. இந்திராபார்த்தசாரதி. காலவெள்ளம்,
அருந்ததி நிலையம்,
சென்னை.
மு.ப. 1968.
மூன்றாம் பதிப்பு -2000.

7. கல்கி. : தியாகபூமி,
வானதி பதிப்பகம்,
சென்னை.
மு.ப. 1939.
ஏழாம் பதிப்பு -2003.

8. மேலது. : அபலையின் கண்ணீர்,
பாரதி பதிப்பகம்,
சென்னை.
மு.ப. 1947.
திருந்திய பதிப்பு -1966.

9. மேலது. : அலை ஓசை,
சாரதா பதிப்பகம்,
சென்னை.
மு.ப. 1953.
திருந்தியபதிப்பு -2000.

10. மேலது. : சோலைமலை இளவரசி,
மணிவாசகர் பதிப்பகம்,
சென்னை.
மு.ப. 1965.
திருந்திய பதிப்பு -2001.

11. மேலது. : மகுடபதி,
வானதி பதிப்பகம்,
சென்னை.
மு .ப. 1979.
ஐந்தாம் பதிப்பு -2000.

12. கல்யாணசுந்தரம் எம்.எஸ். : இருபது வருஷங்கள்,
தமிழ்ப் புத்தகாலயம்,
சென்னை.
மு.ப. 1965.

13. சாண்டில்யன். : புரட்சிப் பெண்,
வானதி பதிப்பகம்,
சென்னை.
மு.ப. 1939.
எட்டாம் பதிப்பு -1998.

14. சிதம்பர சுப்பிரமணியன் ந. : மண்ணில் தெரியுது வானம்,
வாசகர் வட்டம்,
சென்னை.
மு.ப 1969.

15. சுத்தானந்தபாரதியார் சுவாமி: அன்பு நிலையம் (அ) வாழும் வகை,
அன்பு நிலையம்,
திருச்சி.
மு.ப. 1941.

16. சுஜாதா : இரத்தம் ஒரே நிறம்,
ஊயிர்மைப் பதிப்பகம்,
சென்னை.
மு.ப. 1983.
நான்காம் பதிப்பு-2005.

17. துரைக்கண்ணன் நாரண : தியாகத்தழும்பு,
அருணோதயம்,
சென்னை.
மு.ப. 1962.

18. நல்லபெருமாள் ர.சு. : கல்லுக்குள் ஈரம்,
வானதி பதிப்பகம்,
சென்னை.
மு.ப. 1969.
ஐந்தாம் பதிப்பு -2005.

19. பண்டரிநாதன் ந.ரா. : மண்ணின் புதல்வர்கள்,
வித்யா பதிப்பகம்,
சென்னை.
மு.ப. 1942.

20. மேலது : வந்தே மாதரம்,
மணிமேகலைப் பிரசுரம்,
சென்னை.
மு.ப. 1997.

21. பனையப்ப செட்டியார். : மணிவாசகன்,
பி.ஆர். இராமஅய்யர் அண்ட் கம்பெனி,
சென்னை.
மு.ப. 1926.
இரண்டாம் பதிப்பு -1928.

22. பார்த்தசாரதி நா. : கோபுரதீபம்,
தமிழ்ப் புத்தகாலயம்,
சென்னை.
மு.ப. 1959.
1974.

23. மேலது : ஆத்மாவின் இராகங்கள்,
தமிழ்ப் புத்தகாலயம்,
சென்னை.
மு.ப. 1969.
பதினான்காம் பதிப்பு -2005,

24. இராஜம்கிருஷ்ணன். : வளைக்கரம்,
தமிழ் எழுத்தாளர் கூட்டுறவுச்சங்கம்,
சென்னை.
மு.ப. 1969.

25. மேலது : பாதையில் பதிந்த அடிகள்,
தாகம்,
சென்னை.
மு.ப. 1991.
இரண்டாம் பதிப்பு -2000.

26. இராஜகோபாலன் பி.எம். : சர்க்கா,
கலைமகள் காரியாலயம்,
சென்னை.
மு.ப. 1948.

27. ராஜவேலு கு. : வானவீதி,
பாரிநிலையம்,
சென்னை.
மு.ப. 1977.

28. விந்தன் : கண் திறக்குமா,
அருந்ததி நிலையம்,
சென்னை.
மு.ப. 1956.
நான்காம் பதிப்பு-2000,

29. வெங்கட்ராமன் எம்.பி. : அணையாச்சுடர்,
வைரம் பதிப்பகம்,
சென்னை.
மு.ப. 1967.

30. வெங்கடரமணி கா.சி. : தேசபக்தன் கந்தன்,
அல்லையன்ஸ் கம்பெனி,
சென்னை.
மு.ப. 1942.
திருந்திய பதிப்பு -1986,

31. வேலாயுதம் என்.ஏ. : இருவிழிகள்,
அன்புநிலையம், நாகர் கோவில்.
மு.ப. 1974.
நான்காம் பதிப்பு -1999,

32. ஜோதிர்லதாகிரிஜா : மணிக்கொடி, பாரிநிலையம், சென்னை
1995

**துணைமைச்சான்றாதாரங்கள்**

## திறனாய்வு நூல்கள்


1.அகத்தியலிங்கம் சு.பொ. :விடுதலைத் தழும்புகள், இந்திய சுதந்திர வரலாறு, தமிழ்ப் புத்தகாலயம், சென்னை. மு.ப. 1998.

2. அப்பாத்துரை கா. :இந்திய மக்கள் விடுதலை வரலாறு, பூம்புகார் பதிப்பகம், சென்னை. மு.ப. 2003.

3. அறிவுஒளி நா. :நாரண துரைக்கண்ணன் வரலாறு, சென்னை. மு.ப. 2006.

4. இராமலிங்கம் ம. :நாவல் இலக்கியம், நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை. மு.ப. 1999.

5. உதயகுமார் பா :பட்டுக்கோட்டை கல்யாண சுந்தரம் பாடல்கள் ஒரு திறனாய்வு, கலைச்செல்வி பதிப்பகம், சென்னை. 1978.

6. உதயகுமார் பா. :அறிஞர் அண்ணாவின் சிறுகதைத் திறன், ஐந்திணைப் பதிப்பகம், சென்னை. 1989.

7. கோதண்டராமன் ப. :இலக்கியமும் விமர்சனமும், மணிவாசகர் நூலகம், சிதம்பரம். மு.ப. 1962.

8. சிவஞானம் ம.பொ. :விடுதலைப்போரில் தமிழகம்
எல்.கே.எம்.பப்ளிகேஷன்ஸ்,
சென்னை.
மு.ப. 2006.

9. சுப்பையா அரங்க. :இலக்கியத்திறனாய்வு
இசங்கள்கொள்கைகள்,
பாவை பப்ளிகேஷன்ஸ்,
சென்னை.
ஐந்தாம் பதிப்பு 2007.

10.ஞானசம்பந்தன் அ.ச. :இலக்கியக் கலை,
தென்னிந்திய சைவ சித்தாந்தா
நூற்பதிப்புக் கழகம்,சென்னை.
விரிவாக்கப்பட்ட மு.ப. 1989.

11. தங்கையா :நம்நாட்டின் விடுதலைப்போர்,
தென்னிந்திய ஆசிரியர்பதிப்பகத்தார்
பிரசுரம்,
1970.

12. தமிழண்ணல் :சங்க இலக்கிய ஒப்பீடு,
மீனாட்சிபுத்தக நிலையம்,
மதுரை. 1974.

13. தேவ்நாத் சி.எஸ் :நம் தேசத்தின் கதை,
இந்தியாவின் எழுச்சியும் வீழ்ச்சியும்,
நர்மதா பதிப்பகம், சென்னை.
மு.ப. 2010.

14. பிச்சமுத்து நா. :திறனாய்வும்இலக்கியக் கொள்கையும்,
சக்தி வெளியீடு, சென்னை
மு.ப. 1983.

15. லெட்சுமி ஜெ.ஆர். :அகிலன்,ர.சு.நல்லபெருமாள் புதினங்களில் காந்தியதாக்கம், மோனிகா பதிப்பகம், சென்னை. மு.ப. 1999.

16. வரதராஜன் மு. :இலக்கியத்திறன், பாரி நிலையம் சென்னை. மு.ப. 1959.

17. வசந்தா என். குழுவினர் :சமூகவியல் பத்தாம்வகுப்பு, தமிழ்நாட்டுப் பாடநூல் கழகம், சென்னை. திருந்திய பதிப்பு 2013.

18. வெங்கடேசன் க. சந்திரபிரபு பி.எஸ். :இந்திய போராட்ட வரலாறு, வி.சி.பப்ளிகேஷன்ஸ், இராஜபாளையம். புதியபதிப்பு 2004.

**இலக்கணம்**

**1.** தண்டி :தண்டியலங்காரம், திருநெல்வேலி சைவ சித்தாந்த நூற் பதிப்புக்கழகம், சென்னை. பதினைந்தாம் பதிப்பு, 1989.

2. தொல்காப்பியர் :தொல்காப்பியம், ச.வே.சுப்பிரமணியன் தெளிவுரை, மணிவாசகர் பதிப்பகம், சென்னை. மு.ப. 1993.

**ஆய்வுக் கோவை**

1. சுதா மீ. :நவீன சிறுகதைகளில் பின்னோக்கு உத்தி, இ.ப.த.ம. ஆய்வுக்கோவை, இரண்டாம் தொகுதி.

**கட்டுரை**

1.அகிலன் :புதிய விழிப்புக் கட்டுரைகள், திருவல்லிக்கேணி, சென்னை. மூன்றாம் பதிப்பு. 1992.

**மலர்**

1.சண்முகவேலன் :தமிழ்ப்பொழில், மலர் 3, 1986.

**களஞ்சியங்கள்**

1.கலைக்களஞ்சியம் :தொகுதி 3, தமிழ் வளர்ச்சிக் கழகம், சென்னை. மு.ப. 1956.

2. கலைக்களஞ்சியம் :பொருட்குறிப்பு அகராதி, தமிழ் வளர்ச்சிக் கழகம், சென்னை.

3.வாழ்வியற்களஞ்சியம் :தொகுதி 4, தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர். மு.ப. 1991.

4. மேலது :தொகுதி 6, தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர். மு.ப. 199

## ஆங்கில நூல்கள்

**1.**Alan swinge wood : The novel and Revolution,
The macmillan Press Ltd,
London.
1975.

2. Michel zeraffa :Fictions the novel and social reality,
penguion Books,
England.
Middle sex ,
1976.

3.Srinivasa moorthy A.P. :History of Indian freedom movement
1857-1947,
S-Chand & Company Pvt. Ltd.
New Delhi.
First Edition 1987.

4.Walter Allan E.P. :Reading a novel
penguion Books,
Great britan.
1970.

5.Maran E.L.Poldhu :The readers digest great
Encyclopaedia
Dictionary volum III
2nd edition,
1979.

6.Encyclopaedia Encyclopaedia of the Indian
Biography, Volum III –E to H,
Aph Publishing Corporation,
New Delhi.
2000.